ப்ரபோத ஸுதாகரம்

"ஸ்ரீ சங்கர க்ருபா அநுபந்தம்"

21-5

அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி வெளியீடு.

॥ श्रीः ॥

# श्रीजगद्गुरुग्रन्थमाला-१०









# ஸ்ரீ ஜகத்குரு க்ரந்தமாலா

10

அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி வெளியீடு

॥ श्रीः ॥



“एषा शंकरभारती विजयते निर्वाणसौख्यप्रदा”

# श्रीजगद्गुरुग्रन्थमाला–१०

## (प्रबोधसुधाकरः)



# ஸ்ரீ ஜகத்குரு க்ரந்தமாலா-10

## (ப்ரபோதஸுதாகரம்)

ஸ்ரீ வாணீ விலாஸ் பிரஸ்
ஸ்ரீரங்கம்

1963



॥ श्रीगुरुभ्यो नमः ॥

## ॥ समर्पणम् ॥

श्रीमच्छंकरदेशिकस्य महिता मूर्तिद्वयी या स्थिता
तत्रैका हि तिरोबभूव विजने केदारनाथस्थले ।
अन्या वर्णमयी तु भाष्यनिचयस्तोत्रप्रबन्धात्मना
सर्वत्रैव समुज्ज्वला विजयते ताभ्यां तनुभ्यां नमः ॥ १ ॥

यस्तत्रास्ति लघुप्रबन्धनिचयः स्तोत्राणि भूयांसि वा
तेषां द्राविडभाषयाऽनुवदनं विद्वद्वरैः कारितम् ।
श्रीमच्छंकरसेविनी सुसमितिः सम्यक्प्रकाश्याधुना
विद्यातीर्थपदे समर्पयति तत् लोकोपकारक्षमम् ॥ २ ॥

शंकरगुरुसंस्थापितसर्वजगद्वन्द्यशारदापीठम् ।
शंकरसेवासमितिः प्रकरणमालार्पणादलंकुरुते ॥ ३ ॥

शंकरगुरुवररचितप्रकरणमालां शुभानुवादयुताम् ।
शंकरपरंपरागतविद्यातीर्थे समार्पिपत्समितिः ॥ ४ ॥

शंकरसेवारसिकाः शांकरसिद्धान्तसारसर्वस्वम् ।
शंकरसेवासमितिप्रकटनमालां सदाऽपि सेवन्ताम् ॥ ५ ॥

21-5

## பதிப்புரை

ஸ்ரீ ஜகத்குரு சிருங்ககிரி ஸ்ரீ சாரதா பீடாதிபதி ஸ்ரீ மஹாஸ்வாமிகள் அவர்களின் பரமானுக்ரஹத்தால், அகில பாரத சங்கர ஸேவா ஸமிதியால் வெளியிடப்பட்டு வரும் ஸ்ரீ ஜகத்குரு கிரந்தமாலாவில் பத்தாவது மலர் பூர்த்தியாகியுள்ளது.

இதில் ஸ்ரீ சங்கரபகவத் பாதாசார்யாள் அருளியுள்ள "ப்ரபோதஸுதாகரம்" என்னும் பிரகரணத்தில் 15 பிரகரணங்கள் வெளியாகியுள்ளன. மீதி நான்கு பிரகரணங்களும் அடுத்த 11-வது மலரில் தொடர்ந்து வெளிவரும்.

ஆத்மஞானத்திற்கு முக்ய ஸாதனமான வைராக்யம், முதல் ஆறு பிரகரணங்களில் விவரிக்கப்படுகிறது. விஷயங்களிலுள்ள தோஷங்களை நன்கு தெரிந்துகொண்டால்தான் வைராக்யம் ஏற்படும். இது தெரியாததால்தான் சரீரத்தில் 'நான்' என்ற அஹங்காரமும், விஷயங்களில் 'எனது' என்ற மமகாரமும் ஏற்படுகிறது. இது நீங்குவதற்காக முதல் பிரகரணத்தில் தேஹத்தால் வரும் தீங்குகளையும், 2-வது பிரகரணத்தில் மனைவி, புத்திரன், தனம் முதலிய விஷயங்களால் ஏற்படும் தீங்குகளையும் நன்கு எடுத்துக்காட்டுகிறார். மூன்றாவதில் மனம்படுத்தும் பாட்டைக்காட்டி நான்காவதில் இந்திரிய நிக்ரஹத்தையும், ஐந்தாவதில் மனோ நிக்ரஹத்தையும் விளக்கி ஆறாவதில் வைராக்யத்தின் சிறப்பைக் கூறுகிறார். பிறகு தேஹாதி விலக்ஷணமான ஆத்மவஸ்துவைப்பற்றியும் அதை மறைக்கும் மாயையைப் பற்றியும் கூறி, மாயையின் காரியமான சரீராதிகளால் ஜீவபாவம் ஏற்பட்டதையும், உண்மையில் ஆத்மா அத்வைதம், அகர்த்தா, அபோக்தா, ஸ்வப்ரகாசவஸ்து என்ற தத்வத்தையும் விளக்கிக் காட்டுகிறார். இந்த அனுபவம் ஏற்படுவதற்காக மனோலயத்தையும் அதன் ஸாதன

மான நாதானுஸந்தானத்தையும் கூறி பின்னர் ப்ரபோத பிரகரணத்தில் அத்வைதாத்மானுபவத்தைக் காட்டுகிறார். இத்துடன் இம்மலர் முடிவடைகிறது. இதற்குப்பின் ஆத்ம ஞானனுபவம் ஏற்படவும், அது நிலைத்திருக்கவும் அந்தரங்க ஸாதனமான பக்தியைப்பற்றிக்கூறும் நான்கு பிரகரணங்கள் 11-வது மலரில் வெளிவரும்.

இந்நூலுக்குச் சிறந்த முறையில் தமிழில் பதவுரை, விரிவுரைகள் எழுதிக்கொடுத்து உதவிய ஸம்ஸ்கிருதப் பேராசிரியர் ஸ்ரீ A. ஸுப்ரமண்யய்யர் M. A, அவர்களுக்கும் ஸ்ரீ சங்கர கிருபா உதவி ஆசிரியர் வியாகரண சிரோமணி, வேதாந்தவித்வான் ஸ்ரீ K. S. வெங்கடராம சாஸ்திரிகள் அவர்களுக்கும் நம் ஸமிதியின் நன்றி உரித்தாகுக. ஸ்ரீ சங்கர கிருபா உதவி ஆசிரியர் அவர்கள் ஆரம்பம் முதற் கொண்டே ஒவ்வொரு மலரையும் நன்கு பரிசோதித்து அச்சுக்குத் தயார்செய்வதுடன் அவர்களும் சிலவற்றிற்கு உரை எழுதித்தருகிறார்கள்.

மற்ற மலர்களும் விரைவில் வெளியாகும்படி அருள் செய்ய ஸ்ரீ ஜகத்குருவின் திருவடிகளை வேண்டுவோமாக.

K. V. சுப்பரத்னம் அய்யர்,
பொதுக்காரியதரிசி,
*அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி.*

21-8



॥ श्रीः ॥

# ॥ प्रबोधसुधाकरः ॥

# ப்ரபோதஸுதாகரம்

["ப்ரபோதஸுதாகரம்" என்னும் இந்நூல் 257 சுலோகங்கள் கொண்டது. இதில் 19 பிரகரணங்கள் இருக்கின்றன. முதல் ஆறு ப்ரகரணங்களில் வைராக்யத்தைப் பற்றியும், பின் ஒன்பது பிரகரணங்களில் ஆத்மஞானத்தைப் பற்றியும், கடைசி நான்கு பிரகரணங்களில் பக்தியைப் பற்றியும் வாழ்க்கையில் ஏற்படும் பல அனுபவங்களையும் திருஷ்டாந்தங்களையும் காட்டித் தெள்ளென மனதில் பதியும்படி உபதேசிக்கிறார். முதல் ஆறு ப்ரகரணங்களில், அபிமானம் நீங்கி, வைராக்யம் ஏற்பட்டு நிலைபெறுவதற்காக, தேஹம், போக விஷயங்கள், மனம் இவைகளிலுள்ள தோஷங்களை எடுத்துக்கூறி, விஷயங்களில் மனம் செல்லாமல் மனத்தைக் கட்டுப்படுத்துவதற்கு வேண்டிய உபாயங்களைக் கூறுகிறார்.

பிறகு ஆத்ம வஸ்துவைப் பற்றியும், மாயையால் சரீர ஸம்பந்தம் ஏற்பட்டிருப்பதையும் உண்மையில் ஒன்றுடனும் ஆத்மாவுக்கு ஸம்பந்தம் இல்லாததையும், ஸ்வப்ரகாசமான ஆத்மா அத்வைதம், அது அகர்த்தா, அபோக்தா என்பதையும், ஆத்மஞானம் உறுதிப்பட மனோலய நாதானுஸந்தானங்களையும் கூறுகிறார்.

கடைசியாக ஆத்ம ஞானத்திற்கு முக்ய ஸாதனமான பக்தியைப்பற்றி விவரிக்கிறார். ஸகுண-நிர்குண பக்தியையும், இரண்டு தத்வங்களும் ஒன்று என்பதையும் காட்டி, த்யானம் ஸ்திரப்பட, பகவானுடைய அவதார மூர்த்திகளில் ஸ்ரீ கிருஷ்ணனின் ஸ்வரூபத்தையும், அவருடைய லீலைகளையும் மிகவும் விரிவாக வர்ணிக்கிறார்.

இந்நூலை வாசித்து அடிக்கடி அனுஸந்தானம் செய்து வந்தால் வைராக்யம் ஸ்திரப்பட்டு கிருஷ்ண பக்தியும் அதனால் ஆத்ம ஞானமும் ஏற்படும். நித்யானந்த நிலையை அடைவான். ஞானமும் ஆனந்தமும் ஏற்படுவதால் இந்நூலுக்கு "ப்ரபோத

ஸுதாகரம்" (ஞானமிருதக்கடல்) என்று ஆசார்யாள் பெயர் கொடுத்திருக்கிறார். அமிருதஸாகரத்திலிருந்து உண்டாகும் ஞானம் ஆனந்தமாகத்தான் இருக்கும் ]

# १. देहनिन्दाप्रकरणम् ॥

नित्यानन्दैकरसं सच्चिन्मात्रं स्वयंज्योतिः ।
पुरुषोत्तममजमीशं वन्दे श्रीयादवाधीशम् ॥ १ ॥

## 1 தேஹநிந்தாப்ரகரணம்

நித்யானந்தைகரஸம் ஸச்சின்மாத்ரம் ஸ்வயம்ஜ்யோதி: |
புருஷோத்தமமஜமீசம் வந்தே ஸ்ரீயாதவாதீசம் ||

**नित्यानन्दैकरसं**-நித்யானந்தமென்ற ஒரே ரஸஸ்வரூபியாயும், **सच्चिन्मात्रं**-ஸத்தாகவும் சித்தாகவும், **स्वयंज्योतिः**-தானாகவே விளங்கும் பிரகாசமாகவும், **पुरुषोत्तमं**-புருஷர்களில் சிறந்தவனாகவும், **अजं**-பிறப்பற்றவராகவும், **ईशं**-உலகங்களையெல்லாம் ஆள்பவராயும் இருக்கும் **श्रीयादवाधीशं**-யாதவர்களின் தலைவனான ஸ்ரீகிருஷ்ண பரமாத்மாவை, **वन्दे**-வணங்குகிறேன்.

பிரபோத ஸுதாகரம் என்ற நூல் ஆத்ம ஸாக்ஷாத்காரத்தால் ஒப்பற்ற ஆனந்தநிலை உண்டாவதை வர்ணிக்கின்றது. அந்த ஆத்மஞானத்தை ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா அர்ஜுனனை வியாஜமாக வைத்துக்கொண்டு உலகனைத்திற்கும் ஈந்தருளினான். ஆதலால் இந்நூலை இயற்றிய ஆதி சங்கரபகவத்பாதர் அவர்கள் ஞானதீசனாகிய ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவை முதற்கண் வணங்குகிறார்.

உபநிஷத்துக்கள் ப்ரஹ்மத்தை ஸச்சிதானந்த ஸ்வரூபமாக வர்ணிக்கின்றன. '**सत्यं ज्ञानं अनन्तं ब्रह्म**' '**विज्ञानमानन्दं ब्रह्म**' '**प्रज्ञानं ब्रह्म**' ஸத் என்றால் முக்காலங்களிலும் ஒரே மாதிரியாக இருப்பது என்று பொருள். சித் என்றால் ஞானம். இதுதான் ப்ரஹ்மத்தின் லக்ஷணம் இந்த சுலோகத்தில் ஸ்ரீ கிருஷ்ணனிடம் இந்த லக்ஷணங்கள் இருப்பதாக

ஆசார்யாள் கூறுகிறார். மேலும் கிருஷ்ணனைப் பிறப்பற்றவராகவும் தானே விளங்கும் பிரகாச ரூபியாகவும் ஈசுவரனாகவும் புருஷோத்தமனாகவும் கூறுகிறார். இந்த சுலோகத்தில் முன் பாதியில் நிர்குண ஸ்வரூபத்தையும் பின் பாதியில் **पुरुषोत्तमं, ईशं** என்பதால் ஸகுணமான ஈசுவர ஸ்வரூபத்தையும், **यादवाधीशं** என்பதால் லோகானுக்ரஹத்திற்காக ஏற்பட்ட அவதார ஸ்வரூபத்தையும் கூறி மூன்றும் ஒன்றுதான் என்பதைக் காட்டுகிறார். இந்த விஷயத்தை இந் நூலில் கடைசி இரண்டு ப்ரகரணங்களில் விரிவாக விளக்குகிறார். க்ஷரமான பிரபஞ்சத்தையும் அக்ஷரமான மாயையையும் புருஷர்களாகக் கூறி இவ்விரண்டுக்கும் மேல்பட்ட ஈசுவரனை புருஷோத்தமன் என்று கீதையில் கூறுகிறார். இந் நூலை வாசித்து இதில் கூறியுள்ள உபாயங்களை அனுஷ்டித்து ஸச்சிதானந்த ஸ்வரூபத்தைத் தெரிந்துகொண்டால் தானும் ஸச்சிதானந்த ஸ்வரூபமாக ஆகி நித்யானந்த நிலையை அடைகிறான். ஆகவே இதற்கு 'ப்ரபோத ஸுதாகரம்' (ஆத்மஞான அமிருத ஸமுத்திரம்) என்று பெயர் கொடுத்திருக்கிறார். இப்படிப்பட்ட நித்யமான ஆனந்த நிலையை எய்துவதற்கு ஸாதனமாக இருக்கின்றவர் ஸாக்ஷாத் கிருஷ்ண பரமாத்மா தான். அவர் யதுகுல திலகர். கீதையை உபதேசித்து அனைவரையும் கடைத்தேற்றியவர். அவரே புருஷோத்தமன். பிறப்பற்றவர். ஸகல உலகங்களையும் காத்து ரக்ஷிக்கின்றவர். ஆதலால் அவரை முதலில் வணங்கிவிட்டுப் பின்னர் இந்நூலை ஸ்ரீமத் ஆசார்யார் ஆரம்பிக்கின்றார். (1)

(அ) ப்ரஹ்மம் வாக்குக்கு எட்டாதது என்பதைக் கூறுகிறார் :—

यं वर्णयितुं साक्षाच्छ्रुतिरपि मूकेव मौनमाचरति ।
सोऽस्माकं मनुजानां किं वाचां गोचरो भवति ॥ २ ॥

யம் வர்ணயிதும் ஸாக்ஷாத் ச்ருதிரபி மூகேவ
மௌனமாசரதி ।
ஸோऽஸ்மாகம் மனுஜானாம் கிம் வாசாம் கோசரோ பவதி ॥

**यं**-எந்தப்பரம் பொருளை, **साक्षात्**-நேரிடையாக, **वर्णयितुं** வர்ணிப்பதற்கு, **श्रुतिः अपि**-வேதம்கூட, **मूका इव**-ஊமை போல், **मौनं आचरति**-வாய் திறவாமல் இருந்துவிடு கின்றதோ, **सः**-அப்படிப்பட்ட பரம்பொருள், **मनुजानां**-மானிடர்களாகிய, **अस्माकं**-நம்முடைய, **वाचां**-வார்த்தை களுக்கு **गोचरः**-பொருளாக, **भवति किम्?**-இருக்கமுடியுமா?

வேதம் அளுதியானது. அது வர்ணிக்காத விஷயம் இவ்வுலகில் ஒன்றுமே கிடையாது. அவ்வாறு விளங்கும் வேதம்கூடப் பரம்பொருளின் ஸ்வரூபத்தைச் சொல்ல இயலாது திரும்பிவிடுகின்றது. '**यतो वाचो निवर्तन्ते । अप्राप्य मनसा सह ।**' முதலான ச்ருதிகள் இதற்குச் சான்ருக விளங்கு கின்றன. இவ்வாறு இருக்கும்பொழுது சிற்றறிவு படைத்த மானிடர்களாகிய நாம் பரம்பொருளின் ஸ்வரூபத்தை எவ்வாறு எண்ணமுடியும்? நம்முடைய மனதிற்கே அப் பொருள் எட்டாமல் இருக்கும்பொழுது எவ்வாறு நாம் அதை வாக்கால் வர்ணிக்க முடியும்? (2)

(அ) ப்ரஹ்மத்தை விளக்கும் வழிகளைக் காட்டுகிருர்:-

**यद्यप्येवं विदितं तथाऽपि परिभाषितो भवेदेव ।**
**अध्यात्मशास्त्रसारैर्हरिचिन्तनकीर्तनाभ्यासैः ॥ ३ ॥**

யத்யப்யேவம் விதிதம் ததாபி பரிபாஷிதோ பவேதேவ ।
அத்யாத்ம ஶாஸ்த்ர ஸாரைர் ஹரிசிந்தன
கீர்த்தனுப்யாஸை: ॥

**एवं**-இவ்வாறு, **यद्यपि विदितं तथापि**-அறிந்துகொள்ளப் பட்டிருப்பினும் கூட, **अध्यात्मशास्त्रसारैः**-ஆத்மாவின் தத் வத்தை விளக்கும் நூல்களின் ஸாரங்களாலும், **हरिचिन्तन**-ஹரியின் த்யானம், **कीर्तन**-கீர்த்தனம் முதலியவற்றின், **अभ्यासैः**- பயிற்சிகளாலும், **परिभाषितः भवेत् एव**-விளக்கப் பட்டவராகவே ஆவார்.

முன் சுலோகத்தில் பரம்பொருளின் தத்வத்தை அறிவது இயலாத கார்யம் என்று கூறப்பட்டது. அது

அவ்வாறுயின் அதைப்பற்றிய விசாரம் எதற்கு என்று கேட்கலாம். அதற்கு ஸ்ரீமதாசார்யார் இங்கு பதில் கூறுகின்றூர். பரம்பொருளின் ஸ்வரூபம் அறியமுடியாதது என்று எண்ணி வாளாவிருக்கவேண்டிய அவச்யமில்லை. வேதாந்த நூல்களின் நுட்பங்களையறிந்த மகர்ஷிகள் இதனுடைய ஸ்வரூபத்தை நமக்கு எடுத்துக் காட்டியிருக்கின்றனர். वेदैश्च सर्वैः अहमेव वेद्यः என்று பகவான் கீதையில் அருளியிருக்கின்றூர். दृश्यते त्वग्र्यया बुद्ध्या सूक्ष्मया सूक्ष्मदर्शिभिः முதலான வாக்யங்களும் ஸூக்ஷ்மதர்சிகளான சான்றோர்களால் அப்பொருள் காணப்படுகின்றது என்று எடுத்துக்காட்டுகின்றன. அப்பரம்பொருளை அறிவதற்கு வேதாந்த வாக்யங்களைக் கேட்டு அவற்றின் பொருளை அறிந்து மனனம், தியானம், முதலியவற்றைச் செய்தல் வேண்டும். எப்பொழுதும் பகவானுடைய குணகணங்களைக் கீர்த்தனம் செய்வது அவச்யம். கருணைமூர்த்திகளான மகரிஷிகள் सततं कीर्तयन्तो मां ... नित्ययुक्ता उपासते என்று கூறியபடி ஸதாகாலமும் பகவானுடைய உபாஸனையால் அவருடைய தத்வத்தை அறிந்து அதை நமக்கு எடுத்துக் கூறியிருக்கிறூர்கள். அவ்வழியைப் பின்பற்றுவோமாயின் நாமும் பகவத்ஸ்வரூபத்தை ஸாக்ஷாத்கரிக்கலாம். (3)

(அ) முக்தி ஸாதனங்களைக் கூறுகிறூர் :—

क्लृप्तैर्बहुभिरुपायैरभ्यासज्ञानभक्त्याद्यैः ।
पुंसो विना विरागं मुक्तेरधिकारिता न स्यात् ॥ ४ ॥

க்லுப்தைர் பஹுபிருபாயைரப்யாஸ ஞான பக்த்யாத்யை: ।
பும்ஸோ விநா விராகம் முக்தேரதிகாரிதா ந ஸ்யாத் ॥

अभ्यास–பயிற்சி, ज्ञान–ஞானம், भक्त्याद्यैः–பக்திமுதலிய बहुभिः–பல, उपायैः–ஸாதனங்கள், क्लृप्तैः–ஏற்பட்டிருப்பினும், विरागं विना–பற்றின்மையின்றி, पुंसः–மனிதனுக்கு, मुक्तेः–மோக்ஷத்திற்கு, अधिकारिता–தகுதி வாய்ந்த தன்மை, न स्यात्–ஏற்படாது.

மோக்ஷத்தை அடைவதற்கு அப்யாஸம், ஞானம், பக்தி முதலான பல ஸாதனங்கள் உள்ளன. இவை எல்லாம் இருந்தபோதிலும் வைராக்யம் இல்லாதவன் மோக்ஷத்தை அடைய முடியாது. வைராக்யம் உள்ளவன் தான் மோக்ஷத்தை அடையத் தகுதி உள்ளவன். (4)

(அ) முக்திஸாதனமான வைராக்யத்தை முதலில் விளக்குகிறார் :—

**वैराग्यमात्मबोधो भक्तिश्चेति त्रयं गदितम् ।**
**मुक्तेः साधनमादौ तत्र विरागो वितृष्णता प्रोक्ता ॥ ५ ॥**

வைராக்யமாத்மபோதோ பக்திச்சேதி த்ரயம் கதிதம் ।
முக்தே: ஸாதனமாதௌ தத்ர விராகோ வித்ருஷ்ணதா
ப்ரோக்தா ॥

**वैराग्यं**–பற்றின்மை, **आत्मबोधः**–ஆத்ம ஞானம், **भक्तिः** பக்தி, **इति**–என்ற, **त्रयं च**–மூன்றும், **मुक्तेः**–மோக்ஷத்திற்கு **साधनं**–காரணமாக, **गदितम्**-கூறப்பட்டுள்ளது, **तत्र**-அதில் **आदौ**–முதலில், **विरागः**–வைராக்யம் என்பது, **वितृष्णता**–விஷயங்களில் ஆசையற்ற தன்மை என்று, **प्रोक्ता**–கூறப் பட்டுள்ளது.

மோக்ஷத்தை அடைவதற்குப் பல உபாயங்கள் கூறப் பட்டிருப்பினும் வைராக்யம், ஆத்மஞானம், பக்தி இம் மூன்றும்தான் முக்யமானது. இம் மூன்றும் ஒன்றுசேர்ந்து மோக்ஷத்தைத் தருவதால் இவைகள் எல்லாம் ஸாதனம் என்று ஒருமையில் கூறப்பட்டுள்ளது. இவ்வுலகிலும், மறு உலகிலுமுள்ள விஷய சுகங்களில் பற்றுள்ளவனுக்கு மோக்ஷம் கிட்டாது. ஆதலால் விஷய சுகங்களில் பற்றின்மை முதற்காரணமாகக் கருதப்படுகின்றது. அது போலவே ஆத்மஞானம் ஏற்பட்டால்தான் மோக்ஷத்தை அடையலாம். இதற்கு பக்தியும் இன்றியமையாதது. ஆகையால் இம் மூன்றுமே மோக்ஷத்தைப் பெற முக்யமான கருவி. அவற்றுள் வைராக்யமென்பது இவ்வுலகிலும் மறு

உலகிலுமுள்ள இன்பங்களில் ஆசையற்ற தன்மையைக் குறிக்கின்றது. (5)

(அ) வைராக்யம் ஏற்படாமலிருப்பதற்குக் காரணம் கூறுகிறுர் :—

सा चाहंममताभ्यां प्रच्छन्ना सर्वदेहेषु ।
तत्राहंता देहे ममता भार्यादिविषयेषु ॥ ६ ॥

ஸா சாஹம் மமதாப்யாம் ப்ரச்சந்நா ஸர்வ தேஹேஷு ।
தத்ராஹந்தா தேஹே மமதா பார்யாதி விஷயேஷு ॥

**सा च**-அந்த வைராக்யமும், **सर्वदेहेषु**-எல்லா மக்களிடத்தும், **अहंममताभ्यां**-"நான்" என்றும் "என்னுடையது" என்றும் காணப்படும் அபிமானங்களால், **प्रच्छन्ना**-மறைக்கப்பட்டுள்ளது. **तत्र**-அதில், **देहे**-தன்னுடைய உடலில், **अहंता**-நான் என்ற எண்ணம் தோன்றுகின்றது. **भार्यादिविषयेषु**-மனைவி, மக்கள் முதலிய விஷயங்களில், **ममता**-என்னுடையது என்ற அபிமானம் ஏற்படுகின்றது.

முன் சுலோகத்தில் வைராக்யம் மோக்ஷத்தைப் பெறுவதற்குக் காரணம் என்று கூறப்பட்டது. ஆனால் இந்த வைராக்யத்தை அடைவது சுலபமன்று. இதற்கு அஹந்தை, மமதை என்ற இரு பெரிய இடையூறுகள் காணப்படுகின்றன. ஆதலால் எல்லாப் பிராணிகளுக்கும் வைராக்யம் ஸுலபமாக ஏற்படுவதில்லை. இவற்றுள் அஹந்தை என்பது தேஹாபிமானம். அதாவது இந்த நச்வரமான உடலை நான் என்று எண்ணுவது. வைராக்யத்தை மறைப்பதற்கு இரண்டாவது காரணம் மமதை என்பது. மனைவி, மக்கள் முதலிய தேஹத்தை ஒட்டிய பொருள்களில் ஏற்படும் அபிமானம் மமதை என்று கூறப்படுகின்றது. ஸ்ரீ சங்கரபகவத்பாதர் இவற்றை அத்யாஸம் என்று பிரம்மசூத்ர பாஷ்யத்தில் கூறியிருக்கின்றுர். இத்தகைய இரண்டுவிதமான அபிமானங்கள் இருப்பதால் ஒருவருக்கும் வைராக்யம் ஏற்படுவதில்லை. ஆகையால் மோக்ஷத்தை அடைவது எளிதான கார்யமில்லை. (6)

(அ) அஹந்தையும் மமதையும் விலக உபாயம் கூறுகிறார் :—

**देहः किमात्मकोऽयं कः सम्बन्धोऽस्य वा विषयैः ।**
**एवं विचार्यमाणेऽहंताममते निवर्तेते ॥ ७ ॥**

தேஹ: கிமாத்மகோऽயம் க: ஸம்பந்தோऽஸ்ய வா விஷயை:|
ஏவம் விசார்யமாணேऽஹந்தா மமதே நிவர்த்தேதே ॥

**अयं**-இந்த, **देहः**-உடல், **किमात्मकः**-எத்தகையது? **अस्य**-இதற்கு, **विषयैः**-புலப்படும் பொருள்களுடன், **कः सम्बन्धः**-என்ன தொடர்பு? **एवं**-இம்மாதிரி, **विचार्यमाणे**-நன்கு ஆலோசிக்கும்பொழுது, **अहंताममते**- அஹங்கார மமகாரங்கள், **निवर्तेते**-விலகிப்போய்விடுகின்றன.

அஹந்தையும் மமதையும் வைராக்யத்திற்குத் தடைகள் என்று முன்பு கூறப்பட்டுள்ளது. இவைகளை விலக்கினால்தான் வைராக்யம் ஏற்பட்டு மோக்ஷத்தைப் பெறலாம். இங்கு இவைகளை விலக்குவதற்கான உபாயம் காட்டப்படுகின்றது சரீரத்தின் தன்மையையும், விஷயங்களின் தன்மையையும் இரண்டிற்கும் ஏற்படும் ஸம்பந்தத்தையும் நன்கு தெரிந்துகொள்ளாததால்தான், சரீரத்தில் நான் என்ற அபிமானமும், விஷயங்களில் என்னுடையது என்ற அபிமானமும் ஏற்படுகிறது. ஆதலால் ஒவ்வொருவரும் நான் என்று எதில் அபிமானம் வைத்துள்ளாரோ அந்த சரீரம் எப்படிப்பட்டதென்று நன்கு ஆராய்ந்து பார்க்க வேண்டும். பிறகு இவ்வுலகின்கண் தோன்றும் மனைவி மக்கள் முதலிய விஷயங்களின் ஸ்வபாவத்தை ஆராய்ந்து அவைகளுக்கும் சரீரத்திற்கும் தொடர்பு என்ன என்பதை நன்கு கவனிக்கவேண்டும். தேஹத்தையும் விஷயங்களையும் நன்கு ஆராய்ந்து பார்த்தால் ஒருவனும் தேஹத்தை நான் என நினைக்கமாட்டான். விஷயங்களையும் என்னுடையவை என எண்ணமாட்டான். அஹந்தையும் மமதையும் நீங்கிவிட்டால் வைராக்யம் உறுதிப்படும். அவன் மோக்ஷத்திற்கு அதிகாரி யாவான். (7)

(அ) தேஹாபிமானம் விலக தேஹத்திலுள்ள தோஷங்களை நன்கு எடுத்துக்காட்டுகிறார். முதலில் தேஹம் உண்டாகும் விதத்தைக் கூறுகிறார் :—

स्त्रीपुंसोः संयोगात्संपाते शुक्लशोणितयोः ।
प्रविशञ्जीवः शनकैः स्वकर्मणा देहमादत्ते ॥ ८ ॥

ஸ்த்ரீபும்ஸோ: ஸம்யோகாத் ஸம்பாதே ஶுக்ல
ஶோணிதயோ: ।
ப்ரவிஶஞ்ஜீவ: ஶனகை: ஸ்வகர்மணா தேஹமாதத்தே ॥

स्त्रीपुंसोः-ஸ்திரீ புருஷர்களுடைய, संयोगात्-சேர்க்கையினால், शुक्लशोणितयोः-சுக்லசோணிதங்களின், संपाते-ஒன்று கூடுதலில், जीवः-ஜீவன், प्रविशन्-நுழைந்து, शनकैः-மெதுவாக, स्वकर्मणा-தன்வினையினால், देहं-உடலை, आदत्ते-அடைகிறான்.

ஆணும் பெண்ணும் சேரும் பொழுது சுக்லமும் சோணிதமும் கலக்கிறது. ஜீவன் தான் முற்பிறவியில் செய்த கர்மாவினால் கட்டுப்பட்டுத் தன் வசமற்று அந்தக் கர்மபலத்தால் சுக்ல சோணிதங்களில் நுழைகிறான். பிறகு அது கர்ப்பத்தில் வளர்ந்து சரீரமாக ஆகிவிடுகிறது. ஆகவே சரீரத்தின் மூலகாரணத்தைக் கவனித்துப் பார்த்தால் நான் என்று எண்ணுவதற்கு அது கொஞ்சமும் தகுதியற்றது என்பது நன்கு விளங்கும். இங்கு ஜீவன் கர்மாவால் சரீரத்தைப் பெறுகிறான் என்று கூறியதால் சரீரம் ஆத்மாவல்ல, அது தன்னைக்காட்டிலும் வேறானது என்பதையும் காட்டினார். (8)

(அ) கர்ப்பவாஸ கஷ்டங்களைக் கூறுகிறார் :—

मातृगुरूदरदर्यां कफमूत्रपुरीषपूर्णायाम् ।
जठराग्निज्वालाभिर्नवमासं पच्यते जन्तुः ॥ ९ ॥

மாத்ரு குருதர தர்யாம் கபமூத்ர புரீஷ பூர்ணாயாம் ।
ஜடராக்நி ஜ்வாலாபிர் நவமாஸம் பச்யதே ஜந்து: ॥

**कफमूत्रपुरीषपूर्णायां** – கபம், மூத்திரம், மலம் என்ற அசுத்தப் பொருள்கள் நிரம்பிய, **मातृगुरूदरदर्यां** – தாயாருடைய பெரிய வயிற்றிலுள்ள கர்ப்பப்பையாகிய குகையில், **जन्तुः**–ஜீவன், **जठराग्निज्वालाभिः** – ஜாடராக்னியின் ஜ்வாலைகளால், **नवमासं**-ஒன்பது மாதகாலம் **पच्यते**-துன்பப்படுகின்ருன்.

ஜீவன் தாயின் கர்ப்பத்தில் நுழைந்தவுடன் அனுபவிக்கும் துன்பங்கள் கணக்கில் அடங்கா. தாயின் கர்பாசயம் ஓர் பெரும் குஹை போன்றது. அதில் கபம், மூத்திரம், மலம் முதலிய அறுவெறுக்கத்தக்க பல அசுத்தமான பொருள்கள் நிறைந்துள்ளன. இதன் நடுவில் இருக்கும் ஜீவன் ஒன்பது மாதகாலம் வரையில் பற்பல துன்பங்களுக்குட்படுகிருன். தாயினுடைய ஜாடராக்னியின் ஜ்வாலைகள் இவனுக்கு மிகுந்த தாபத்தை உண்டுபண்ணுகின்றன. (9)

(அ) கர்ப்பத்திலிருந்து வெளிப்படும் பொழுது உண்டாகும் துன்பங்களைக் கூறுகிருர் :—

दैवात्प्रसूतिसमये शिशुस्तिरश्चीनतां यदा याति ।
शस्त्रैर्विखण्ड्य स तदा बहिरिह निष्कास्यतेऽतिबलात् ॥ १० ॥

தைவாத் ப்ரஸூதிஸமயே ஶிஶுஸ்திரச்சீநதாம் யதா யாதி ।
ஶஸ்த்ரைர் விகண்ட்ய ஸ ததா பஹிரிஹ நிஷ்காஸ்யதேऽதிபலாத் ॥

**दैवात्**–துரதிருஷ்ட வசத்தால், **प्रसूतिसमये** – பிறக்கும் ஸமயத்தில், **शिशुः**–குழந்தை, **तिरश्चीनतां**-குறுக்காக இருக்கும் தன்மையை, **यदा**-எப்பொழுது, **याति**–அடைகிறதோ, **तदा**-அப்பொழுது, **सः**–அக்குழந்தை, **शस्त्रैः**-ஆயுதங்களால், **विखण्ड्य**–துண்டுதுண்டாக வெட்டப்பட்டு, **अतिबलात्**-மிகவும் பலாத்காரமாக, **इह**-இங்கு,**बहिः**-வெளியே, **निष्कास्यते**–தள்ளப்படுகின்றது.

தாய்க்கும் குழந்தைக்கும் நல்ல அதிருஷ்டம் இருந்தால் தான் தாயின் கர்ப்பத்திலிருந்து உயிருடன் குழந்தை வெளி வரும். இவ்வாறு தாயாருக்குக் கஷ்டமின்றி சுகமாகப் பிறத்தல் மிகவும் அரிது. துரதிருஷ்டம் இருந்தால் அக் குழந்தை கர்ப்பத்தில் குறுக்கே விழுந்து விடும். அப் பொழுது தாயாருக்குப் பெரும் ஆபத்து ஏற்படுகின்றது. தாயைக் காப்பதன் பொருட்டுப் பல ஆயுதங்களைக் கொண்டு அதைத் துண்டு துண்டாக வெட்டி வெளியே எடுக்கிறார்கள். (10)

**अथवा यन्त्रच्छिद्राद्यदा तु निःसार्यते प्रबलैः ।**
**प्रसवसमीरैश्च तदा यः क्लेशः सोऽप्यनिर्वाच्यः ॥ ११ ॥**

அதவா யந்த்ர ச்சித்ராத் யதா து நிஸ்ஸார்யதே ப்ரபலை: ।
ப்ரஸவ ஸமீரைச்ச ததா ய: க்லேஶ: ஸோऽப்யநிர்வாச்ய: ॥

**अथवा**-அல்லது, **यदा तु**-எப்பொழுது, **यन्त्रच्छिद्रात्**-யோனித்வாரத்திலிருந்து, **प्रबलैः**-மிகவும் பலமுள்ள, **प्रसवसमीरैश्च**-பிரஸவகாலக்காற்றுகளாலும், **निःसार्यते**-வெளியே தள்ளப்படுகின்றதோ, **तदा**-அப்பொழுது, **यः**-எந்த, **क्लेशः**-துன்பம் ஏற்படுகின்றதோ, **सः अपि**-அதுவும், **अनिर्वाच्यः**-சொல்ல இயலாதது.

குழந்தை பிறக்கும் ஸமயத்தில் ஏற்படும் துன்பங்களை வர்ணிப்பது மிகவும் கடினம். ஒரு சமயம் நல்ல அதிர்ஷ்ட வசத்தால் குழந்தை யோனித்வாரத்தின் வழியாக வெளியே தள்ளப்படினும் அது சொல்லொணாத் துயரங்களையே அனுபவிக்கின்றது. அப்பொழுது கர்ப்பாசயத்தில் உண் டாகும் பலமான சூதக வாயுக்கள் அதை அமுக்கி வெளியே தள்ளுகின்றன. அப்பொழுது அது மிகவும் துன்பம் அடைகிறது. (11)

(அ) பிறந்தபின் வாழ்க்கையில் உண்டாகும் துன்பங்களைச் சொல்கிறார் :—

आधिव्याधिवियोगात्मीयविपत्कलहदीर्घदारिद्र्यैः ।
जन्मानन्तरमपि यः क्लेशः किं स शक्यते वक्तुम् ॥ १२ ॥

ஆதி வ்யாதி வியோகாத்மீய விபத் கலஹ தீர்க தாரித்ர்யை:।
ஜந்மாநந்தரமபி ய: க்லேஶ: கிம் ஸ ஶக்யதே வக்தும் ॥

**जन्मानन्तरमपि**-பிறந்த பின்பும், **आधि**-மனதில் ஏற்படும் துன்பம், **व्याधि**-நோய், **वियोग**-பிரிவு, **आत्मीयविपत्**-தனக்குண்டாகும் ஆபத்து, **कलह**-சண்டை, **दीर्घदारिद्र्यैः**-நீண்ட ஏழ்மை முதலியவற்றால், **यः क्लेशः**-எந்தத் துன்பம் விளைகின்றதோ, **सः**-அது, **वक्तुं**-சொல்வதற்கு, **किं शक्यते**-முடியுமா?

பிறந்த பிறகும் ஜீவன் பலவித துன்பங்களுக்கு உள்ளாகிறான். அவனுடைய மனதில் பல வேதனைகள் எழுகின்றன. அதனால் அவனுக்கு சிறிதளவு அமைதிகூட உண்டாவதில்லை. அவ்வாறு அல்லல்படும் மனதை அடக்க முடியாமல் அவன் தத்தளிக்கிறான். மேலும் பலவிதமான நோய்கள் அவனது உடலை வாட்டுகின்றன. அவனுக்குப் பிரியமான மனைவி மக்கள் முதலியவர்கள் அவனைப் பிரிந்து செல்கின்றனர். அவர்களை விட்டுப் பிரியும் சமயத்தில் அவன் அளவுகடந்த துக்கத்தை அனுபவிக்கிறான். தன்னைச் சேர்ந்தவர்களுக்கு ஆபத்தும் பகைவர்களால் உண்டாகும் கலகங்களும் அவனை வாட்டுகின்றன. துரதிருஷ்டத்தால் அவன் நெடுநாள் ஏழ்மை நிலையையே எய்துகின்றான். இவ்வாறு ஒருவன் தனது வாழ்நாள் முழுவதும் அனுபவிக்கும் துன்பங்களை யாரால் இயம்ப இயலும்? அவன் படமுடியாதினித்துயரம், பட்டதெல்லாம் போதும் என்று கதறுகின்றான். (12)

(அ) தேஹத்தை விட்டாலும் துன்பம் இவனை விடுவதில்லை :—

नरपशुविहंगतिर्यग्योनीनां चतुरशीतिलक्षाणाम् ।
कर्मनिबद्धो जीवः परिभ्रमन्यातना भुंक्ते ॥ १३ ॥

நர பஸு விஹங்க திர்யக் யோநீநாம் சதுரஸீதி லக்ஷாணும் ।
கர்ம நிபத்தோ ஜீவ: பரிப்ரமன் யாதநா புங்க்தே ॥

**नर**-மனிதன், **पशु**-விலங்கு, **विहंग**-பறவை, **तिर्यग्योनीनां** புழு பூச்சிகள் முதலிய, **चतुरशीतिलक्षाणाम्**- எண்பத்து நான்கு லக்ஷம் பிறவிகளுக்குள், **कर्मनिबद्धः**-வினைகளால் கட்டுப்பட்ட, **जीवः**-ஜீவன், **परिभ्रमन्**-அலைந்து கொண்டு **यातनाः**-துன்பங்களை, **भुंक्ते**-அனுபவிக்கிருன்.

இவ்வாறு கர்ப்பத்தில் நுழைந்தது முதல் பிறந்து சரீரத்தை விடும்வரை, கணக்கற்ற துன்பங்களை அனுபவித்த பின்பும் தன் கர்மாவை அனுஸரித்து மறுபடியும் மற்றோர் சரீரத்தைப் பெறுகிருன். மனிதன், விலங்கு, பறவை, புழு, பூச்சி முதலாக உலகில் 84 லக்ஷம் ஜீவராசிகள் இருக்கின்றன. ஒவ்வொரு ஜீவனும் அவனவன் கர்மாவை அனுஸரித்து மாறி மாறி இவைகளில் ஏதாவது ஒரு சரீரத்தைப் பெறுகிருன். ஒவ்வொரு பிறவியிலும் சொல்லவொணுத் துயரங்களை அனுபவிக்கிருன். தான் செய்த கர்மாக்களால் கட்டுப்பட்டு பிறப்பு, இறப்பு என்னும் இச் சுழலில் அகப்பட்டு இதிலிருந்து வெளியேற முடியாமல் தவிக்கிருன். (13)

(அ) பிறவிப்பயனைக் காட்டுகிருர் :—

**चरमस्तत्र नृदेहस्तत्राग्रजन्मान्वयोत्पत्तिः ।**
**स्वकुलाचारविचारः श्रुतिप्रचारश्च तत्रापि ॥ १४ ॥**

சரமஸ் தத்ர ந்ருதேஹஸ் தத்ராக்ரஜன்மான்வயோத்பத்தி: ।
ஸ்வகுலாசார விசார: ச்ருதி ப்ரசாரச்ச தத்ராபி ॥

**तत्र**- அதில், **नृदेहः**- மானிடசரீரம், **चरमः**- கடைசியானது. (சிறந்தது), **तत्र**-அதில், **अग्रजन्मान्वयोत्पत्तिः**- அந்தண குலத்தில் பிறத்தல் (சிறந்தது). **तत्रापि**-அதிலும் **स्वकुलाचारविचारः**-தன் குலத்தின் ஆசாரங்களை அறிந்து அனுஷ்டித்தலும், **श्रुतिप्रचारश्च**-வேதங்களை ஓட்டி நடத்தலும் மேன்மேலும் சிறந்தவை.

பலபிறவிகளில் சுற்றிச்சுற்றி வரும் ஜீவன் ஏதோ அதிருஷ்டவசத்தால் மறுபடியும் மானிடப் பிறவியைப் பெறுகிறுன். எல்லாப் பிறவிகளுக்குள்ளும் மானிடப் பிறவி மிகவும் சிறந்தது. அதனுலேயே ஸ்ரீ பகவத்பாதர் விவேக சூடாமணியில் **जन्तूनां नरजन्म दुर्लभम्** என்று கூறியிருக்கிறுர். அதிலும் உயர்ந்த குலத்தில் பிறப்பது மிகச் சிறப்பு வாய்ந்தது. ஏனெனில் அக்குலத்தில் பிறந்தவர்களுக்குத் தான் பிரம்ம விசாரத்திற்கு உரிமை ஏற்படுகின்றது. அதிலும் தன்னுடைய குலத்தின் ஆசாரத்தைப் பின்பற்றி வேதத்தில் விதிக்கப்பட்ட ஸ்வதர்மங்களை அனுஷ்டித்தல் மிகவும் சிறந்தது. தன் குலாசாரங்களையும் வேத தர்மங்களையும் பின்பற்றுபவன் தான் பிரம்ம வித்யையை அடைய தகுதிவாய்ந்தவனுவான். **ब्राह्मणस्य हि देहोयं नोपभोगाय कल्पते। इह क्लेशाय महते प्रेत्यानन्तसुखाय च ॥** என்று வாசிஷ்டஸ்ம்ருதியில் கூறப்பட்டுள்ளது. உயர்ந்த குலத்தில் பிறந்தால் மட்டும் போதாது. ஆனுல் அதை அடைந்து ஸ்வகர்மாக்களை அனுஷ்டானம் செய்வதாலேயே மேன்மை ஏற்படுகின்றது இதையே ஸ்ரீ பகவத்பாதர் **वैदिकधर्ममार्गपरता** என்று விவேகசூடாமணியில் குறிப்பிட்டுள்ளார். (14)

**आत्मानात्मविवेको नो देहस्य च विनाशिताज्ञानम् ।**
**एवं सति स्वयमायुः प्राज्ञैरपि नीयते मिथ्या ॥ १५ ॥**

ஆத்மாநாத்ம விவேகோ நோ தேஹஸ்ய ச
விநாஶிதாஞானம் ।
ஏவம் ஸதி ஸ்வயமாயு: ப்ராஜ்ஞைரபி நீயதே மித்யா ॥

**एवं सति**-இப்படியிருக்கையில், **आत्मानात्मविवेकः**-ஆத்மா அனுத்மா இவைகளின் பகுத்தறிவும், **देहस्य**- உடலின், **विनाशिताज्ञानं च**-அழியும் தன்மையின் அறிவும், **नो**-இல்லாமல்போனுல், **प्राज्ञैः अपि**-புத்திமான்களாலும், **स्वयं**-தங்களாலேயே, **आयुः**-வாழ்நாள், **मिथ्या**-வீணுகவே, **नीयते**-கழிக்கப்படுகிறது.

மானிடனுகப் பிறந்த ஒவ்வொருவனும் தனக்குக் கிடைத்த அரிய ஸந்தர்ப்பத்தை நழுவ விடக்கூடாது. அவன் வேத மார்க்கத்தைக் கடைபிடித்து அதன் கடைசியிலுள்ள உபநிஷத்துக்களில் கூறப்பட்டிருக்கும் பிரம்ம தத்வத்தை அறிந்துகொள்ளவேண்டும். அதற்கு ஆத்ம விசாரம் செய்தல் இன்றியமையாதது. எது ஆத்மா, எது அநாத்மா என்பதை நன்கு விசாரித்து அநாத்ம வஸ்துக்களிலிருந்து ஆத்மாவைப் பிரித்துத் தெரிந்து கொள்ள வேண்டும். இந்த ஆத்மா ஒன்றுதான் உண்மைப் பொருள் அஃது அழிவற்றது. எங்கும் நிறைந்துள்ளது. மற்றவை எல்லாம் தோன்றி மறையும் தன்மை வாய்ந்தவை ஆதலால் அவைகள் பொய் என்று தெரிந்துகொள்ளவேண்டும். சரீரம் ஆத்மாவைத் தவிர வேருனது. அது அழியும் தன்மை வாய்ந்தது என்றும் அவன் நன்கு அறிந்துகொள்ள வேண்டும். இவ்வாறு எவன் ஆத்மாவை நன்கு தெரிந்து கொள்ளவில்லையோ அவன் எவ்வளவு புத்திசாலியாக இருந்தபோதிலும் அவன் தன்னுடைய வாழ்நாளை வீணுகவே கழித்தவனுகிருன். ஏனெனில் இவ்வாழ்வில் அவன் எய்தும் மோக்ஷம் அவனுக்குக் கிடைக்காமலே போய்விடுகிறது. ஆன்ம அறிவுபெற்றவனே கைவல்யத்தை அடைகின்ருன். ज्ञानादेव हि कैवल्यम् । ஆதலால் ஆன்ம ஞானம் அற்றவனுக்கு மோக்ஷமேது? அவன் பிறவிக் கடலில் வீழ்ந்துத் தத்தளிப்பான். (15)

(அ) ஆயுளின் பெருமையைக் காட்டுகிருர் :—

**आयुःक्षणलवमात्रं न लभ्यते हेमकोटिभिः क्वापि ।**
**तच्चेद्गच्छति सर्वं मृषा ततः काऽधिका हानिः ॥ १६ ॥**

ஆயு:க்ஷண லவ மாத்ரம் ந லப்யதே ஹேம கோடிபி: க்வாபி।
தச்சேத் கச்சதி ஸர்வம் ம்ருஷா தத: காऽதிகா ஹாநி: ॥

**आयुःक्षणलवमात्रं**– ஆயுளில் ஒருக்ஷணத்தின் லவம், மிகச்சிறிதான அளவு மட்டும்கூட, **हेमकोटिभिः**–கோடிக் கணக்கான பொன்களால், **क्वापि**–ஒரு இடத்திலும், **न लभ्यते**-

அடையப்படுகிறதில்லை, **तत्सर्वं**-அதுஎல்லாம், **मृषा**-வீணுக **गच्छति चेत्**-போய் விடுமாகில், **ततः**-அதைக் காட்டிலும், **अधिका**-அதிகமான, **हानिः**-நஷ்டம், **का**-யாது?

ஒருவன் மிகுந்த புண்யவசத்தால் மானிடப் பிறவியை அடைகிருன். அவனுடைய வாழ்நாளில் ஒவ்வொரு க்ஷணமும் மிகுந்த பயன் வாய்ந்தது. அதை இழந்தபின் திரும்பப் பெறுவது இயலாத காரியம். எவ்வளவு கோடிக் கணக்கான தங்கக்காசுகளைக் கொடுத்தாலும் இழந்த ஆயுளைப் பெற முடியாது? ஒவ்வொரு க்ஷணமும் ஆயுள் குறைந்துகொண்டே இருக்கிறது. இதைப் பயனுள்ளதாகச் செய்யவேண்டும். இந்த ஆயுள் முழுவதும் பிறவிப்பயனை அடைய பிரயோஜனப்படாமல் வீணுகச் சென்றுவிடுமாகில் அதைக்காட்டிலும் மிகுந்த நஷ்டம் யாது? (16)

(அ) மனித ஜன்மாவின் பெருமையைக் கூறுகிருர் :—

**नरदेहातिक्रमणात्प्राप्तौ पश्वादिदेहानाम् ।**
**स्वतनोरप्यज्ञाने परमार्थस्यात्र का वार्ता ॥ १७ ॥**

நரதேஹாதிக்ரமணுத் ப்ராப்தௌ பச்வாதிதேஹாநாம் |
ஸ்வதநோரப்யக்ஞாநே பரமார்த்தஸ்யாத்ர கா வார்த்தா ||

**नरदेहातिक्रमणात्**-மானிடப்பிறவியை வீணுகக் கழித்த பின், **पश्वादिदेहानां**-விலங்கு முதலியவைகளின் தேகங்களை, **प्राप्तौ**-அடைந்த பொழுது, **स्वतनोः अपि**-தன்னுடைய உடலை ப்பற்றியே, **अज्ञाने**-அறியாமல் இருக்கும் பொழுது, **अत्र**-இங்கு, **परमार्थस्य**-ஆத்ம தத்துவத்தைப் பற்றிய, **वार्ता**-பேச்சு, **का**-யாது?

மனிதன் ஒருவனுக்குத்தான் பகுத்தறிவு உண்டு. அவன் ஒருவனே ஆத்ம தத்துவத்தை உணரமுடியும். ஆகையால் மானிடனுக இருக்கும் பொழுதே ஜீவன் முக்தியை அடைய முயலவேண்டும். அவ்வாறு செய்யாமல் ஒருவன் தன்னுடைய வாழ்நாள் முழுவதையும் தீய வழி

களில் நாசம் செய்து விட்டால் பின்பு அவன் திர்யக்யோனி களில் விழவேண்டியதுதான். அவன் விலங்காகவோ பக்ஷி யாகவோ பிறக்கிருன். அப்பொழுது அந்த ஜீவனுக்குப் பகுத்தறிவு போய்விடுகிறது. அது தன்னுடைய உடலைப் பற்றியே அறிந்து கொள்ளத் திறமையற்றதாக ஆகிவிடு கின்றது. அவ்வாறு இருக்க அந்த ஜீவன் ஆத்ம தத்து வத்தைப் பற்றி உணர்ந்து கொள்வது அரிது என்பது பற்றிக் கூறவும் வேண்டுமா ? (17)

(அ) விலங்கு ஜன்மாவிலுள்ள துன்பங்களைக் கூறு கிருர் :—

**सततं प्रवाह्यमानैर्वृषभैरश्वैः खरैर्गजैर्महिषैः ।**
**हा कष्टं क्षुत्क्षामैः श्रान्तैर्नो शक्यते वक्तुम् ॥ १८ ॥**

ஸததம் ப்ரவாஹ்யமாநைர்
வ்ருஷபைரஶ்வை: கரைர் கஜைர் மஹிஷை: ।
ஹா கஷ்டம் க்ஷுத்க்ஷாமை:
ஶ்ராந்தைர் நோ ஶக்யதே வக்தும் ॥

**सततं**-எப்பொழுதும், **प्रवाह्यमानैः**-வண்டி முதலியவை களில் பூட்டப்பட்டு பாரங்களை இழுத்துச் செல்லும்படி செய்யப்பட்டு, **क्षुत्क्षामैः**-பசியால் வாடி, **श्रान्तैः**-களைப்புற்ற **वृषभैः**-எருதுகளாலும், **अश्वैः**-குதிரைகளாலும், **खरैः**-கழுதை களாலும், **गजैः**-யானைகளாலும், **महिषैः**-எருமைகளாலும் **वक्तुं**-சொல்வதற்கு, **नो शक्यते**-முடிகிறதில்லை, **हा**-அந்தோ **कष्टम्**-கொடுமை !

விலங்குகளாகப் பிறக்கும் ஜீவன்கள் கணக்கற்ற இன்னல்களுக்குள்ளாகின்றன. குதிரைகளாகவும், எருது களாகவும், கழுதைகளாகவும், யானைகளாகவும் எருமை களாகவும் பிறக்கும் அவைகள் வண்டிகளில் பூட்டப் பட்டு மிகுந்த பாரத்தை இழுத்துச் செல்லும்படி தூண்டப் படுகின்றன. அவ்வாறு அவைகள் பெரும் பாரங்களை இழுப் பதால் வாடிக் களைத்துப் போகின்றன. அவைகளுக்குப்

பசிக்கு வேண்டிய உணவும் கொடுக்கப்படுவதில்லை. அப்பொழுது அவைகள் தங்கள் துயரத்தை வெளியில் கூறக்கூட முடியாமல் தவிக்கின்றன. அவைகளின் துன்பத்தை யார்தான் அறியமுடியும்? (18)

(அ) தன் தேஹத்திலேயே வெறுப்பு ஏற்படும்படியாக அதிலுள்ள பல தோஷங்களை எடுத்துக் காட்டுகிறார் :—

**रुधिरास्थिधातुमज्जामेदोमांसादिसंहतिर्देहः ।**
**स बहिस्त्वचा पिनद्धस्तस्मान्नो भक्ष्यते काकैः ॥ १९ ॥**

ருதிராஸ்தி தாது மஜ்ஜா
மேதோ மாம்ஸாதி ஸம்ஹதிர் தேஹ: ।
ஸ பஹிஸ் த்வசா பிநத்தஸ்
தஸ்மாந்நோ பக்ஷ்யதே காகை: ॥

**देहः**-உடல், **रुधिर**-இரத்தம், **अस्थि**-எலும்பு, **धातु**-தாதுக்கள், **मज्जा**-மஜ்ஜை, **मेदो**-கொழுப்பு, **मांसादि**-இறைச்சி முதலியவைகளின, **संहतिः**-தொகுப்பு. **सः**-அது, **बहिः**-வெளியே, **त्वचा**-தோலால், **पिनद्धः**-கட்டப்பட்டிருக்கிறது. **तस्मात्**-ஆகையால், **काकैः**-காக்கைகளால், **नो भक्ष्यते**-சாப்பிடப்படுகிறதில்லை.

இவ்வுடல் மிகவும் வெறுக்கத்தக்கதாக இருக்கிறது. இதற்குள் காணப்படுபவை அனைத்தும் மிகவும் ஆபாஸமானவை. இது இரத்தம், மாம்ஸம், எலும்பு, கொழுப்பு முதலியவைகளின் தொகுப்பு. அவ்வாறே இது இருப்பின் தெருவில் போகும்பொழுது இதை காக்கைகளும், இறைச்சி தின்னிப் பறவைகளும் கொத்தித் தின்றுவிடும். ஆனால் இது வெளியே தோலினால் மூடப்பட்டிருக்கின்றது. அதனால் காக்கை முதலியவை வந்து கொத்தித் தின்பதில்லை. (19)

**नासाग्राद्वदनाद्वा कफं मलं पायुतो विसृजन् ।**
**स्वयमेवैति जुगुप्सामन्तः प्रसूतं च नो वेत्ति ॥ २० ॥**

நாஸாக்ராத் வதனாத் வா கபம் மலம் பாயுதோ விஸ்ருஜன் ।
ஸ்வயமேவைதி ஜுகுப்ஸாமந்த: ப்ரஸ்ருதம் ச நோ வேத்தி ॥

नासाग्रात्- மூக்கின் துவாரத்திலிருந்தோ, वदनात् वा- வாயிலிருந்தோ, कफं-கபத்தையும், पायुतः-அபானத்துவாரத்தின் மூலமாக, मलं-மலத்தையும், विसृजन्-வெளிப்படுத்திக் கொண்டு, स्वयमेव-தானாகவே, जुगुप्सां-வெறுப்பை, एति- அடைகிறான். अन्तः-உடலுக்குள், प्रसृतं-பரவியிருக்கும் இவற்றை नो वेत्ति-அறிவதில்லை.

இவ்வுடலுக்குள் அருவருப்பை உண்டாக்கும் கோழை, மலம் முதலியன பரவி நிற்கின்றன. அவைகள் மூக்கின் துவாரங்கள், வாய், அபான த்வாரம் இவைகளின் மூலமாக வெளியே வரும்பொழுது அவைகளைக் கண்டு மனிதன் வெறுப்பை அடைகிறான். ஆனால் அவைகள் எல்லாம் தன்னுடலுக்குள்ளேயே இருப்பதை அவன் நினைக்கிறதில்லை. (20)

पथि पतितमस्थि दृष्ट्वा स्पर्शभयादन्यमार्गतो याति ।
नो पश्यति निजदेहं चास्थिसहस्रावृतं परितः ॥ २१ ॥

பதி பதிதமஸ்தி த்ருஷ்ட்வா ஸ்பர்ஸ பயாதன்ய மார்கதோ யாதி ।
நோ பஸ்யதி நிஜதேஹம் சாஸ்தி ஸஹஸ்ராவ்ருதம் பரித: ॥

पथि-வழியில், पतितं-விழுந்துகிடக்கின்ற, अस्थि- எலும்பை, दृष्ट्वा-பார்த்து, स्पर्शभयात्-அது தன் உடலில் பட்டுவிடுமோ என்ற அச்சத்தால், अन्यमार्गतः-வேறு வழியாக, याति-செல்கிறான். परितः-சுற்றிலும், अस्थिसहस्रा-वृतं-ஆயிரக்கணக்கான எலும்புகளால் சூழப்பட்டுள்ள, निजदेहं-தன்னுடைய சரீரத்தை, नो पश्यति-பார்க்கிறதில்லை.

மனிதனுடைய உடலில் மிகவும் அருவருப்பைக் கொடுக்கும் ஆயிரக்கணக்கான எலும்புகள் நிரம்பிக் கிடக்கின்றன. இவைகளை நினைப்பதேயில்லை. ஆனால் வழியில்

விழுந்துகிடக்கும் எலும்பைக் கண்டு அது தன்னுடைய உடலில் பட்டுவிடுமோ என்று பயந்து அவன் வேறு வழியாகச் செல்கிருன். (21)

केशावधि नखराग्रादिदमन्तः पूतिगन्धसम्पूर्णम् ।
बहिरपि चागरुचन्दनकर्पूराद्यैर्विलेपयति ॥ २२ ॥

கேஶாவதி நகராக்ராதிதமந்த: பூதிகந்த ஸம்பூர்ணம் ।
பஹிரபி சாகரு சந்தன கர்பூராத்யைர் விலேபயதி ॥

**नखराग्रात्**-நகங்களின் நுனியிலிருந்து, **केशावधि**-தலைமயிர் வரையில், **इदं**-இது, **अन्तः**-உள்ளே, **पूतिगन्धसंपूर्णम्**-துர்நாற்றம் நிறைந்தது. **अपि च**-ஆனலும், **बहिः**-வெளியே, **अगरु**-அகில், **चन्दन**-சந்தனம், **कर्पूराद्यैः**-கர்பூரம் முதலியவற்ருல், **विलेपयति**-பூசிக்கொள்கிருன்.

இவ்வுடலில் நகங்களின் நுனிகளிலிருந்து ஆரம்பித்து தலையிலுள்ள கூந்தல் வரையில் எங்குமே துர்நாற்றம்தான் குடிகொண்டுள்ளது. ஆனுல் இதை மறைத்து இவ்வுடலைச் சிறந்த வாசனையுள்ளதாகச் செய்யும்பொருட்டு அவன் தன்னுடைய உடலில் அகில், சந்தனம், கற்பூரம் முதலியவற்றைப் பூசிக்கொள்கிருன். இவ்வுடல் எவ்வளவு வெறுக்கத்தக்கதாக இருப்பினும் மனிதனுக்கு இதிலுள்ள அபிமானம் நீங்குவதே இல்லை. அதனுல் அவன் இதை அழகுபடுத்துவதற்காகப் பல வாசனைப் பொடிகளையும், தைலங்களையும், பூச்சுக்களையும் உபயோகிக்கிருன். (22)

यत्नादस्य पिधत्ते स्वाभाविकदोषसङ्घातम् ।
औपाधिकगुणनिवहं प्रकाशयञ्श्लाघते मूढः ॥ २३ ॥

யத்நாதஸ்ய பிதத்தே ஸ்வாபாவிக தோஷ ஸங்காதம் ।
ஔபாதிக குண நிவஹம் ப்ரகாஶயந் ச்லாகதே மூட: ॥

**अस्य**-இந்த சரீரத்தினுடைய, **स्वाभाविक**-இயற்கையாக உள்ள, **दोषसंघातम्**-குற்றங்களின் கூட்டத்தை, **यत्नात्**-

முயற்சியுடன், **पिधत्ते**-மறைக்கிறான். **मूढः**-முட்டாள், **औपाधिक**-செயற்கையாக உள்ள, **गुणनिवहं**-குணங்களின் கூட்டத்தை, **प्रकाशयन्**-வெளிப்படுத்திக்கொண்டு, **श्लाघते**-புகழ்கிறான்.

இச்சரீரத்தில் கணக்கற்ற குறைபாடுகள் காணப் படுகின்றன. அவன் அவைகள் அனைவற்றையும் மிகுந்த முயற்சியுடன் மூடிவைத்துக்கொள்கிறான். பின்னர் அவன் பலவித ஆடைகளாலும் அழகு தரும் பொருள்களாலும் அதை அலங்கரித்துக்கொள்கிறான். இவ்வாறு அவன் செயற்கையழகு படைத்த தன்னுடைய உடலைப் புகழ்ந்து கொள்கிறான். இவனது அறியாமையை எங்ஙனம் இயம்புவது? (23)

क्षतमुत्पन्नं देहे यदि न प्रक्षाल्यते त्रिदिनम् ।
तत्रोत्पतन्ति बहवः क्रिमयो दुर्गन्धसंकीर्णाः ॥ २४ ॥

க்ஷதமுத்பந்நம் தேஹே யதி ந ப்ரக்ஷால்யதே த்ரிதினம் ।
தத்ரோத்பதந்தி பஹவஃ க்ரிமயோ துர்கந்த ஸங்கீர்ணாஃ ॥

**देहे**-உடலில், **उत्पन्नं**-உண்டான, **क्षतं**-புண், **त्रिदिनं**-மூன்று நாட்கள், **यदि न प्रक्षाल्यते**-கழுவப்படாவிடில், **तत्र**-அதில், **दुर्गन्धसंकीर्णाः**-துர்நாற்றத்துடன்கூடிய, **बहवः**-பல **क्रिमयः**-புழுக்கள், **उत्पतन्ति**-கிளம்புகின்றன.

இந்த உடலை மிகவும் ஜாக்ரதையாகக் கவனித்துக் கொண்டு காப்பாற்ற வேண்டியிருக்கிறது. ஏதாவது காரணத்தால் இதில் காயம், புண் முதலியவை உண் டானால் அவற்றை உடனே கழுவி சிகித்ஸை செய்ய வேண்டும் அவ்வாறு செய்யாமல் இருந்துவிட்டால் இரண்டு மூன்று நாட்களுக்குள் அப் புண் அழுகிப்போய் விடு கின்றது. அதில் மிகுந்த சீழ் உண்டாகி துர்நாற்றம் வீசுகின்றது. துர்கந்தமுள்ள பல புழுக்களும் அதிலிருந்து கிளம்பி விடுகின்றன. அப்பொழுது இது மிகுந்த அரு வெறுப்பை உண்டாக்குகின்றது. (24)

योे देहः सुप्तोऽभूत्सुपुष्पशय्योपशोभिते तल्पे ।
सम्प्रति स रज्जुकाष्ठैर्नियन्त्रितः क्षिप्यते वह्नौ ॥ २५ ॥

யோ தேஹ: ஸுப்தோऽபூத்
ஸுபுஷ்ப ஶய்யோபஶோபிதே தல்பே ।
ஸம்ப்ரதி ஸ ரஜ்ஜுகாஷ்டைர்
நியந்த்ரித: க்ஷிப்யதே வஹ்நௌ ॥

**यो देहः**-எந்த உடல், **सुपुष्प**-நல்ல மலர்களால் அமைக்கப்பட்ட, **शय्योपशोभिते**-படுக்கையால் அழகுபடுத்தப்பட்ட, **तल्पे**-மஞ்சத்தில், **सुप्तः अभूत्**-தூங்கிக்கொண்டிருந்ததோ, **सः**-அது, **सम्प्रति**-இப்பொழுது, (பிராணன் பிரிந்தபின்) **रज्जुकाष्ठैः**-கயிறுகளாலும் கட்டைகளாலும், **नियन्त्रितः**-கட்டப்பட்டு, **वह्नौ**-தீயில், **क्षिप्यते**-போடப்படுகிறது.

மனிதன் உயிருடன் இருக்கும் வரையில் தன்னுடைய சரீர சுகத்தைப் பேணுகிருன். அவன் நல்ல மலர்களால் அமைக்கப்பட்ட மெல்லிய பஞ்சணி மெத்தையில் படுத்து உறங்குகிருன். ஆனுல் கூடுவிட்டு ஆவி சென்றபின் அச்சரீரத்தைக் காப்பவர் யாருமிலர் பின்னர் அவனைச் சேர்ந்தவர்கள் அந்த உடலை வீட்டிற்குள் விட்டு வைப்பதில்லை. அவர்கள் அதே சரீரத்தைக் கட்டையில் வைத்துக் கயிறுகளால் கட்டித் தூக்கிச் சென்று தீக்கு இரையாகச் செய்து விடுகின்றனர். நன்கு போஷித்துக் காக்கப்பட்ட உடல் தீயில் வைக்கப்பட்டுச் சாம்பலாகச் செய்யப்படுகின்றது.

सिंहासनोपविष्टं दृष्ट्वा यं मुदमवाप लोकोऽयम् ।
तं कालाकृष्टतनुं विलोक्य नेत्रे निमीलयति ॥ २६ ॥

ஸிம்ஹாஸநோபவிஷ்டம் த்ருஷ்ட்வா யம் முதமவாப
லோகோऽயம் ।
தம் காலாக்ருஷ்டதநும் விலோக்ய நேத்ரே நிமீலயதி ॥

**सिंहासनोपविष्टं**-சிம்மாஸனத்தில் வீற்றிருந்த, **यं**-எவனை **दृष्ट्वा**-பார்த்து, **अयं लोकः**-இந்த உலகம், **मुदं**-சந்தோஷத்தை

**अवाप**–அடைந்ததோ, **कालाकृष्टतनुं**–யமனால் இழுக்கப்பட்ட சரீரத்தை உடைய, **तं**–அவனை, **विलोक्य**–பார்த்து, **नेत्रे**–இரு கண்களையும், **निमीलयति**–மூடிக்கொள்கிறது. (25)

ஒருவன் உயிருடன் இருக்கும்பொழுது எல்லோராலும் போற்றப்படுகிருன். அவன் உயர்ந்த பதவியைப்பெற்று அரசனுக ஆகி உன்னதமான சிம்மாஸனத்தில் வீற்றிருக்கிருன். அவ்வாறு அமர்ந்திருக்கும் அவனது உடலைக் கண்டு உலகமனைத்தும் உவகை பூக்கின்றது. ஆனல் அவனுடைய சரீரத்திலிருந்து யமன் எப்பொழுது உயிரை இழுத்துக்கொண்டு செல்கிருனே அப்பொழுதே அந்த உடல் பயங்கரமான தோற்றத்தையளிக்கின்றது. அச்சமயத்தில் உலகமனைத்தும் அதைக்கண்டு வெறுப்பினல் தன்னுடைய இரு கண்களையும் மூடிக்கொள்கிறது. என்னே இந்த உடலின் அவல நிலை! (26)

(அ) தேஹத்திற்கு ஆத்மாவால் சலனம் ஏற்படுவதைக் கூறுகிருர் :—

**एवंविधोऽतिमलिनो देहो यत्सत्तया चलति ।**
**तं विस्मृत्य परेशं वहत्यहंतामनित्येऽस्मिन् ॥ २७ ॥**

ஏவம்விதோऽதிமலினோ தேஹோ யத்ஸத்தயா சலதி ।
தம் விஸ்ம்ருத்ய பரேஶம் வஹத்யஹந்தாமநித்யேऽஸ்மிந் ॥

**एवंविधः**-இப்படிப்பட்ட, **अतिमलिनः**-மிகவும் அசுத்தமான, **देहः**–உடல், **यत्सत्तया**–எந்த ஆத்மாவினுடைய இருப்பால், **चलति**–அசைகின்றதோ, **तं परेशं**–அப்படிப்பட்ட பரமாத்மாவை, **विस्मृत्य**–மறந்து, **अनित्ये**–அழியக்கூடிய **अस्मिन्**–இந்த உடலில், **अहंतां**–நான் என்ற அபிமானத்தை, **वहति**-தாங்குகிருன்.

இந்த உடல் அநித்யமானது. ஒவ்வொரு க்ஷணமும் மாறி வேறுபாடடைந்து கடைசியில் இது அழிந்துவிடுகிறது. ஆனல் இதற்குள் உரையும் ஆத்மா அழிவற்றது.

அது சாச்வதமானது. அந்த ஆத்மாவினுடைய ஸம்பந்தத்தால்தான் இவ்வுடல் பல தொழில்களில் ஈடுபடுகின்றது. ஆனால் இதை ஒருவரும் தெரிந்துகொள்வதில்லை. அவன் பரமாத்மாவின் உண்மையான ஸ்வரூபத்தை மறந்துவிடுகிறான். அவன் தன்னுடைய சரீரமே ஆத்மா எனக் கருதுகிறான். இவ்வாறாக அவன் அழியக்கூடிய இந்த தேகத்தில் நான் என்ற அபிமானத்தை வளர்த்துக் கொள்கிறான். (27)

(அ) ஆத்மாவிற்கும் அநாத்மாவிற்கும் உள்ள வேற்றுமையைக் கூறுகிறார் :—

**क्वात्मा सच्चिद्रूपः क्व मांसरुधिरास्थिनिर्मितो देहः ।**
**इति यो लज्जति धीमानितरशरीरं स किं मनुते ।। २८ ।।**

க்வாத்மா ஸச்சித்ரூப: க்வ மாம்ஸ ருதிராஸ்தி
நிர்மிதோ தேஹ: ।
இதி யோ லஜ்ஜதி தீமாநிதர ஶரீரம் ஸ கிம் மநுதே ॥

**सच्चिद्रूपः**-ஸச்சிதானந்தஸ்வரூபியான, **आत्मा**-ஆத்மா, **क्व**-எங்கே? **मांसरुधिरास्थिनिर्मितः**-மாம்ஸம், இரத்தம், எலும்பு இவைகளால் அமைக்கப்பட்ட, **देहः**-உடல், **क्व**-எங்கே? **इति**-என்று, **यः**-எந்த, **धीमान्**-அறிவாளி, **लज्जति**-வெட்கமடைகிறானோ, **सः**-அவன், **इतरशरीरं**-ஆன்மாவைத் தவிர வேறுபட்ட உடலை, **मनुते किम्**-எண்ணுவானா என்ன?

ஆத்மாவிற்கும் சரீரத்திற்கும் மிகுந்த வேறுபாடு உள்ளது. ஆத்மா ஸச்சிதாநந்த ஸ்வரூபி. அது அழிவு அற்றது. சரீரமோவெனில் மாம்ஸம், இரத்தம் எலும்பு முதலியவைகளால் அமைக்கப்பட்டது. இது அழியும் தன்மைவாய்ந்தது. எல்லையற்ற துன்பங்களுக்கு உறைவிடமானது. இவற்றின் வேற்றுமைகளை நன்கு உணர்ந்தவன் தன்னுடைய சரீரத்தைப் பற்றிப் பேசுவதற்கே வெட்கப்படுவான். அவ்வாறு இருக்க அவன் தன்னைக் காட்டிலும் வேறான சரீரத்தை ஆத்மாவாக எவ்வாறு எண்ணுவான்.

# २. विषयनिन्दाप्रकरणम् ॥

(அ) இவ்வாறு, முக்தியின் ஸாதனங்களான வைராக்யம், ஆத்மஞானம், பக்தி இம் மூன்றில் முதலாவதான வைராக்யம் ஏற்படாததற்குக் காரணமான அஹங்கை விலக ஆரம்பம் முதல் முடிவு வரை சரீரத்தில் ஏற்படும் பல தோஷங்களை மிகவும் விரிவாகக் காட்டினார். இனி மமதை (என்னுடையது என்ற அபிமானம்) விலக இரண்டாவதான விஷயநிந்தா ப்ரகரணத்தில், மனைவி, புத்திரன், உறவினர், தனம், என்னும் விஷயங்களின் தோஷங்களைத் தனித் தனியாகக் காட்டுகிறார். இதை நன்கு அறிந்து தேஹாபிமானமும் நீங்கி தனக்கும் விஷயங்களுக்கும் உள்ள தொடர்பையும் விசாரித்துத் தெரிந்துகொண்டால் மமதையும் விலகி வைராக்யம் உறுதிப்படும். முதலில் ஆறு சுலோகங்களால் மனைவியைப் பற்றிக் கூறுகிறார் :—

मूढः कुरुते विषयजकर्दमसंमार्जनं मिथ्या ।
दुरदृष्टवृष्टिविरसः देहो गेहं पतत्येव ॥ २९ ॥

## 2. விஷயநிந்தாப்ரகரணம்

மூட: குருதே விஷயஜ கர்தம ஸம்மார்ஜநம் மித்யா ।
துரத்ருஷ்ட வ்ருஷ்டி விரஸ: தேஹோ கேஹம் பதத்யேவ ॥

**मूढः**-முட்டாள், **विषयज**-விஷயங்களின் ஸம்பந்தத்தால் உண்டான சிற்றின்பமாகிய, **कर्दम**-சேற்றினால், **संमार्जनं**-பூசுவதை, **मिथ्या**-வீணாக-**कुरुते**-செய்கிறான். **दुरदृष्ट**-தீவினையாகிய, **वृष्टि**-மழையால், **विरसः**-பலமற்ற, **देहो गेहं**-சரீரமாகிய வீடு, **पतत्येव**-விழுந்தேதீரும்.

மனிதனுடைய உடல் ஒரு வீடுபோன்றது. பலத்த மழை பெய்யும்பொழுது வீட்டின் மண் சுவர் நனைந்து, கரைந்து, பலமற்றுப்போய் விழுந்தருவாயில் இருக்கும்

வீட்டின்மேல் சேற்றைப்பூசி அதைக் கீழே விழாமல் பாதுகாக்க இயலுமா? அதுபோலவே இச்சரீரமாகிய வீடும் பாபம் என்ற மழையினுல் தன்னுடைய பலமனைத்தையும் இழந்து விழும் தருவாயில் இருக்கின்றது. அச்சமயத்தில் விஷயங்களால் உண்டாகும் சிற்றின்பமாகிய சேற்றைப் பூசுவதால் இதை நிலைநிறுத்திக்கொள்ள முடியுமா? சிற்றின்பங்களை நுகர நுகர இச்சரீரம் நிச்சயமாக அழிந்தே தீரும். ஆகையால் விஷய சுகங்களை அனுபவித்துக் கொண்டு இச்சரீரத்தை நீண்ட நாட்கள்வரை காப்பாற்ற லாம் என்று எண்ணுகின்றவன் ஞானமற்ற மூடன் என்பது திண்ணம். ஏனெனில் இச்சரீரம் அநித்யமானது. நிச்சயம் அழிந்தே தீரும். (29)

भार्या रूपविहीना मनसः क्षोभाय जायते पुंसाम् ।
अत्यन्तं रूपाढ्या सा परपुरुषैर्वशीक्रियते ॥ ३० ॥

பார்யா ரூபவிஹீநா மனஸ: க்ஷோபாய ஜாயதே பும்ஸாம் ।
அத்யந்தம் ரூபாட்யா ஸா பரபுருஷைர் வஶீக்ரியதே ॥

**रूपविहीना**-அழகில்லாத, **भार्या**-மனைவி, **पुंसां**-மனிதர்களுடைய, **मनसः**-மனதின், **क्षोभाय**-கலக்கத்திற்காக, **जायते**-ஆகிருள். **अत्यन्तं**-மிகுந்த, **रूपाढ्या**-அழகுவாய்ந்த, **सा**-அவள், **परपुरुषैः**-பிறமனிதர்களால், **वशीक्रियते**-வசப் படுத்தப்படுகிருள்.

உலகில் ஒவ்வொருவனும் மற்ற எல்லா விஷயங்களைக் காட்டிலும் தன் மனைவியிடமே மிகுந்த அபிமானம் கொள் கிருன். ஆனுல் அவளே ஆடவனுக்கு அளவற்ற துன்பத் தைக் கொடுக்கிருள். அவள் பார்ப்பதற்கு அழகில்லாமல் இருந்தால் அவளை மணந்த மணாளனே அவளை வெறுக் கிருன். அவளால் அவனுக்குச் சிறிதும் ஸந்தோஷம் உண்டாவதில்லை. அவள் மிகுந்த அழகுள்ளவளாக விளங்கினுலோ மற்ற ஆடவர்கள் அவள்மீது ஆசைகொள் கின்றனர். அவர்கள் அவளை மயக்கித் தன்வசமாகச்

செய்துகொண்டு விடுகின்றனர். அதனுல் அவளுடைய கணவன் மிகுந்த துன்பத்தை அடைகிருன். ஆகவே அழகு இருந்தாலும், அழகு இல்லாவிட்டாலும் மனைவியால் புருஷனுக்குத் துன்பம்தான். (30)

(அ) அழகிய மனைவியால் ஏற்படும் துன்பத்தை மேலும் விவரிக்கிருர் :—

यः कश्चित्परपुरुषो मित्रं भृत्योऽथवा भिक्षुः ।
पश्यति हि साभिलाषं विलक्षणोदाररूपवतीम् ॥ ३१ ॥

ய: கஶ்சித் பரபுருஷோ மித்ரம் ப்ருத்யோऽதவா பிக்ஷு: ।
பஶ்யதி ஹி ஸாபிலாஷம் விலக்ஷணோதார ரூபவதீம் ॥

**यः कश्चित्**-யாராவது ஒரு, **परपुरुषः**-பிறமனிதன், **मित्रं**-நண்பனே, **भृत्यः**-வேலைக்காரனே, **अथवा**-அல்லது, **भिक्षुः**-பிச்சைக்காரனே, **विलक्षणोदाररूपवतीं**-ஒப்புயர்வற்ற அழகு வாய்ந்த தன் மனைவியை, **साभिलाषं**-ஆசையுடன், **पश्यति हि**-பார்க்கிருன் அல்லவா ?

அழகிற் சிறந்த பெண்மணி அனைவரது உள்ளத்தையும் கொள்ளை கொள்கிருள். அனைவரும் அவளுடைய அழகிற்கு வசப்பட்டு விடுகிருர்கள். நண்பனே வேலைக்காரனே, அல்லது பிச்சைக்காரனே யாராயிருந்தாலும் அவளை ஆசையுடன் பார்க்கிருர்கள். இதைக் கண்டு அவள் கணவனின் மனது சஞ்சலமடைகிறது. பிறகு மிகுந்த துக்கத்திற்கு உள்ளாகிருன். (31)

यं कञ्चित्पुरुषवरं स्वभर्तुरतिसुन्दरं दृष्ट्वा ।
मृगयति किं न मृगाक्षी मनसेव परस्त्रियं पुरुषः ॥ ३२ ॥

யம் கஞ்சித் புருஷ வரம் ஸ்வபர்துரதிஸுந்தரம் த்ருஷ்ட்வா ।
ம்ருகயதி கிம் ந ம்ருகாக்ஷீ மநஸேவ பரஸ்த்ரியம் புருஷ: ॥

**पुरुषः**-மனிதன், **परस्त्रियं**-பிறருடைய மனைவியை, **मनसा इव**-மனதினுல் (விரும்புவதுபோல) **मृगाक्षी**-மானின் கண்கள்

போல் அழகிய கண்களையுடைய மாதும், स्वभर्तुः-தன் கணவனைக்காட்டிலும், अतिसुन्दरं-அதிக அழகுவாய்ந்த, यं कञ्चित्पुरुषवरं - ஏதோ ஒரு சிறந்த ஆடவனை, दृष्ट्वा - பார்த்து, किं न मृगयति-அடையவிரும்புகிறதில்லையா என்ன ?

அழகிற்கு அடிமையாகாதவர் யார்? ஆடவன் அழகிய பெண்மணியைப் பார்த்து மயங்கி அவளை அடையவேண்டு மென்று தன் மனதில் ஆசை கொள்கிறான். அதுபோலவே பெண்டிரும் தங்களுடைய கணவன்மார்களைக் காட்டிலும் சிறந்த அழகுள்ள புருஷர்களைக்கண்டு மயங்கி விடுகின்றனர். அவர்களை அடைய வேண்டுமென்று தங்களுடைய மனதிற்குள்ளேயே ஆசைப்படுகின்றனர். (32)

एवं सुरूपनार्या भर्ता कोपात् प्रतिक्षणं क्षीणः ।
नो लभते सुखलेशं बलिमिव बलिभुग् बहुष्वेकः ॥ ३३ ॥

ஏவம் ஸுரூபநார்யா பர்தா கோபாத் ப்ரதிக்ஷணம் க்ஷீண: |
நோ லபதே ஸுகலேஶம் பலிமிவ பலிபுக் பஹுஷ்வேக: ||

एवं-இம்மாதிரியாக, सुरूपनार्या-அழகுவாய்ந்த பெண்மணியால், भर्ता-கணவன், कोपात्-சினத்தால், प्रतिक्षणं-ஒவ்வொரு விநாடியும், क्षीणः - மனங்குன்றியவனாக बहुषु-அநேகம் காகங்கள் இருக்கும்பொழுது, एकः-ஒரு बलिभुक्-காகம், बलिं इव-பலியன்னத்தைப்பெற்று வருந்துவதுபோல, सुखलेशं-எள்ளளவு இன்பத்தைக்கூட नो लभते-அடைகிறதில்லை.

ஒரு காகம் பலியன்னத்தைக் கொத்தித் தின்னும் பொழுது அங்கு அநேகம் காகங்கள் வந்து கூடிவிட்டால் அந்த ஒரு காகம் பலியன்னத்தைத் தின்ன முடியாமல் வருந்துகிறது. இதுபோலவே அழகிய மனைவியைப் பெற்ற கணவன், ஆசை நோக்குடன் பிற புருஷர்கள் இவளைப் பார்ப்பதாலும், இவனைவிட அழகுவாய்ந்த பிற புருஷர்களை ஆசையுடன் இவள் பார்ப்பதாலும், இருவிதத்திலும் இதைக்

கண்டு மனதில் மிகவும் துன்புறுகிருன். தன் மனைவியைப் பார்க்கும் பிற புருஷர்களிடமும், பிற புருஷர்களைப் பார்க்கும் தன் மனைவியிடமும் கோபம்கொள்கிருன். இவ்வாறு அழகிய மனைவியைப் பெற்றும்கூட ஒவ்வொரு நிமிடமும் கிலேசமே வளர்வதால் இவனுக்கு வாழ்க்கையில் மனைவியால் சிறிதளவு இன்பம்கூட ஏற்படுவதில்லை. (33)

वनिता नितान्तमज्ञा स्वाज्ञामुल्लंघ्य वर्तते यदि सा ।
शत्रोरप्यधिकतरा पराभिलाषिण्यसौ किमुत ॥ ३४ ॥

வநிதா நிதாந்தமக்ஞா ஸ்வாக்ஞாமுல்லங்க்ய
வர்த்ததே யதி ஸா ।
ஶத்ரோரப்யதிகதரா பராபிலாஷிண்யஸௌ கிமுத ॥

**वनिता**-பெண், **नितान्तं**-மிகவும், **अज्ञा**-அறிவில்லாதவளாயும், **स्वाज्ञां**-தன்னுடைய கட்டளையை, **उल्लङ्घ्य**-மீறியும், **वर्तते यदि**-இருப்பாளாகில், **सा**-அவள், **शत्रोः अपि**-பகைவனைக்காட்டிலும், **अधिकतरा**-மிகவும் கொடியவளாக ஆகிருள். **असौ**-அவள், **पराभिलाषिणी**-வேறு ஒரு புருஷனை விரும்புகின்றவளாகவும் இருந்தால், **किमुत**-சொல்வானேன்?

அறிவற்ற மனைவி தன்னுடைய கணவனுக்கு மிகுந்த துன்பத்தையளிக்கிருள். அவள் கணவனுடைய கட்டளையை மீறி நடப்பாளாகில் பகைவனைக் காட்டிலும் மிகவும் கொடியவளாகிருள். மேலும் அவள் வேறு புருஷனை விரும்புகிறவளாகவும் இருந்தால் கூறவும் வேண்டுமா? தனக்கு அடங்கி நடக்கும் மனைவி அறிவு உள்ளவளாகவும், அழகுள்ளவளாகவும் இருந்தபோதிலும் இவளைப் பிறர் பார்ப்பதாலும், இவள் பிறரைப் பார்ப்பதாலும் புருஷன் மனதில் ஸந்தேஹம் கொண்டு சஞ்சலம் அடைகிருன் என்று முன் சுலோகங்களில் கூறப்பட்டது. அவள் அறிவில்லாதவளாகவும், தனக்கு அடங்காமலும், தன்னிடம் ஆசையில்லாமல் பிற புருஷனையே விரும்புபவளாகவும் இருந்தால் இதனுல் ஏற்படும் துன்பம் சொல்லத்

தரமன்று என்பது இந்த சுலோகத்தில் கூறப் படுகிறது. (34)

(அ) மனைவியைப் பற்றிக் கூறிவிட்டு புத்திரனாலும் ஸுகம் இல்லை என்பதை எட்டு சுலோகங்களால் கூறுகிறார். முதலில் பிள்ளை இல்லாதவனுக்கு கதி இல்லை, என்ற சுருதியின் கருத்தை விளக்குகிறார் :—

लोको नापुत्रस्यास्तीति श्रुत्याऽस्य कः प्रभाषितो लोकः ।
मुक्तिः संसरणं वा तदन्यलोकोऽथवा नाद्यः ॥ ३५ ॥

सर्वेऽपि पुत्रभाजस्तन्मुक्तौ संसृतिर्भवति ।
श्रवणादयोऽप्युपायाः मृषा भवेयुस्तृतीयेऽपि ॥ ३६ ॥

तत्प्राप्त्युपायसत्वात् द्वितीयपक्षेऽप्यपुत्रस्य ।
पुत्रेष्ट्यादिकयागप्रवृत्तये वेदवादोऽयम् ॥ ३७ ॥

லோகோ நாபுத்ரஸ்யாஸ்தீதி ஶ்ருத்யாऽஸ்ய க:
ப்ரபாஷிதோ லோக: ।
முக்தி: ஸம்ஸரணம் வா ததன்யலோகோऽதவா நாத்ய: ॥

ஸர்வேऽபி புத்ரபாஜஸ் தந்முக்தௌ ஸம்ஸ்ருதிர் பவதி ।
ஶ்ரவணாதயோப்யுபாயா: ம்ருஷா பவேயுஸ் த்ருதீயேऽபி ॥

தத்ப்ராப்த்யுபாய ஸத்வாத் த்விதீய பக்ஷேऽப்யபுத்ரஸ்ய
புத்ரேஷ்ட்யாதிக யாக ப்ரவ்ருத்தயே வேதவாதோऽயம் ॥

**अपुत्रस्य**-பிள்ளையில்லாதவனுக்கு, **लोकः**-உலகம், **नास्ति**-இல்லை, **इति**-என்று, **श्रुत्या**-வேதத்தால், **अस्य**-இவனுக்கு, **प्रभाषितः**-கூறப்பட்டுள்ள, **लोकः**-உலகம் என்பது, **कः**-யாது? **मुक्तिः**-மோக்ஷமா? **वा**-அல்லது, **संसरणं**-ஸம்ஸாரமா? **अथवा**-அல்லது, **तदन्यलोकः**-இவ்விரண்டுகளையும்தவிர வேறு ஏதாவது உலகமா? **न आद्यः**-(உலகம் என்பது) முதலாவதான மோக்ஷமல்ல, **सर्वेऽपि**-எல்லோருமே

पुत्रभाजः -புதல்வர்களைப்பெற்றவர்கள், तन्मुक्तौ-அவர்களுக்கு அப்பிள்ளைப்பேறினால் ஏற்படும் முக்தியில், संसृतिः भवति- ஸம்ஸாரம்தான் இருக்கிறது. श्रवणादयः - சிரவணம் முதலிய उपायाः अपि-உபாயங்களும்கூட, मृषा भवेयुः -வீணாகவே ஆகிவிடும். तृतीयेऽपि-மூன்றாவது பக்ஷத்திலும், तत्प्राप्त्युपाय-सत्वात् -அதை அடைய வேறு உபாயம் இருப்பதால் (அதுவும் சரியல்ல), द्वितीयपक्षेऽपि-இரண்டாவது பக்ஷத்திலும் அதை அடைய உபாயம் இருப்பதால் அதுவும் சரியல்ல. (ஆகையால்) अपुत्रस्य-பிள்ளை இல்லாதவனுக்கு, पुत्रेष्ट्यादिकयागप्रवृत्तये-புத்ரேஷ்டி முதலான யாகங்களில் ப்ரவ்ருத்தி ஏற்படுவதற்காக, अयं-இது-वेदवादः -வேதத்திலுள்ள அர்த்தவாதம்.

வேதத்தில் புத்திரனின் பெருமையைப் பற்றிப் பலவாறாகக் கூறப்பட்டுள்ளது. 'नापुत्रस्य लोकोऽस्ति' (நாபுத்ரஸ்ய லோகோऽஸ்தி) 'பிள்ளை இல்லாதவனுக்கு உலகம் இல்லை' என்று வேதம் கூறுகிறது. இங்கு கூறப்பட்ட உலகம் என்பது முக்தியா அல்லது ஸம்ஸாரமா (இவ்வுலகமா) அல்லது இவ்விரண்டைக் காட்டிலும் வேறான லோகமா (ஸ்வர்க்கமா)? இம் மூன்று பக்ஷங்களில் முதலில் கூறப்பட்ட 'புத்திரனில்லாதவனுக்கு முக்தி கிடையாது' என்ற பக்ஷம் சரியல்ல. பிள்ளை இல்லாதவனுக்கு முக்தி இல்லை என்றால் பிள்ளை பெற்றவனுக்கு முக்தி கிடைக்கும் என்று ஆகிவிடும். பிள்ளை பெற்றதனாலேயே முக்தி ஏற்படுமானால் உலகில் அநேகமாக எல்லோரும் பிள்ளை உள்ளவர்களாக இருக்கிறார்கள். இவர்கள் எல்லோரும் முக்தியை அடைந்ததாகச் சொல்லவேண்டும். ஆனால் உலகில் அவ்வாறு காணவில்லை. புத்திரன் உள்ளவர்கள் ஸம்ஸாரத்தில்தான் உழன்றுகொண்டிருக்கிறார்கள். ஆதலால் புத்திரனால் ஏற்படும் முக்தி பெயரளவில் முக்தியே தவிர உண்மையில் அது ஸம்ஸாரம் என்றுதான் சொல்லவேண்டும். மேலும் முக்திக்கு உபாயமாக சிரவணம், மனனம், நிதித்யாஸனம் முதலியவைகளை உபநிஷத்துக்கள் கூறுகின்றன. பிள்ளையாலேயே முக்தி ஏற்படுமானால்

இந்த உபாயங்கள் எல்லாம் வீண் என்று ஆகிவிடும். இவைகளை உபாயமாகக் கூறும் உபநிஷத் வாக்யங்களும் பொய்யாக ஆகிவிடும்.

புத்திரனில்லாதவனுக்கு ஸ்வர்க்கம் கிடையாது என்ற மூன்ருவது பக்ஷமும் சரியல்ல. ஸ்வர்க்கத்தை அடைவதற்கு யாகம் முதலான பல ஸாதனங்கள் வேதங்களில் கூறப்பட்டிருக்கின்றன. பிள்ளை இல்லாவிட்டாலும் இந்த ஸாதனங்களை அனுஷ்டித்து ஸ்வர்க்கத்தை அடைந்து விடலாம். பிள்ளை இல்லாதவர்கள் பலர் இவ்வுலகில் வாழ்ந்து வருவதாலும் இவர்கள் ஸுகமாக இருப்பதற்கு பல ஸாதனங்கள் இருப்பதாலும் இரண்டாவது பக்ஷமும் சரியல்ல.

இப்படியானுல் 'புத்திரன் இல்லாதவனுக்கு லோகம் இல்லை' என்று சொல்லுகிற வேத வாக்யத்தின் கருத்து என்னவெனில், வேதத்தில் புத்திரகாமேஷ்டி முதலான யாகங்கள் கூறப்பட்டிருக்கின்றன. இந்த யாகங்களை ஜனங்கள் அனுஷ்டிக்கவேண்டுமானுல் அவர்களுக்கு புத்ரனின் பெருமையை உணர்த்தவேண்டும். புத்திரன் இல்லாதவருக்கு லோகம் இல்லை என்று கூறினுல்தான் புத்திரன் இல்லாதவர்கள் தாங்கள் நல்ல லோகத்தை அடைந்து ஸுகமாக இருப்பதற்கு புத்திரனைப் பெற புத்ரேஷ்டியை அனுஷ்டிப்பார்கள். இல்லாவிட்டால் ஒருவரும் இவைகளை அனுஷ்டிக்கமாட்டார்கள். ஆகவே இந்த யாகங்களை அனுஷ்டிப்பதில் ருசி ஏற்படுவதற்காகக் கூறப்படும் அர்த்தவாத வாக்யம்தான் 'புத்ரன் இல்லாதவனுக்கு லோகம் இல்லை' என்பது (35-37)

(அ) புத்திரனுல் ஏற்படும் துன்பங்களைக் கூறுகிருர் :—

**नानाशरीरकष्टैर्धनव्ययैः साध्यते पुत्रः ।**
**उत्पन्नमात्रपुत्रे जीवितचिन्ता गरीयसी तस्य ॥ ३८ ॥**

நாநா ஶரீர கஷ்டைர் தன வ்யயை: ஸாத்யதே புத்ர: ।
உத்பந்ந மாத்ர புத்ரே ஜீவித சிந்தா கரீயஸீ தஸ்ய ॥

**पुत्रः**-புதல்வன், **नाना**-பலவிதமான, **शरीर**-தேகத்தின், **कष्टैः**-துன்பங்களாலும், **धनव्ययैः**-பணச்செலவுகளாலும், **साध्यते**-அடையப்படுகிறான். **उत्पन्नमात्रपुत्रे**-பிள்ளை பிறந்த உடனேயே, **तस्य**-அவனுடைய, **जीवितचिन्ता**-ஆயுளின் கவலை, **गरीयसी**-மிகவும் அதிகமாக ஏற்படுகிறது.

புத்திரப் பேறில்லாத மனிதன் மிகவும் வருத்தமடைகிறான். அவன் புத்திரனைப் பெறுவதற்காகப் பலவிதமான விரதங்களை அனுஷ்டிக்கிறான். பற்பல தவங்களையும் செய்கிறான். அவன் அளவற்ற செல்வத்தைச் செலவு செய்து பல புண்ய கர்மாக்களைச் செய்கிறான் இதனால் சரீரத்திற்குக் கஷ்டமும் பணச் செலவும் ஏற்படுகிறது. அதன் பயனாகப் புதல்வன் பிறந்தால் அவனுக்கு நீண்ட ஆயுள் நிலைக்க வேண்டுமே என்ற கவலை அவனுக்கு ஏற்பட்டுவிடுகிறது.

**जीवन्नपि किं मूर्खः प्राज्ञः किं वा सुशीलभाग्भविता ।**
**जारश्चौरः पिशुनः पतितो द्यूतप्रियः क्रूरः ॥ ३९ ॥**

ஜீவந்நபி கிம் மூர்க்க: ப்ராக்ஞ: கிம் வா ஸுஶீலபாக் பவிதா ।
ஜாரஶ்சௌர: பிஶுந: பதிதோ த்யூதப்ரிய: க்ரூர: ॥

**जीवन् अपि**-நீண்ட ஆயுளை உடையவனாக இருந்தாலும், **मूर्खः किम्**-முட்டாளாக இருப்பானா, **किं वा प्राज्ञः**-நல்ல அறிவாளியாக இருப்பானா, **सुशीलभाक्**-நல்லபழக்கங்களை உடையவனாக இருப்பானா, **जारः**-பிறர் மனைவியை விரும்புகின்றவனாக இருப்பானா, **चौरः**-திருடனாக இருப்பானா, **पिशुनः**-கோட்சொல்கின்றவனாக இருப்பானா, **पतितः**-கர்மப்ரஷ்டனாக இருப்பானா, **द्यूतप्रियः**-சூதாட்டத்தில் விருப்பமுள்ளவனாக இருப்பானா, **क्रूरः भविता**-அல்லது கொடியவனாக இருப்பானா? (என்ற பல கவலைகள் உண்டாகின்றன.)

ஒருவனுக்குப் பிள்ளை பிறந்தபோதிலும், அப்பிள்ளை நீண்ட ஆயுளை உடையவனாக இருந்தாலும்கூடப் பற்பல கவலைகள் உண்டாகின்றன. எதிர்காலத்தில் அவன்

மூடனாக இருப்பானா, அல்லது புத்திசாலியாகவும், நல்ல ஸ்வபாவமுள்ளவனாகவும் இருப்பானா? பிறர் மனைவியை விரும்புகின்றவனாகவோ, திருடனாகவோ, கோட்சொல்பவனாகவோ, பதிதனாகவோ, சூதாட்டத்தில் பிரியமுள்ளவனாகவோ, கொடுமை வாய்ந்தவனாகவோ ஆய்விடுவானா என்ற பற்பல கவலைகள் அவனை வாட்டுகின்றன. (39)

पितृमातृबन्धुघाती मनसः खेदाय जायते पुत्रः ।
चिन्तयति तातनिधनं पुत्रो द्रव्याद्यधीशताहेतोः ॥ ४० ॥

பித்ரு மாத்ரு பந்து காதீ மநஸ: கேதாய ஜாயதே புத்ர: ।
சிந்தயதி தாத நிதநம் புத்ரோ த்ரவ்யாத்யதீஶதா ஹேதோ:॥

पितृ-தந்தை, मातृ-தாய், बन्धु-உறவினர்கள் முதலியவர்களை, घाती-கொல்லுகின்ற, पुत्रः-பிள்ளை, मनसः-மனதின், खेदाय-வருத்தத்திற்குக் காரணமாக, जायते-ஆகிறான். पुत्रः-பிள்ளை, द्रव्यादि-செல்வம் முதலியவற்றின், अधीशताहेतोः-உரிமையின் காரணமாக, ताननिधनं-தந்தையின் மரணத்தைப்பற்றி, चिन्तयति-எண்ணுகிறான்.

ஒருவனுக்குப் பிறக்கும் பிள்ளைகள் எல்லாம் நல்லவர்களாகவே இருப்பார்கள் என்று சொல்லமுடியுமா? சில பிள்ளைகள் தங்களுடைய தாய், தந்தை, உற்றார், உறவினர் முதலியவர்களைத் துன்புறுத்தி வதைக்க ஆரம்பிப்பார்கள். அப்படிப்பட்ட பிள்ளைகள் தாய் தந்தையர்களுக்கு மனவருத்தத்தையே உண்டுபண்ணிக்கொண்டிருப்பார்கள். மேலும் சிலர் தங்கள் பெற்றோர்களுடைய செல்வம் முதலியவற்றிற்குத்தானே யஜமானராக ஆவதற்காகத் தந்தையின் மரணத்தை எதிர்நோக்கியிருப்பார்கள். தந்தையின் சொத்துக்களைத் தான் அடைவதற்காக தந்தை சாவதை விரும்புவார்கள். அதனால் அவர்களுக்கு அளவற்ற துன்பமே ஏற்படும். தன் பிள்ளைகளைக் கண்டு அவர்களது தாய் தந்தையர்கள் அஞ்சுவார்கள் पुत्रादपि धनभाजां भीतिः என்று ஸ்ரீ சங்கரபகவத்பாதர் பஜகோவிந்தத்தில் கூறுகிறார். (40)

सर्वगुणैरुपपन्नः पुत्रः कस्यापि कुत्रचिद्भवति ।
सोऽल्पायू रुग्णो वा ह्यनपत्यो वा तथापि खेदाय ॥ ४१ ॥

ஸர்வகுணைருபபந்ந: புத்ர: கஸ்யாபி குத்ரசித் பவதி ।
ஸோऽல்பாயூ ருக்ணோ வா ஹ்யநபத்யோ வா ததாபி கேதாய ॥

कुत्रचित्-எங்கேயாவது, कस्यापि-யாருக்காவது, सर्वगुणैः-எல்லா குணங்களோடும், उपपन्नः-கூடிய, पुत्रः-பிள்ளை भवति-உண்டாகிறான். तथापि-அப்படியிருந்தபோதிலும், सः-அவன், अल्पायुः-நீடித்த ஆயுள் அற்றவனாகவோ रुग्णो वा-பிணியுள்ளவனாகவோ, अनपत्यो वा-குழந்தையற்ற வனாகவோ இருப்பின், खेदाय हि-துன்பத்திற்காகவே ஆகிறானல்லவா!

உலகின்கண் எங்கேயாவது ஏதோ ஒரு சிலருக்குத் தான் அதிருஷ்ட வசத்தால் நற்குணங்களனைத்தும் ஒருங்கே நிறைந்த ஆண்மகன் ஒருவன் பிறக்கிறான். அவனும் நீண்டநாள் வாழ்வதில்லை. ஒருக்கால் நீண்டநாள் வாழ்ந்தாலும் வியாதியால் எப்பொழுதும் துன்புறுகிறான். வியாதி இல்லாவிட்டாலும் ஸந்ததியற்றவனாய்விடுகிறான். இவ்வாறு எவ்விதத்திலும் அவனுடைய பெற்றோர்கள் சொல்லொணாத்துயரத்தையே அனுபவிக்கின்றனர். (41)

(அ) புத்திரனால் இவ்வுலகில் ஸுகம் இல்லை என்பதைக் கூறிவிட்டு பரலோக ஸுகமும் கிடையாது என்று கூறுகிறார் :—

पुत्रात्सद्गतिरिति चेत्तदपि प्रायोऽस्ति युक्त्यसहम् ।
इत्थं शरीरकष्टैर्दुःखं संप्रार्थ्यते मूढैः ॥ ४२ ॥

புத்ராத் ஸத்கதிரிதி சேத் ததபி ப்ராயோऽஸ்தி யுக்த்யஸஹம் ।
இத்தம் ஶரீரகஷ்டைர் துக்கம் ஸம்ப்ரார்த்யதே மூடை: ॥

पुत्रात् -புதல்வனால், सद्गतिः -நற்கதி ஏற்படுகிறது, इति चेत् -என்றால், तदपि-அதுவும், युक्त्यसहम्-யுக்திக்குப் பொருந்தாதது. इत्थं-இவ்வாறாக, मूढैः-அறிவற்றவர்களால் शरीरकष्टैः -உடலுக்கு இன்னல்களை ஏற்படுத்திக் கொள்வதுடன், दुःखं-துன்பம், संप्रार्थ्यते-வேண்டப்படுகிறது.

இதுகாறும் புத்திரனால் இவ்வுலகில் சிறிதளவும் இன்பமே இல்லை, துன்பம்தான் என்று கூறப்பட்டது. புத்திரனால் பரலோகத்தில் ஸுகம் ஏற்படுவதற்காக இந்தக் கஷ்டங்களைப் பொறுத்துக் கொள்ளலாமெனில் அதுவும் சரியல்ல. நன்கு யுக்திகளால் விசாரித்துப்பார்த்தால் 'புத்திரனால் ஸத்கதி' என்ற வாதம் நிலைக்காது. தந்தை ஸத்கதி யடைவதற்காக தனயன் ஸத்கர்மாக்களைச் செய்வான் என்பது என்ன நிச்சயம்? ஆகையால் புத்திரனை அடைய விரும்புபவர்கள் மூடர்கள். இவர்கள் துன்பத்தைத் தான் விரும்புகிறார்கள். தம் சரீரத்தைத் துன்புறுத்தி பணத்தையும் செலவு செய்து புத்திரன் மூலம் பின்னால் தனக்குத் துன்பத்தையே தேடிக்கொள்கிறார்கள். (42)

(அ) மனைவியையும், புத்திரனையும் பற்றிக் கூறி விட்டு உறவினர்களைப் பற்றிக் கூறுகிறார் :—

पितृमातृबन्धुभगिनीपितृव्यजामातृमुख्यानाम् ।
मार्गस्थानामिव युतिरनेकयोनिभ्रमात् क्षणिका ॥ ४३ ॥

பித்ரு மாத்ரு பந்து பகினீ பித்ருவ்ய ஜாமாத்ரு முக்யாநாம் ।
மார்கஸ்தாநாமிவ யுதிரநேக யோநிப்ரமாத் க்ஷணிகா ॥

मार्गस्थानां-வழியில் உள்ளவர்களின், युतिः इव-சந்திப்பு போல, पितृ-தந்தை, मातृ-தாய், बन्धु-உறவினர்கள், भगिनी-ஸஹோதரி, पितृव्य-தந்தையின் ஸஹோதரர்கள், जामातृ-मुख्यानां-மருமகன் முதலியவர்களின், युतिः-சந்திப்பு, अनेकयोनिभ्रमात् -பல பிறவிகளில் சுழல்வதால், क्षणिका-கணநேரம் வரையில்தான் இருக்கக்கூடியது.

ஒருவன் வழியில் சென்று கொண்டிருக்கும் பொழுது பல நண்பர்களைச் சந்திக்கிறான். ஆனால் அவர்களுடைய சேர்க்கை சிறிது காலமே நீடிக்கிறது பிறகு அவன் அவர்களைப் பிரிந்து சென்றுவிடுகிறான். அதுபோலவே ஒரு ஜீவன் தன்னுடைய கர்ம வசமாகப் பல பிறவிகளையடைகிறான். ஒவ்வொரு பிறவியிலும் அவன் தாய், தந்தை, உறவினர், சகோதரி, சிற்றப்பன் பெரியப்பன் முதலிய பலரைச் சந்திக்கிறான். அவர்களுடைய ஸகவாஸம் சிறிது காலம் வரையில்தான் நிலவுகின்றது. பின்னர் அவன் அவர்களைப் பிரிந்து சென்று வேறு பிறவி எடுத்துக்கொள்கிறான். அவர்களும் இவனை விட்டுப்பிரிந்து சென்று விடுகின்றனர். இவ்வாறு பல பிறவிகளை எடுத்து வரும் ஜீவன் அந்தந்தப் பிறவியில் மட்டும், அதிலும் சிறிது காலமே தன்னிடம் சேர்ந்து வாழ்ந்துப் பிறகு பிரிந்து செல்கின்ற உறவினரிடம் வீணாக அபிமானம் கொண்டு துன்பமுறுகிறான். (43)

(அ) உறவினரின் பிரிவால் ஏற்படும் துன்பத்தைக் கூறிவிட்டு அவர்கள் இருக்கும்போதும் துன்பம் என்று கூறுகிறார் :—

दैवं यावद्विपुलं यावत्प्रचुरः परोपकारश्च ।
तावत्सर्वे सुहृदो व्यत्ययतः शत्रवः सर्वे ॥ ४४ ॥

தைவம் யாவத் விபுலம் யாவத் ப்ரசுர: பரோபகாரஶ்ச ।
தாவத் ஸர்வே ஸுஹ்ருதோ வ்யத்யயத: ஶத்ரவ: ஸர்வே ॥

**यावत्** –எது வரையில், **दैवं**–அதிருஷ்டம், **विपुलं**–அதிகமாகவும், **यावत्** –எவ்வளவு காலம், **परोपकारः** –பிறருக்குச் செய்யும் உதவி, **प्रचुरश्च**–மிகுந்ததாகவும் இருக்கிறதோ, **तावत्** -அதுவரையில், **सर्वे**-எல்லோரும், **सुहृदः** -நண்பர்களாக இருக்கிறார்கள், **व्यत्ययतः** –அதற்கு மாறாக இருக்கும்பொழுது **सर्वे**–எல்லோரும், **शत्रवः** –பகைவர்களாக ஆகிவிடுகின்றனர்.

எதுவரையில் ஒருவன் மிகுந்த அதிருஷ்டமுள்ளவனாக வும், எல்லோருக்கும் உதவி செய்கின்றவனாகவும் இருக் கிறானோ, அதுவரையில் அவனை எல்லோரும் நண்பன் என்று கொண்டாடுகிறார்கள். அவனே துரதிருஷ்டமுள்ள வனாகவும், பிறருக்கு உதவிசெய்ய இயலாதவனாகவும் ஆகி விட்டால் அவர்களே அவனுக்குப் பகைவர்களாக மாறி விடுகிறார்கள். ஆகையால் ஒருவனுக்கு உண்மையான நண்பன் கிடைப்பது மிகவும் அரிது. (44)

**अश्नन्ति चेदनुदिनं वन्दिन इव वर्णयन्ति संतृप्ताः ।**
**तच्चेत् द्वित्रदिनान्तरमभिनिन्दन्तः प्रकुप्यन्ति ॥ ४५ ॥**

அஶ்நந்தி சேதனுதினம் வந்தின இவ வர்ணயந்தி ஸந்த்ருப்தா: ।
தச்சேத் த்வித்ரதிநாந்தரமபிநிந்தந்த: ப்ரகுப்யந்தி ॥

**अनुदिनं**-தினந்தோறும், **अश्नन्ति चेत्**-அவர்கள் உண்பார் களேயாகில், **संतृप्ताः**-மிகுந்த மகிழ்ச்சியடைந்தவர்களாக, **वन्दिन इव** - ஸ்துதி பாடுகிறவர்கள்போல, **वर्णयन्ति** - புகழ் கிறார்கள். **तत्** -அவ்வுணவளித்தல், **द्वित्रदिनान्तरं चेत्** - இரண்டு மூன்று நாட்களில் நின்று விட்டால், **अभिनिन्दन्तः** - நிந்திக்கிறவர்களாய், **प्रकुप्यन्ति**-மிகுந்த கோபத்தை அடைகிறார்கள்.

அரசனிடமிருந்து உண்டியையும் பொருள்களையும் பெற்று அதனால் மிகவும் மகிழ்வுற்ற வந்திகள் தினந்தோறும் அவனுடைய புகழையே பாடி மகிழ்கின்றனர். அது போலவே ஒருவன் அளிக்கும் உண்டியைத் தினமும் உண்டு களிக்கும் உற்றார் உறவினர்கள் அவனைப் புகழ்கிறார்கள். **यावद्वितरति दाता तावद्भवति सर्वोऽपि कलभाषी ।** ஆனால் அவனே உணவளிப்பதை இரண்டு மூன்று தினங்களுக்குப் பின் நிறுத்திவிட்டால் அவனைப் புகழ்ந்தவர்கள் அவன்மீது சீற்றம் கொள்கிறார்கள். பின்னர் அவர்களே அவனைத் தூற்றவும் தலைப்பட்டுவிடுகின்றனர். (45)

(அ) பணத்தால் ஏற்படும் துன்பத்தை விவரிக்கிறார்:-

दुर्भरजठरनिमित्तं समुपार्जयितुं प्रवर्तते चित्तम् ।
लक्षावधि बहुवित्तं तथाऽप्यलभ्यं कपर्दिकामात्रम् ॥ ४६ ॥

துர்பர ஜடர நிமித்தம் ஸமுபார்ஜயிதும் ப்ரவர்த்ததே
சித்தம் ।
லக்ஷாவதி பகுவித்தம் ததாப்யலப்யம் கபர்திகாமாத்ரம் ॥

दुर्भर-நிரப்பித்திருப்தி செய்யமுடியாத, जठरनिमित्तं-வயிற்றின் பொருட்டு, लक्षावधि-லக்ஷம் வரையில், बहुवित्तं-மிகுந்த செல்வத்தை, समुपार्जयितुं-சேமித்து வைப்பதற்கு, चित्तं-மனம், प्रवर्तते-ஈடுபடுகிறது. तथापि-அவ்வாறு இருந்த போதிலும், कपर्दिकामात्रं-ஒரு சோழிகூட, अलभ्यं-கிடைப்பதில்லை.

ஒருசாண் வயிற்றை நிரப்புவதற்காக ஒருவன் படும் பாட்டை வர்ணிக்க இயலுமா? प्रादेशमात्रमुदरं पूरयितुं कियानयं यत्नः தினமும் இதை நிரப்புவதற்காக ஒருவன் தன் முழுநேரத்தையும் செலவு செய்கிறான். ஆனால் அதை நிரப்பித் திருப்திசெய்ய இயலவே இயலாது. இப் பாழும் வயிற்றிற்காக மனிதன் செய்யத்தகாத செயல்களைச் செய்து லக்ஷக்கணக்கான ரூபாய்களைச் சேமிக்க முயல்கிறான். ஆனால் அவனுக்கு ஒரு காசுகூடக் கிடைப்பது இல்லை. (46)

(அ) பணத்தைத் தேடுவதிலுள்ள சிரமத்தைக் கூறி விட்டு, அது கிடைத்தாலும் துன்பம்தான் என்கிறார் :—

लब्धश्चेदधिकोऽर्थः पत्न्यादीनां भवेत्स्वार्थः ।
नृपचोरतोऽप्यनर्थस्तस्माद् द्रव्योद्यमो व्यर्थः ॥ ४७ ॥

லப்தஶ்சேததிகோऽர்த்த: பத்ந்யாதீனாம் பவேத் ஸ்வார்த்த: ।
ந்ருபசோரதோऽப்யநர்த்தஸ் தஸ்மாத் த்ரவ்யோத்யமோ
வ்யர்த்த: ॥

**अधिकः**—ஏராளமான, **अर्थः**-செல்வம், **लब्धः चेत्**-அடையப்பட்டபோதிலும் அது, **पत्न्यादीनां**-மனைவி முதலிய வர்களுடைய, **स्वार्थः**-சொந்த சொத்தாக, **भवेत्**-ஆகிவிடும். **नृपचोरतः अपि**-அரசர்கள், திருடர்கள் இவர்களிடமிருந்தும் **अनर्थः**-தீங்கு உண்டாகும். **तस्मात्**-ஆகையால், **द्रव्योद्यमः**-செல்வத்தை சேமிக்கும் முயற்சி, **व्यर्थः**-வீணானது.

ஒருவன் மிகுந்த முயற்சியால் அளவு கடந்த செல்வத்தைச் சேர்த்து விட்டாலும் அது அவனுடைய மனைவி மக்கள் முதலியவர்களின் சொத்தாக ஆகிவிடும். அதனால் அவனுக்குச் சிறிது ஸுகங்கூடக் கிடைப்பதில்லை. மேலும் மிகுந்த பணமுள்ளவன், எங்கு அரசர்கள் தன்னுடைய செல்வத்தை வரி முதலியவைகள் மூலமாகப் பிடுங்கிக்கொண்டு போய்விடுவார்களோ, அல்லது திருடர்கள் கொள்ளையடித்துக்கொண்டு செல்வார்களோ என்று அஞ்சுகிறான். ஆதலால் பணமுள்ளவனுக்குச் சுகமேது? ஆகையால் செல்வத்தைச் சேமித்து வைப்பதற்காகச் செய்யும் முயற்சிகள் எல்லாம் பலனற்றவையே. (47)

**अन्यायमर्थभाजं पश्यति भूपोऽध्वगामिनं चौरः ।**
**पिशुनो व्यसनप्राप्तिं दायादानां गणः कलहम् ॥ ४८ ॥**

அந்யாயமர்த்தபாஜம் பச்யதி பூபோZத்வகாமிநம் சௌர: ।
பிசுநோ வ்யஸநப்ராப்திம் தாயாதாநாம் கண: கலஹம் ॥

**भूपः**—அரசன், **अन्यायं**-நியாய வழியில் செல்லாத, **अर्थभाजं**-பணக்காரனை, **पश्यति**-பார்க்கிறான். **अध्वगामिनं**-வழியில் செல்லும் அவனை, **चौरः**—திருடன், **पश्यति**-பார்க்கிறான். **पिशुनः**—துஷ்டன், **व्यसनप्राप्तिं**-அவனுக்கு ஆபத்து விளைவதை, **पश्यति**-பார்க்கிறான். **दायादानां गणः**—பங்காளிகளின் கூட்டம், **कलहं**-சண்டை ஏற்படுவதை, **पश्यति**-பார்க்கிறது.

செல்வமுள்ளவன் நியாய நெறியில் செல்லாமலிருந்தால் அரசன் அவனுடைய செல்வத்தை அபகரித்துக்கொள்வதில்

கவனம் செலுத்துகிருன். வழியில் செல்லும்போது கள்வன் அவனை வழி மறித்துப் பணத்தைப் பிடுங்கப்பார்க்கிருன். துஷ்டன் அப் பணக்காரனுக்குப் பல ஆபத்துக்களை உண்டாக்க விரும்புகிருன். பங்காளிகளின் கூட்டம் கலகத்தை விளைவிக்க விரும்புகிறது. இவ்வாறு பணக்காரன் பற்பல இன்னல்களுக்கு இலக்காகிருன். அதனால் பணத்தால் எங்ஙனம் இன்பமுண்டாகும்? ‘नास्ति ततः सुखलेशः सत्यम्’ என்று பஜகோவிந்தத்தில் ஸ்ரீ பகவத்பாதர் கூறியுள்ளார்.

पातकभरैरनेकैरर्थं समुपार्जयन्ति राजानः ।
अश्वमतङ्गजहेतोः प्रतिक्षणं नाश्यते सोऽर्थः ॥ ४९ ॥

பாதக பரைரநேகைரர்த்தம் ஸமுபார்ஜயந்தி ராஜாநः ।
அஶ்வ மதங்கஜ ஹேதோः ப்ரதிக்ஷணம் நாச்யதே
ஸோZர்த்தः ॥

राजानः–அரசர்கள், अनेकैः–பல, पातकभरैः–பாவச் செயல்களால், अर्थं–செல்வத்தை, समुपार्जयन्ति–சேமிக்கிருர்கள். सः अर्थः–அந்தச் செல்வம், अश्वमतङ्गजहेतोः–குதிரைகள் யானைகள், முதலியவைகளுக்காக, प्रतिक्षणं–ஒவ்வொரு விநாடியும், नाश्यते–அழிக்கப்படுகிறது.

அரசர்கள் பல தீய வழிகளில் மிகுந்த செல்வத்தைச் சம்பாதிக்கிருர்கள். ஆனால் அவர்கள் அவ்வாறு சம்பாதித்த பொருளைக்கொண்டு பெரிய படையை அமைத்துக் காப்பாற்ற வேண்டியிருக்கிறது. அப் படையிலுள்ள யானைகள் குதிரைகள் முதலியவற்றைப் போஷிப்பதற்காக ஒவ்வொரு கணமும் மிகுந்த பொருள் செலவு செய்யப்படுகிறது. (49)

राज्यान्तराभिगमनाद्रणभङ्गान्मन्त्रिभृत्यदोषाद्वा ।
विषशस्त्रगुप्तघातान्मग्नाश्चिन्तार्णवे भूपाः ॥ ५० ॥

ராஜ்யாந்தராபிகமநாத் ரண பங்கான் மந்த்ரி ப்ருத்ய
தோஷாத்வா ।
விஷ ஶஸ்த்ர குப்த காதாந் மக்நாஶ் சிந்தார்ணவே பூபாः ॥

**भूपाः** -அரசர்கள், **राज्यान्तर**-பிறராஜ்யத்துக்கு, **अभिगमनात्** -செல்வதாலும், **रणभङ्गात्** -போரில் முறியடிக்கப் படுவதாலும், **वा**-அல்லது, **मन्त्रिभृत्यदोषात्** -மந்திரிகள், வேலையாட்கள் இவர்களாலுண்டாகும் தோஷங்களாலும், **विष**-விஷம், **शस्त्र**-ஆயுதம் முதலியவைகளால், **गुप्तघातात्** - ரகசியமாகக் கொலை செய்தலாலும், **चिन्तार्णवे**-கவலை என்ற கடலில், **मग्नाः** -மூழ்கிவிடுகிருர்கள்.

மேலும் அரசர்கள் பலவிதமான கஷ்டங்களுக்கு உள்ளாகின்றனர். தங்களுடைய இராஜ்யங்களை இழந்து பிற ராஜ்யத்திற்குச் செல்லும்படி நேரிடுவதாலும் போரில் தோல்வியுறுதலாலும், மந்திரிகள், வேலையாட்கள் முதலிய வர்களால் ஏற்படும் தோஷங்களாலும், விஷம், கத்தி முதலியவைகளால் இரகசியமாகக் கொல்லப்படுதலாலும் உண்டாகும் கவலைக்கடலில் அவர்கள் ஆழ்ந்து தத்தளிக்கிருர்கள். இதில் '**राजान्तराभिगमनात्**' என்ற பாடத்தில் பிற அரசர்களின் படையெடுப்பாலும் என்று பொருள் கொள்ளலாம்.

இவ்வாறு மனைவி மக்கள் செல்வம் முதலிய விஷயங் களால் உண்டாகும் துக்கங்களை ஒருவன் நன்கு சிந்தித்துப் பார்த்தால் அவனுக்கு அவற்றில் வைராக்யம் ஏற்படுவது திண்ணம். ஆகையால் விஷயங்களிலுள்ள தோஷங்களை எடுத்துக் காட்டுவது வைராக்யத்திற்குக் காரணமாக ஆகிறது. இதையே ஸ்ரீ சந்திரசேகர பாரதீ ஸ்வாமிகள் விவேக சூடாமணி வ்யாக்யானத்தில் கீழ்க்கண்டவாறு விவரித்துக் கூறுகிருர்கள் :—

**आद्यन्तवत्त्व—बहुवित्तव्ययायाससाध्यत्व--परिणतिविरसत्वादि-दोषान् पुनः पुनः विषयेषु पश्यतः पुरुषस्य तत्र वैराग्यं नियतमिति विषयदोषदर्शनं वैराग्यहेतुरिति ॥**

# ३. मनोनिन्दाप्रकरणम् ॥

(அ) இந்தப் பிரகரணத்தில் மனத்தை பிசாசாகக் காட்டி அரக்கியுடன் சேர்ந்து அது படுத்தும் பாடுகளை விவரிக்கிறார் :—

हसति कदाचिद्रौति भ्रान्तं सद्दश दिशो भ्रमति ।
हृष्टं कदापि रुष्टं शिष्टं दुष्टं च निन्दति स्तौति ॥ ५१ ॥

किमपि द्वेष्टि सरोषं ह्यात्मानं श्लाघते कदाचिदपि ।
चित्तं पिशाचमभवद्राक्षस्या तृष्णया व्याप्तम् ॥ ५२ ॥

## 3. மநோநிந்தாப்ரகரணம்

ஹஸதி கதாசித் ரௌதி ப்ராந்தம் ஸத் தஶ திஶோ ப்ரமதி
ஹ்ருஷ்டம் கதாபி ருஷ்டம் ஶிஷ்டம் துஷ்டம் ச நிந்ததி ஸ்தௌதி ।

கிமபி த்வேஷ்டி ஸரோஷம் ஹ்யாத்மாநம் ஶ்லாகதே கதாசிதபி
சித்தம் பிஶாசமபவத் ராக்ஷஸ்யா த்ருஷ்ணயா வ்யாப்தம் ॥

तृष्णया-பேராசையாகிய, राक्षस्या-அரக்கியால், व्याप्तं-வியாபிக்கப்பட்ட, चित्तं-மனம், कदाचित्-ஒருசமயம், हसति-சிரிக்கிறது, कदाचित्-ஒருசமயம், रौति-அழுகிறது भ्रान्तं सत्-பிரமையடைந்ததாக, दश-பத்து, दिशः-திக்குகளிலும், भ्रमति-அலைகின்றது. कदापि-ஒருசமயம், हृष्टं-சந்தோஷமடைந்ததாயும், कदापि-ஒருசமயம், रुष्टं-கோபமடைந்ததாகவும், शिष्टं-நல்ல ஸ்வபாவமுள்ளதாகவும், दुष्टं च-கெட்ட ஸ்வபாவமுள்ளதாகவும், निन्दति-சிலவற்றை இகழ்கிறது. स्तौति-சிலவற்றைப் புகழ்கிறது. किमपि-எதையோ, सरोषं-மிகுந்த சினத்துடன், द्वेष्टि-வெறுக்கிறது. कदाचिदपि-ஒருசமயம், आत्मानं-தன்னை, श्लाघते-புகழ்ந்துகொள்கிறது. पिशाचमभवत्-இவ்வாறு மனம் பிசாசுத்தன்மை யுள்ளதாக ஆயிற்று.

பேராசை என்பது ஒரு பெரிய அரக்கி. ஒருவனைப் பேய் பிடித்துக்கொண்டால் அவன் ஒருசமயம் சிரிக்கிறான். மற்றொருசமயம் அழுகிறான். எல்லா திக்குகளிலும் அலைகிறான் இவ்வாறு ஆசையென்ற அரக்கியால் பிடித்துக் கொள்ளப்பட்ட மனம் எண்ணம் கைகூடும்பொழுது சந்தோஷமடைகிறது. அப்பொழுது அது சிரிக்கிறது. இல்லாவிடில் அது அழுகிறது பிரமை கொண்டதாகப் பத்துத் திசைகளிலும் அது அலைகின்றது. அது சில சமயத்தில் கோபமுள்ளதாகவும் பிறகு நல்ல ஸ்வபாவ முள்ளதாகவும் மாறுகின்றது. அது சிலவற்றை நிந்திக் கிறது. சிலவற்றைப் புகழ்கிறது. கோபமுள்ளதாகச் சில பொருள்களை வெறுக்கின்றது சில சமயத்தில் அது தன்னையே புகழ்ந்துகொள்கிறது. இவ்வாறு மாறுபடும் தன்மை வாய்ந்த மனம் பிசாசாக ஆய்விட்டது. இதை அடக்குவது மிகவும் கடினம். (52–53)

(அ) மனத்தின் தோஷங்களைக் கூறுகிறார் :—

**दम्भाभिमानलोभैः कामक्रोधोरुमत्सरैश्चेतः ।**
**आकृष्यते समन्ताच्छ्वभिरिव पतितास्थिवन्मार्गे ॥ ५३ ॥**

தம்பாபிமான லோபை: காமக்ரோதோருமத்ஸரைஶ் சேத: ।
ஆக்ருஷ்யதே ஸமந்தாத் ச்வபிரிவ பதிதாஸ்திவன்
மார்க்கே ॥

**मार्गे**–வழியில், **पतितास्थिवत्**–விழுந்துகிடக்கின்ற, எலும்புத்துண்டுபோன்ற, **चेतः**–மனம், **श्वभिरिव**–நாய்கள் போன்ற, **दम्भाभिमानलोभैः**–ஆடம்பரத்தாலும், நான் என்ற செருக்காலும், பேராசையாலும், **कामक्रोधोरुमत्सरैः**–காமம், கோபம், அஸூயை இவைகளாலும், **समन्तात्**–நான்கு பக்கங் களிலும், **आकृष्यते**–இழுக்கப்படுகிறது.

வழியில் விழுந்துகிடக்கும் எலும்புத் துண்டை பல நாய்கள் ஒன்றுகூடிக்கொண்டு பல திசைகளிலும் இழுப்பதுபோலவே இந்த மனம் பலவிதமான ஆடம்பரம், செருக்கு, பேராசை, காமம், கோபம், அஸூயை முதலிய

பல துர்குணங்களாலும் அங்குமிங்கும் இழுக்கப்படுகின்றது. மனம் மிகவும் சஞ்சலமானது. நிலையற்றது. அதை அடக்குவது மிகவும் கடினமானது. (53)

(அ) மனதை அடக்க உபாயம் கூறுகிறார் :—

तस्माच्छुद्धविरागो मनोभिलषितं त्यजेदर्थम् ।
तदनभिलषितं कुर्यान्निर्व्यापारं ततो भवति ॥ ५४ ॥

தஸ்மாத் சுத்தவிராகோ மநோऽபிலஷிதம் த்யஜேதர்த்தம் ।
ததநபிலஷிதம் குர்யாத் நிர்வ்யாபாரம் ததோ பவதி ॥

तस्मात् -ஆகையால், शुद्धविरागः -தூய வைராக்யத்தை உடையவனாக, मनोभिलषितं-மனம் விரும்பும், अर्थं-பொருளை त्यजेत् -விட்டுவிடவேண்டும். तत् -அந்த மனதை, अनभिलषितं- ஆசையற்றதாக, कुर्यात् -செய்யவேண்டும். ततः -அதனால், निर्व्यापारं-செயலற்றதாக, भवति-ஆகிறது.

ஒன்றிலும் பற்று இல்லாதவனாய், மனம் எந்த எந்தப் பொருளை விரும்புகிறதோ, அந்தப் அந்தப் பொருளை விட்டு விடவேண்டும். மனம் விரும்பிய பொருளைக் கொடுக்கக் கொடுக்க ஆசை வளருமே தவிற குறையாது. விரும்பிய பொருள் கிடையாததால் நிராசையாக ஆகும். இவ்விதமே அப்யாஸம் செய்து மனதில் ஆசையே தோன்றாமல் செய்ய வேண்டும். அப்பொழுது ஒருவித வியாபாரமும் இல்லாமல் மனம் அடங்கிவிடும். (54)

## ४. विषयनिग्रहप्रकरणम् ॥

(அ) விஷயங்களை விலக்குவதற்கு உபாயங்களை இந்த ப்ரகரணத்தில் கூறுகிறார். முதலில் தேஹத்தை ஓடமாகக் காட்டுகிறார் :—

संसृतिपारावारे ह्यगाधविषयोदकेन सम्पूर्णे ।
नृशरीरमम्बुतरणं कर्मसमीरैरितस्ततश्चलति ॥ ५५ ॥

# 4. விஷயநிக்ரஹப்ரகரணம்

ஸம்ஸ்ருதி பாராவாரே ஹ்யகாத விஷயோதகேந ஸம்பூர்ணே ।
ந்ருஶரீரமம்புதரணம் கர்ம ஸமீரைரிதஸ்ததஶ்சலதி ॥

अगाध-மிகவும் ஆழமுள்ள, विषयोदकेन-விஷயங்களாகிய தண்ணீரால், सम्पूर्णे-நிறைந்த, संसृति-ஸம்ஸாரமாகிய, पारावारे-ஸமுத்திரத்தில், नृशरीरं-மானிட சரீரமாகிய, अम्बुतरणं-படகு, कर्मसमीरैः-முன் ஜன்ம வினைகளாகிய காற்றுக்களால், इतस्ततः-இங்குமங்கும், चलति-சென்றுகொண்டிருக்கிறது.

இவ்வுலக வாழ்க்கை என்பது ஒரு ஆழமான ஸமுத்திரம். இதில் விஷயங்கள் என்ற தண்ணீர் நிரம்பியுள்ளது. ஆதலால் இந்த ஸமுத்திரம் கடக்க முடியாததாக இருக்கிறது. இதைக் கடக்கும் பொருட்டு ஜீவனுக்கு முன் ஜன்மத்தின் வினைப்பயனாக மானிட சரீரம் கிடைத்துள்ளது. இந்தப் படகு முற்பிறவியின் வினைகளாகிய காற்றுக்களால் இங்கும் அங்கும் சென்று கொண்டிருக்கிறது. (52)

(அ) மானிட சரீரமாகிய ஓடம் கிடைத்தும் அக்கரை சேராததற்குக் காரணம் கூறுகிறார்:—

छिद्रैर्नवभिरुपेतं जीवो नौकापतिर्महानलसः ।
छिद्राणामनिरोधाज्जलपरिपूर्णं पतत्यधः सततम् ॥ ५६ ॥

சித்ரைர் நவபிருபேதம் ஜீவோ நௌகாபதிர் மஹாநலஸ: ।
சித்ராணாமநிரோதாத் ஜல பரிபூர்ணம் பதத்யத: ஸததம் ॥

नवभिः-ஒன்பது, छिद्रैः-ஓட்டைகளுடன், उपेतं-கூடியது சரீர ஓடம், नौकापतिः-ஓடத்தின் யஜமானனான, जीवः-ஜீவன் महान्-பெரிய, अलसः-சோம்பேறி. छिद्राणां अनिरोधात्-ஓட்டைகளை அடைக்காததால், जलपरिपूर्णं-ஜலம் நிறைந்ததாக சரீர ஓடம், सततं-எப்பொழுதும், अधः-கீழே, पतति-செல்கிறது.

இந்த உடலில் கண்கள் 2, காதுகள் 2, மூக்குத்வாரங்கள் 2, வாய் 1, கீழே 2 ஆக 9 த்வாரங்கள் உள்ளன. இதன் யஜமானனுன ஜீவனே பெரிய சோம்பேரியாக இருக்கிருன். அக்கரை செல்வதற்காக கடலில் நாம் ஓடத்தில் ஏரி இருக்கும்பொழுது, அதில் அநேகம் துவாரங்கள் இருந்து, அவை அடைபடாமல், ஓடக்காரனும் சோம்பேரியாய் இருந்தால், நாம் அக்கரை சேரமுடியுமா ? ஜலத்தில் மூழ்க வேண்டியதுதான். இதுபோல், சரீரத்திலுள்ள 9 துவாரங்களும் அடைபடாமல், இதில் கவனமில்லாமல் ஜீவனும் சோம்பேரியாக இருந்தால், எல்லா விஷயங்களும் இந்த துவாரங்களின் வழியாக உட்புகுந்து, மனதைக் கலக்கி விடும். அதனுல் பல தீய கார்யங்களைச்செய்து, புண்யத்தின் பயனுகக் கிடைத்த அரிய மானிடப் பிறவியைப் பாழாக்கிக்கொள்கிருன். இதைவிடத் தாழ்ந்த பிறவியை அடைகிருன். (56)

(அ) ஸம்ஸாரஸாகரம் தாண்ட உபாயம் கூறுகிருர்:-

छिद्राणां तु निरोधात् सुखेन पारं परं याति ।
तस्मादिन्द्रियनिग्रहमृते न कश्चित्तरत्यनृतम् ॥ ५७ ॥

சித்ராணும் து நிரோதாத் ஸுகேந பாரம் பரம் யாதி ।
தஸ்மாதிந்த்ரியநிக்ரஹம் ருதே ந கஸ்சித்தரத்யந்ருதம் ॥

तु-ஆனல், छिद्राणां निरोधात्-துவாரங்களை அடைப்பதனுல், सुखेन-சுகமாக, परं पारं-மறுகரையை, याति-அடைகிருன். तस्मात्-ஆகையால், इन्द्रियनिग्रहमृते-புலனடக்கவில்லையானுல், कश्चित्-ஒருவனும், अनृतम्-ஸம்ஸாரத்தை, न तरति-தாண்டுவதில்லை.

ஸம்ஸாரமாகிய கடலைக் கடப்பதற்கு புலன்களை அடக்குவது மிகவும் இன்றியமையாத ஸாதனமாகும். புலன்களை வெளி விஷயங்களில் செல்லவிடாமல் தடுத்து அதன் அதன் நிலையில் இருக்கச்செய்வதுதான் புலனடக்கம் எனப்படும். இதற்கு மனதைக் கட்டுப்படுத்துவது அவசிய

மானது. இவ்வாறு புலனடக்கமுள்ளவன் மிகவும் எளிதாக இக்கடலைக் கடந்து மோக்ஷத்தை அடைகிருன். (57)

(அ) சப்தம் முதலான விஷயங்கள் இந்திரியங்களுடன் சேருவதால் உண்டாகும் துன்பங்களைக் கூறுகிருர் :—

पश्यति परस्य युवतिं सकाममपि तन्मनोरथं कुरुते ।
ज्ञात्वैव तदप्राप्तिं व्यर्थं मनुजोऽतिपापभाग्भवति ॥ ५८ ॥

பஶ்யதி பரஸ்ய யுவதிம் ஸகாமமபி தன்மனோரதம் குருதே।
ஞாத்வைவ ததப்ராப்திம் வ்யர்த்தம் மனுஜோऽதிபாப
பாக் பவதி ॥

**मनुजः**–மனிதன், **परस्य**–பிறருடைய, **युवतिं**–இளமங்கையை, **सकामं**–ஆசையுடன், **पश्यति**–பார்க்கிருன். **तन्मनोरथमपि**–அவளிடத்தில் விருப்பத்தையும், **कुरुते**–கொள்கிருன். **तदप्राप्तिं**–அவளை அடையமுடியாததை, **ज्ञात्वैव**–அறிந்துகொண்டும்கூட, **व्यर्थं**-வீணுக, **अतिपापभाक्**-மிகுந்த பாபத்தையே செய்தவனுக, **भवति**–ஆகிருன்.

காமம் என்பது ஒரு பெரிய சத்ரு இதனுல் தூண்டப்பட்டு மனிதன் செய்யத்தகாத காரியங்களையும் செய்யத் துணிகிருன். காமத்தால் பிறர் மனைவியை ஆசையுடன் பார்க்கிருன். அவளை அடைவதற்கு விருப்பமும் கொள்கிருன். அவளை அடையமுடியாது என்று நிச்சயமாக அறிந்தும் வீணுகத் தீய எண்ணத்திஞல் பாபத்தையே சம்பாதித்தவனுக ஆகிருன். (58)

(அ) கண்ணுல் வரும் துன்பத்தைக் கூறிவிட்டு காதால் வரும் துன்பத்தைக் கூறுகிருர் :—

पिशुनैः प्रकाममुदितां परस्य निन्दां शृणोति कर्णाभ्याम् ।
तेन परः किं म्रियते व्यर्थं मनुजोऽतिपापभाग्भवति ॥ ५९ ॥

பிஶுனை: ப்ரகாமமுதிதாம் பரஸ்ய நிந்தாம்
ஶ்ருணோதி கர்ணாப்யாம் |
தேந பர: கிம் ம்ரியதே வ்யர்த்தம்
மனுஜோऽதிபாபபாக் பவதி ||

**मनुजः**-மனிதன், **पिशुनैः**-கோட்சொல்லுகின்றவர்களால், **प्रकामं**-மிகவும் சந்தோஷத்துடன், **उदितां**-கூறப்பட்ட, **परस्य**-பிறருடைய, **निन्दां**-இகழை, **कर्णाभ्यां**-இருசெவிகளாலும், **श्रृणोति**-கேட்கிறான். **तेन**-அதனால், **परः**-மற்றவன் **म्रियते किम्**-இறக்கிறானா என்ன? **मनुजः**-மனிதன், **व्यर्थं**-வீணாக, **अतिपापभाक्**-பாபத்தைச் செய்கிறவனாக, **भवति**-ஆகிறான்.

முன்பு கண்களால் எவ்வாறு ஒரு மனிதன் பாபத்தை அடைகிறான் என்று கூறப்பட்டுள்ளது. இங்கு செவிகள் எவ்வாறு பாபத்திற்குக் காரணமாகின்றன என்று காட்டப்படுகின்றது. துஷ்டர்கள் கோள் சொல்லுவதையே தங்களுடைய குறிக்கோளாகக் கொண்டு பெரியோர்களை இகழ்ந்து பேசுகின்றனர். அவ்வாறு கோட் சொல்லுகிறவர்களால் மிகவும் சந்தோஷத்துடன் கூறப்படும் நிந்தையான சொற்களை அகமகிழ்ச்சியுடன் செவி சாய்த்துக் கேட்கிறான். அப்படிக் கேட்பதால் பெரியோர்களுக்கு என்ன நஷ்டம்? அவர்களுக்கு அதனால் சாவு உண்டாகுமா? இல்லை. ஆனால் அவ்வாறு கோள் சொல்லுகின்றவனுடைய வார்த்தைகளைக் கேட்கின்றவனுக்கே மிகுந்த பாபமுண்டாகிறது. **'न केवलं यो महतोऽपभाषते श्रृणोति तस्मादपि सः स पापभाक्'**

**अनृतं परापवादं रसना वदति प्रतिक्षणं तेन ।**
**परहानिर्लब्धा का व्यर्थं मनुजोऽतिपापभाग्भवति ॥ ६० ॥**

அந்ருதம் பராபவாதம் ரஸநா வததி ப்ரதிக்ஷணம் தேந |
பரஹாநிர் லப்தா கா வ்யர்த்தம் மனுஜோऽதிபாபபாக் பவதி||

**रसना**-நாக்கு, **प्रतिक्षणं**-ஒவ்வொருகணமும், **अनृतं**-பொய்யையும், **परापवादं**-பிறருடைய நிந்தையையும், **वदति**-

பேசுகின்றது. तेन-அதனால், का परहानिः-பிறருக்கு என்ன நஷ்டம், लब्धा-கிடைத்தது? व्यर्थं-வீணாக, मनुजः-மனிதன் अतिपापभाक् भवति-மிகுந்த பாபத்திற்குப் பாத்திரனாக ஆகிறான்.

நாக்கு ஒவ்வொரு நிமிஷமும் பொய் பேசுகிறது. பிறரைப் பற்றி இகழ்ந்து பேசுகிறது. இதனால் பிறருக்கு யாதொரு தீங்கும் ஏற்படுவதில்லை. ஆனால் இவ்வாறு இகழ்ந்து பேசுகிற மனிதனே மிகுந்த பாவத்திற்குள்ளாகிறான். இதைத் தவிர பொய் சொல்கிறவனுக்கு வேறு ஒரு லாபமும் கிடையாது. (60)

(அ) ஸ்பர்ச ஸுகத்தைப் பற்றிக் கூறுகிறார் :—

विषयेन्द्रिययोर्योगे निमेषसमयेन यत्सुखं भवति ।
विषये नष्टे दुःखं यावज्जीवं च तत्तयोर्मध्ये ॥ ६१ ॥

हेयमुपादेयं वा प्रविचार्य सुनिश्चितं तस्मात् ।
अल्पसुखस्य त्यागादनल्पदुःखं जहाति सुधीः ॥ ६२ ॥

விஷயேந்த்ரியயோர் யோகே நிமேஷ ஸமயேந
யத் ஸுகம் பவதி ।
விஷயே நஷ்டே துக்கம் யாவஜ்ஜீவம் ச தத்தயோர் மத்யே ॥

ஹேயமுபாதேயம் வா ப்ரவிசார்ய ஸுநிச்சிதம் தஸ்மாத் ।
அல்ப ஸுகஸ்ய த்யாகாதநல்ப துக்கம் ஜஹாதி ஸுதீ: ॥

विषयेन्द्रिययोः-விஷயங்களுக்கும் புலன்களுக்கும், योगे-ஸம்பந்தம் ஏற்படும்பொழுது, निमेषसमयेन-ஒரு விநாடி நேரத்தில், यत्-யாதொரு, सुखं-இன்பம், भवति-உண்டாகிறதோ, तत्-அந்த இன்பம், विषये नष्टे-பொருள் நாசமடையும்பொழுது, यावज्जीवं च-உயிருள்ளவரையிலும் दुःखं-துன்பமாக, भवति-ஆய் விடுகின்றது. तस्मात्-ஆகையால், तयोः मध्ये-அவ்விரண்டுகளுக்குள், हेयं-விடத்தகுந்ததையோ, उपादेयं वा-ஏற்றுக்கொள்ளத்தக்கதையோ,

सुनिश्चित्य - மிகவும் தீர்மானமாக, प्रविचार्य - நன்கு ஆலோசித்து, सुधीः-புத்தியுள்ள மனிதன், अल्पसुखस्य- அற்ப சுகத்தினுடைய, त्यागात् -தியாகத்தினுல், अनल्पदुःखं- மிகுந்த துன்பத்தை, जहाति-விட்டுவிடுகிருன்.

இந்திரியத்துக்கும் விஷயத்திற்கும் சேர்க்கை ஏற்படும் பொழுது ஒருக்ஷணநேரம் இன்பம் ஏற்படுகிறது. இது நீடித்து இருப்பதில்லை. இந்த விஷயம் நம்மைவிட்டுப் பிரிந்து சென்றதும் இன்பம் போய்விடுகிறது. இதுமட்டுமா? விஷயம் பிரிந்து சென்றதாலும், இந்த ஸுகம் நீங்கிய தாலும் துக்கம் ஏற்படுகிறது. இது நீடித்திருக்கிறது. விஷயத்தை நினைத்து நினைத்து வாழ்நாள் முழுவதும் துன்பப்படுகிருன். ஆகவே விஷய ஸுகத்தில் ஆசை, வெறுப்பு இவ்விரண்டிற்குள் எது விலக்கத்தக்கது, எது ஏற்றுக்கொள்ளத்தக்கது என்பதைத் தன் புத்தியால் உலக அனுபவங்களைக்கொண்டு நன்கு விசாரித்துத் தீர்மானித்து, விஷயங்களில் ஆசைகொள்ளாமல் வெறுப்படைந்து, முதலில் வந்து சிறிதுநேரம் மட்டும் இருக்கும் விஷய ஸுகத்தை விலக்கிவிட்டால் பின்னுல் துக்கமே ஏற்படாது. அல்ப ஸுகத்தை த்யாகம் செய்வதால் அதிகமான துக்கத்தையும் வராமல் செய்துகொள்ளலாம். புத்திமான் இவ்விதம்தான் செய்வான்.

‘ विषयेन्द्रियसंयोगाद्यत्तदग्रेऽमृतोपमम् ।
परिणामे विषमिव तत्सुखं राजसं स्मृतम् ’ ॥ (கீதை 18-38)

‘ परीक्ष्य लोकान् ब्राह्मणो निर्वेदमायात् ’ (முண்டகோபநிஷத்)

धीवरदत्तमहामिषमश्नन् वैसारिणो म्रियते ।
तद्वद्विषयान् भुञ्जन् कालाकृष्टो नरः पतति ॥ ६३ ॥

தீவர தத்த மஹாமிஷமச்னன் வைஸாரிணோ ம்ரியதே ।
தத்வத் விஷயான் புஞ்ஜன் காலாக்ருஷ்டோ நர: பததி ॥

धीवर-செம்படவனுல், दत्त-கொடுக்கப்பட்ட, महामिषं- பெரிய மாம்ஸத்துண்டை, अश्नन् -சாப்பிட்டுக்கொண்டு,

**वैसारिणः**-மீன், **म्रियते**-உயிரை இழக்கின்றது. **तद्वत्**-அது போலவே, **विषयान्**-சிற்றின்பங்களை, **भुञ्जन्**-அனுபவித்துக் கொண்டு, **कालाकृष्टः**-காலனுல் இழுக்கப்பட்ட, **नरः**-மனிதன் **पतति**-வீழ்கிருன்.

செம்படவன் மீனைப் பிடிப்பதற்காகத் தன்னுடைய தூண்டிலில் மாமிசத்துண்டை வைத்து அதைத் தண்ணீருக்குள் போடுகிருன். அதைக் கண்டவுடன் மீன் அதனை அணுகி அதிலுள்ள மாமிசத்தை மிகுந்த மகிழ்ச்சியுடன் சாப்பிட ஆரம்பிக்கின்றது. அதனுல் அது தூண்டிலில் அகப்பட்டுக்கொண்டு செம்படவனுல் பிடித்துக்கொள்ளப் படுகிறது. இவ்வாறு விஷய சுகத்தின் ஆசையால் அம்மீன் தன்னுடைய உயிரையே இழக்கிறது. அதுபோலவே மனிதனும் பற்பல சிற்றின்பங்களை அனுபவித்துக்கொண்டு தன்னுடைய வாழ்க்கையின் இலக்ஷியத்தை மறந்துவிடுகிருன். இதனுல் அவன் காலனுடைய வசத்தை அடைந்து தன்னையே நாசப்படுத்திக்கொண்டுவிடுகிருன். அவன் தாழ்ந்த பிறவிகளில் விழுந்துவிடுகிருன். அதனுல் அவனுக்கு உயர்ந்த சுகம் ஏற்படாமல் போய்விடுகிறது.

**उरगग्रस्तार्धतनुर्भेकोऽश्नातीह मक्षिकाः शतशः ।**
**एवं गतायुरपि सन्विषयान् समुपार्जयत्यन्धः ॥ ६४ ॥**

உரக க்ரஸ்தார்த்த தனுர் பேகோऽஶ்நாதீஹ மக்ஷிகா: ஶதஶ: ।
ஏவம் கதாயுரபி ஸந் விஷயாந் ஸமுபார்ஜயத்யந்த: ॥

**इह**-இவ்வுலகில், **उरग**-பாம்பினுல், **ग्रस्त**-விழுங்கப்பட்ட, **अर्धतनुः**-பாதி உடலை உடைய, **भेकः**-தவளை, **शतशः**-நூற்றுக்கணக்கான **मक्षिकाः**-ஈக்களை, **अश्नाति**-தின்கின்றது **एवं**-இம்மாதிரியாகவே, **अन्धः**-பகுத்தறிவற்றவன், **गतायुः अपि सन्**-தன் ஆயுள் சென்றுகொண்டே இருந்தாலும், **विषयान्**-விஷய சுகங்களையே, **समुपार्जयति**-சம்பாதிக்கிருன்.

ஒரு பாம்பு ஒரு தவளையைப் பிடித்து விழுங்கிக் கொண்டிருக்கிறது. அத் தவளையின் பாதி உடல் பாம்பின்

வாய்க்குள் சென்று விட்டது. அப்பொழுது கூட அது தனக்கெதிரில் பறக்கின்ற ஈக்களை நூற்றுக்கணக்காகத் தின்று கொண்டிருக்கிறது. விஷயங்களை அனுபவிக்கும் பொழுது அது தன்னுடைய உயிர் போய்க்கொண்டிருப் பதைக்கூட எண்ணுவதில்லை அதுபோலவே பகுத்தறிவற்ற மனிதன் விஷய சுகங்களிலேயே பற்றுள்ளவனாக இருக் கிறான். ஒவ்வொரு நாளும் அவனுடைய உயிர் போய்க் கொண்டே இருக்கிறது. அவன் யமனுடைய வாயில் அகப் பட்டுக்கொண்டு விடுகிறான். அவ்வாறு இருந்தும் அவன் அதைப் பொருட்படுத்துவதில்லை. அவன் விஷய சுகங் களையே நாடுகிறான். (64)

# ५. मनोनिग्रहप्रकरणम् ॥

(அ) மனத்தை அடக்குவதற்கு உபாயங்களைக் கூறுகிறார் :—

स्वीयोद्गमतोयवहा सागरमुपयाति नीचमार्गेण ।
सा चेदुद्गम एव स्थिरा सती किं न याति वार्धित्वम् ॥ ६५ ॥

## 5. மனோநிக்ரஹப்ரகரணம்

ஸ்வீயோத்கம தோயவஹா ஸாகரமுபயாதி நீசமார்கேண ।
ஸா சேதுத்கம ஏவ ஸ்திரா ஸதீ கிம் ந யாதி வார்த்தித்வம் ॥

**स्वीयोद्गमतोयवहा** – தான் உற்பத்தியாகுமிடத்திலிருந்து பெருகும் நதி, **नीचमार्गेण**–பள்ளத்தாக்கின் வழியாக, **सागरं**-சமுத்திரத்தை, **उपयाति**–அடைகிறது. **सा**–அது, **उद्गमे एव**-உண்டாகுமிடத்திலேயே, **स्थिरा सती चेत्** -நிலையாக நீடித் திருக்குமாகில், **वार्धित्वं**–சமுத்திரத்தின் தன்மையை, **किं न याति**-ஏன் அடையாது?

ஒரு நதி மலையிலிருந்து கிளம்பிக் கீழ் நோக்கி ஓடு கின்றது. அதன் தண்ணீர் பள்ளத்தாக்குகளின் வழியாகச் சென்று ஸமுத்திரத்தில் போய் கலக்கிறது. ஆனால் அவ்

வாறு அந்நீரை ஓடவிடாமல் தடுத்து அங்கேயே தேக்கி விட்டால் அதுவே ஒரு பெரிய ஸமுத்திரமாகி விடுகிறது.

एवं मनः स्वहेतुं विचारयत्सुस्थिरं भवेदन्तः ।
न बहिर्वोदेति तदा किं नात्मत्वं स्वयं याति ॥ ६६ ॥

ஏவம் மந: ஸ்வஹேதும் விசாரயத் ஸுஸ்திரம் பவேதந்த: ।
ந பஹிர்வோதேதி ததா கிம் நாத்மத்வம் ஸ்வயம் யாதி ॥

**एवं**-இம்மாதிரி, **मनः**-மனம், **स्वहेतुं**-தன்னுடைய காரணத்தை, **विचारयत्**-நன்கு விசாரணை செய்துகொண்டு, **अन्तः**-உள்ளேயே, **सुस्थिरं भवेत्**-நிலைபெற்று இருந்தால், **बहिर्वा नोदेति**-வெளியே செல்லாமலுமிருந்தால், **तदा**-அப்பொழுது, **स्वयं**-தானே, **आत्मत्वं**-ஆத்மாவின் தன்மையை, **किं न याति**-ஏன் அடையாது?

தண்ணீர் தன்னுடைய உத்பத்தி ஸ்தானத்திலிருந்து கீழ் நோக்கிச் செல்லுவதுபோல மனதும் தன் உத்பத்தி ஸ்தானமாகிய ஆத்மாவை விட்டுவிட்டு வெளி விஷயங்களை நோக்கிச் செல்கிறது. அவ்வாறு அதை வெளியே செல்ல விடாமல் தடுத்து தனக்குள்ளேயே நிலையாக இருக்கும்படி செய்து விட்டால், நதியே ஸமுத்திரமாக ஆவதுபோல் மனதும் ஆத்மாவின் தன்மையை அடைந்துவிடும். (66)

(அ) வைராக்யத்தால் மனதில் ஸத்வகுணம் மேலிடுவதை திருஷ்டாந்தத்தால் விளக்குகிறார் :—

वर्षास्वम्भःप्रचयात् कूपे गुरुनिर्झरे पयः क्षारम् ।
ग्रीष्मेणैव तु शुष्के माधुर्यं भजति तत्राम्भः ॥ ६७ ॥

வர்ஷாஸ்வம்ப: ப்ரசயாத் கூபே குருநிர்ஜரே பய: க்ஷாரம் ।
க்ரீஷ்மேணைவ து ஶுஷ்கே மாதுர்யம் பஜதி தத்ராம்ப: ॥

**वर्षासु**-மழைகாலத்தில், **अम्भःप्रचयात्**-தண்ணீர் பெருக்கால், **गुरुनिर्झरे**-ஊற்று அதிகமாக உள்ள, **कूपे**-கிணற்றில்,

**पयः**–தண்ணீர், **क्षारं**–உப்பாக இருக்கிறது. **तु**–ஆனால், **ग्रीष्मेणैव**–கோடையினாலேயே, **शुष्के**–வற்றும்பொழுது, **तत्र**–அதில், **अम्भः**–தண்ணீர், **माधुर्यं भजति**–இனிய சுவையை அடைகிறது.

மழை காலத்தில் அதிகமாக மழை பெய்கிறது. அதனால் எல்லா இடங்களிலும் தண்ணீர் நிரம்பிவிடுகிறது. கிணற்றிலும் ஊற்றுப் பெருகுகிறது. இதனால் கிணற்றின் ஜலம் உவர்ப்பாக மாறிவிடுகிறது. ஆனால் கோடை காலத்தில் ஜலம் வற்ற ஆரம்பிக்கிறது. அப்பொழுது கிணற்றுத் தண்ணீர் இனிய சுவையை அடைகிறது. (67)

तद्वद्विषयोद्रिक्तं तमःप्रधानं मनः कलुषम् ।
तस्मिन्विरागशुष्के शनकैराविर्भवेत्सत्त्वम् ॥ ६८ ॥

தத்வத் விஷயோத்ரிக்தம் தம:ப்ரதானம் மந: கலுஷம் ।
தஸ்மிந் விராகஶுஷ்கே ஶநகைராவிர்பவேத் ஸத்வம் ॥

**तद्वत्**–அது போலவே, **विषयोद्रिक्तं**–விஷயங்களில் ஈடுபட்ட, **मनः**–மனம், **कलुषं**–கலக்கமடைந்து, **तमःप्रधानं**–தமோ குணத்தையே முக்கியமாகக்கொண்டதாக ஆகிறது. **तस्मिन् विरागशुष्के**–அது வைராக்யத்தால் வரண்டுபோகும் பொழுது, **शनकैः**–மெதுவாக, **सत्त्वं**–ஸத்வகுணம், **आविर्भवेत्**–மேலிடும்.

அதுபோலவே பற்பல விஷயங்களில் ஈடுபடுவதால் மனதில் அநேக எண்ணங்கள் வந்து குடிகொள்கின்றன. அதனால் மனம் கலங்கி தமோகுணம் நிறைந்ததாக ஆகிவிடுகின்றது. ஆனால் ஒருவன் விஷயங்களில் வெறுப்படைந்து வைராக்யத்தை அடைந்தால் மனதில் குடிகொண்டுள்ள தமோகுணம் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்து பின்னர் ரஜோகுணமும் குறைந்துபோய் கடைசியாக ஸத்வகுணம் மேலிடுகின்றது. (68)

(அ) மனத்தால் ஏற்படும் துன்பத்தைக் கூறுகிறார் :–

यं विषयमपि लषित्वा धावति बाह्येन्द्रियद्वारा ।
तस्याप्राप्तौ खिद्यति तथा यथा स्वं गतं किंचित् ॥ ६९ ॥

யம் விஷயமபி லஷித்வா தாவதி பாஹ்யேந்த்ரிய த்வாரா ।
தஸ்யாப்ராப்தௌ கித்யதி ததா யதா ஸ்வம் கதம் கிஞ்சித்॥

**यं विषयमपि**–எந்த விஷயத்தையும், **लषित्वा**–விரும்பி, **बाह्येन्द्रियद्वारा**–வெளிப்பொறிகளின் மூலமாக, **धावति**-மனம் ஓடுகின்றது. **यथा**-எவ்வாறு, **गतं**-இழந்த, **किंचित्**-சிறிது, **स्वं**–செல்வத்தைக் குறித்து வருந்துகிறானோ, **तथा**-அவ்வாறு, **तस्य अप्राप्तौ**–அந்த விஷயம் கிடைக்காதபொழுது, **खिद्यति**-வருந்துகிறது.

மனம் விஷயங்களை விரும்பிக் கண் காது முதலிய பொறிகளின் வழியாக அவைகளை அடைவதற்கு வெளியில் ஓடுகிறது. ஆனால் அப்பொருள் கிடைக்காவிடில், தன் ஸ்வல்ப பணத்தை இழந்த மனிதன் வருந்துவதுபோல் மனமும் மிகவும் வருத்தம் அடைகிறது. தான் விரும்பிய பொருள் கிட்டாதபொழுது தன்னிடம் இருக்கும் பொருளை இழந்ததுபோல் எண்ணித் துன்புறுகிறது. மேலும் இழந்த பொருள் சிறிதாயினும் வருத்தம் அதிகமாக ஏற்படுவது போல மனமும் கிட்டாத பொருளில் ஆசைகொண்டு அதிகத் துன்பத்தை அனுபவிக்கிறது. (69)

नगनगरदुर्गदुर्गमसरितः परितः परिभ्रमच्चेतः ।
यदि नो लभते विषयं विषयन्त्रितमिव खिन्नमायाति ॥ ७० ॥

நகநகரதுர்கதுர்கமஸரித: பரித: பரிப்ரமச்சேத: ।
யதி நோ லபதே விஷயம் விஷயந்த்ரிதமிவ கிந்நமாயாதி ॥

**चेतः**–மனம், **नग**–மலை, **नगर**–பட்டணம், **दुर्ग**-கோட்டை, **दुर्गम**–போகமுடியாத, **सरितः**–ஆறுகள் ஆகிய இடங்களில் **परितः**–சுற்றிலும், **परिभ्रमत्**-திரிந்துகொண்டு, **विषयं**-பொருளை, **यदि नो लभते**–அடையாவிட்டால், **विषयन्त्रितं इव**-

விஷத்தினுல் அடக்கப்பட்டதுபோல, खिन्न-வருத்தத்தை அடைந்து आयाति-திரும்பிவிடுகிறது.

மனம் விஷயத்தை நாடி எல்லா இடங்களிலும் அலைந்து திரிகின்றது. அது மலைகளிலும் பட்டணங்களிலும் நுழைய முடியாத கோட்டைகளிலும் மற்றும் இறங்க முடியாத ஆறுகளிலும் பொருள்களை நாடி அலைகின்றது. அந்தப் பொருள் அதற்குக் கிடைக்காவிடில் அது விஷத்தினுல் கட்டுப்பட்டதுபோலத் திரும்பிவிடுகிறது. (70)

(அ) மனதை நிலை நிறுத்துவது கடினமென்கிறுர் :-

तुम्बीफलं जलान्तर्बलादधः क्षिप्तमप्युपैत्यूर्ध्वम् ।
तद्वन्मनः स्वरूपे निहितं यत्नाद्बहिर्याति ॥ ७१ ॥

தும்பீபலம் ஜலாந்தர் பலாதத: க்ஷிப்தமப்யுபைத்யூர்த்வம் ।
தத்வன் மந: ஸ்வரூபே நிஹிதம் யத்நாத் பஹிர் யாதி ॥

तुम्बीफलं-உலர்ந்த சுரைப்பழம், जलान्तः-தண்ணீருக்குள் अधः-கீழே, बलात्-பலமாக, क्षिप्तं अपि-எறியப்பட்டாலும்கூட ऊर्ध्वं-மேலே, उपैति-வந்துவிடுகிறது, तद्वत्-அதுபோலவே मनः-மனம், स्वरूपे-ஆத்மாவினிடம், यत्नात्-முயற்சியுடன், निहितं-வைக்கப்பட்டாலும், बहिः-வெளியே, याति-சென்று விடுகிறது.

மனதை அடக்கி பரம் பொருளிடத்தில் நிலைக்கச் செய்வது மிகவும் கடினம். நன்ருக உலர்ந்துபோன ஒரு சுரைக்காயை எடுத்து அதை முழு பலத்துடன் தண்ணீருக்குள் அடிவரை போகும்படி எறிந்தாலும் அது அங்கு இருப்பதில்லை. அது விரைவில் மேலே வந்து விடுகின்றது. அதுபோலவே ஒருவன் எவ்வளவு சிரமப்பட்டு மனதை வெளி விஷயங்களில் செல்ல விடாமல் தடுத்து தன் ஸ்வரூபத்தில் நிலைக்கும்படியாகச் செய்தபோதிலும் அது அங்கிருந்து வேகமாக வெளியே சென்று விடுகின்றது. அதை அடக்குவது காற்றை அடக்குவதுபோல் மிகவும் கடினமானது.

(அ) விஷயங்கள் வினைப்பயன் என்பதைக் கூறுகிறார் :—

**इह वा पूर्वभवे वा स्वकर्मणैवार्जितं फलं यद्यत् ।**
**शुभमशुभं वा तत्तद्भोगोऽप्यप्रार्थितो भवति ॥ ७२ ॥**

இஹ வா பூர்வபவே வா ஸ்வகர்மணைவார்ஜிதம் பலம் யத்யத் ।
ஶுபமஶுபம் வா தத்தத்போகோऽப்யப்ரார்த்திதோ பவதி ॥

**इह वा**-இப்பிறவியிலோ, **पूर्वभवे वा**-அல்லது முற்பிறவியிலோ, **स्वकर्मणा एव**-தன்னுடைய வினையினாலேயே, **यत् यत्**-எந்தெந்த, **फलं**-பலன், **आर्जितं**-சம்பாதிக்கப்பட்டிருக்கிறதோ, **शुभं वा**-நல்லதாயினும், **अशुभं वा**-தீயதாயினும், **तत् तत्**-அந்தந்தப் பலனின், **भोगः अपि**-அனுபவமும், **अप्रार्थितः**-விரும்பப்படாமலேயே, **भवति**-ஏற்படுகிறது.

ஒவ்வொருவனும் தான் செய்த வினையினுடைய பலனை அனுபவித்தே தீரவேண்டும் ஒருவன் இப்பிறவியிலாவது அல்லது முற்பிறவியிலாவது நல்ல கர்மாக்களைச் செய்திருந்தால் அதன் பயனாக அவனுக்குச் சுபம் ஏற்படுகின்றது. அதுபோலவே ஒருவன் தீய கார்யங்களைச் செய்திருந்தால் அதன் பயனாக அவன் துன்பங்களையே அனுபவிக்கிறான். ஆனால் ஒருவனும் தனக்குத் துன்பம் நேரிடவேண்டுமென்று கோருவது இல்லை. அவ்வாறு இருப்பினும் தீய கார்யங்களின் பயனாகக் கட்டாயம் துன்பம் ஏற்படுகிறது. இதைத் தடுக்க முடிவதில்லை. இது போலவே நல்வினை இருந்தால் அதன் பயனாக நல்ல விஷயங்களும் இன்பமும் கட்டாயம் ஏற்படும். நல்வினை இல்லாவிட்டால் எவ்வளவு முயற்சித்தும் இன்பம் கிட்டாது. ஆகவே விஷயத்தால் ஏற்படும் இன்பம் வினைப்பயனாக இருக்க, அதைத்தேடி அலைந்து வீணாக ஏன் சிரமப்படவேண்டும்? (72)

(அ) மனத்தை அடக்க வைராக்யத்தையே உபாயமாகக் கூறுகிறார் :—

चेतःपशुमशुभपथं प्रधावमानं निराकर्तुम् ।
वैराग्यमेकमुचितं गलकाष्ठं निर्मितं धात्रा ॥ ७३ ॥

சேத: பஶுமஶுப பதம் ப்ரதாவமாநம் நிராகர்த்தும்.।
வைராக்யமேகமுசிதம் கலகாஷ்டம் நிர்மிதம் தாத்ரா ॥

**अशुभपथं**-தீயவழியில், **प्रधावमानं**-வேகமாகஓடிக்கொண்டிருக்கும், **चेतःपशुं**-மனதாகிய மிருகத்தை, **निराकर्तुं**-தடுப்பதற்கு, **धात्रा**-பிரம்மதேவரால், **वैराग्यं**-பற்றின்மை என்ற, **एकं**-ஒரு, **उचितं**-தகுதிவாய்ந்த, **गलकाष्ठं**-கழுத்துக் கட்டை, **निर्मितम्** -ஏற்படுத்தப்பட்டிருக்கின்றது.

மனம் என்பது கட்டுக்கடங்காத ஒரு பசு. மதங்கொண்ட அப்பசு தன்னிஷ்டப்படி அலைந்து திரிகின்றது. மாடு மேய்ப்பவன் அதை அடக்கிவைப்பதற்காக அதனுடைய கழுத்தில் ஒரு பெரும் கட்டையைக் கட்டிவிடுகிறான். அதனால் அது கட்டுப்பட்டு தன் இஷ்டப்படி ஓடமுடியாமல் அடங்கிவிடுகின்றது. அதுபோலவே பிரம்மதேவர் மனம் என்ற பசுவைக் கட்டுப்படுத்த பற்றின்மை என்ற கழுத்துக் கட்டை ஒன்றை ஏற்படுத்தியிருக்கிறார். வைராக்யமுள்ளவனுடைய மனம் கட்டுப்பட்டு பரம்பொருளிடத்தில் ஈடுபடும் என்பது இதன் பொருள். (73)

(அ) விஷயமில்லாமலேயே இன்பம் ஏற்படுமென்று கூறுகிறார் :—

निद्रावसरे यत्सुखमेतत्किं विषयजं यस्मात् ।
न हि चेन्द्रियप्रदेशावस्थानं चेतसो निद्रा ॥ ७४ ॥

நித்ராவஸரே யத் ஸுகமேதத் கிம் விஷயஜம் யஸ்மாத் ।
நஹி சேந்த்ரிய ப்ரதேஶாவஸ்தானம் சேதஸோ நித்ரா ॥

**निद्रावसरे**-துயிலுங்காலத்தில், **यत्** -எந்த, **सुखं**-சுகம், ஏற்படுகின்றதோ, **एतत्** -இது, **विषयजं किम्?** பொருள்களின் ஸம்பந்தத்தால் உண்டாகிறதா என்ன? **यस्मात्** -ஏனெனில்

चेतसः-மனதின், इन्द्रियप्रदेशावस्थानं-இந்திரியங்களினிடத்தில் நிலைத்திருக்கும் நிலை, नहि निद्रा-தூக்கமாகாது அல்லவா?

அயர்ந்து தூங்கும்பொழுது துக்கக் கலப்பு இல்லாத ஓர் ஆனந்தம் எல்லோருக்கும் ஏற்படுகிறது. விழித்துக் கொண்டவுடன் "நான் ஸுகமாகத் தூங்கினேன்" என்று கூறுவதால் தூக்கத்தில் ஸுகம் இருப்பது நிச்சயமாகத் தெரிகிறது இது விஷயத்தால் ஏற்பட்டதல்ல இந்திரியங்கள் விஷயங்களுடன் சேர்ந்து மனதும் சேர்ந்திருக்குமானால் அது தூக்கமாகாது. ஜாக்ரதவஸ்தைதான். தூக்கத்தில் இந்திரியம், மனம் எல்லாம் அடங்கிவிடுகிறது ஆகவே விஷயமில்லாமலே ஸுகம் ஏற்படுவதால் எதற்காக விஷயத்தைத்தேடி அலையவேண்டும்? இந்த நித்ரா ஸுகம் ஸ்வரூபானந்தம். அப்பொழுது அக்ஞானம் மூடியிருப்பதால் ஸ்பஷ்டமாகத்தெரியவில்லை. ஞானிகளுக்கு எப்பொழுதும் இது ஸ்பஷ்டமாகத்தெரியும். (74)

(அ) மனம் அடங்குவதை திருஷ்டாந்தத்தால் விளக்குகிறார் :—

अद्वारतुङ्गकुड्ये गृहेऽवरुद्धो यथा व्याघ्रः ।
बहुनिर्गमप्रयत्नैः श्रान्तस्तिष्ठति पतञ्श्वसंश्च तथा ॥ ७५ ॥

सर्वेन्द्रियावरोधादुद्योगशतैरनिर्गमं वीक्ष्य ।
शान्तं तिष्ठति चेतो निरुद्यमत्वं तदा याति ॥ ७६ ॥

அத்வார துங்க குட்யே க்ருஹேऽவருத்தோ யதா வ்யாக்ர: ।
பஹுநிர்கமப்ரயத்னை: ஶ்ராந்தஸ்திஷ்டதி
பதஞ்ஶ்வஸம்ஶ்ச ததா ॥

ஸர்வேந்த்ரியாவரோதாதுத்யோக ஶதைரநிர்கமம் வீக்ஷ்ய ।
ஶாந்தம் திஷ்டதி சேதோ நிருத்யமத்வம் ததா யாதி ॥

अद्वार-வாயில் இல்லாமல், तुङ्ग-உயரமான, कुड्ये-சுவர்களையுடைய, गृहे-வீட்டில், अवरुद्धः-அடைத்துவைக்கப்

பட்ட, व्याघ्रः–புலி, यथा–எப்படி, बहुनिर्गमप्रयत्नैः–வெளியே செல்வதற்காகச் செய்யப்பட்ட பல முயற்சிகளால், श्रान्तः–களைத்துப்போய், पतन्–கீழே விழுந்துகொண்டும், श्वसन् च–பெருமூச்சுவிட்டுக்கொண்டும், तिष्ठति–இருக்கிறதோ, तथा–அப்படியே, सर्वेन्द्रियावरोधात्–எல்லாப் பொறிகளையும் அடக்குவதால், उद्योगशतैः–நூற்றுக்கணக்கான முயற்சிகளால், अनिर्गमं–வெளியே செல்லமுடியாமலிருப்பதை, वीक्ष्य–பார்த்து, चेतः–மனம், शान्तं–அமைதியாக, तिष्ठति–நிற்கிறது, तदा–அப்பொழுது, निरुद्यमत्वं–முயற்சியற்ற தன்மையை, याति–அடைகிறது.

ஒரு புலியை ஒரு வீட்டிற்குள் அடைத்துவைத்து அவ்வீட்டின் வாயில்களையெல்லாம் நன்கு மூடிவைத்துவிட்டால் அப்புலி வெளியே செல்லமுடியாது. மேலும் வீட்டின் சுவர்கள் மிகவும் உயரமாகவும் பலமுள்ளதாகவும் இருந்தால் அப்புலி அதைத் தாண்டிச்செல்ல இயலாமல் தவித்து நிற்கும் அப்புலி அங்கிருந்து வெளியே செல்லுவதற்குத் தன்னாலியன்ற எல்லா முயற்சிகளையும் செய்து பார்க்கும் கடைசியில் அது வெளியே செல்லமுடியாமல் ஓய்வுபெற்று பெருமூச்சுவிட்டுக்கொண்டு அவ்வீட்டிற்குள்ளேயே அமைதியாக இருந்துவிடும். அதுபோலவே மனமும் கட்டுக்கடங்காத ஒரு புலியைப்போன்றது. அது இந்திரியங்கள் என்ற வாயில்களின் வழியாக வெளியே செல்லுகின்றது. அவ்வாறு அதை வெளியேறவிடாமல் தடுப்பதற்கு முதலில் ஐம்பொறிகளாகிய வாசல்களை அடைத்துவிடவேண்டும். அதாவது இந்திரிய நிக்ரஹம் மனோநிக்ரஹத்திற்கு முதல்படியாகும். அவ்வாறு அதை வெளியே செல்லவிடாமல் தடுத்துவிட்டால் அது பலவாறு முயற்சித்தும் வெளியே செல்ல முடியாமல் கடைசியில் செயலற்றதாக அமைதியை யடைந்து தன்னிடத்திலேயே அசையாமல் நின்றுவிடுகின்றது. (75–76)

(அ) மனோநிக்ரஹத்திற்கு மற்றும் பல உபாயங்களைக் கூறுகிறார் :—

प्राणस्पन्दनिरोधात् सत्सङ्गाद्वासनात्यागात् ।
हरिचरणभक्तियोगान्मनः स्ववेगं जहाति शनैः ॥ ७७ ॥

ப்ராண ஸ்பந்த நிரோதாத் ஸத்ஸங்காத் வாஸநா த்யாகாத் ।
ஹரி சரண பக்தி யோகாத் மன: ஸ்வவேகம் ஜஹாதி
ஶனை: ॥

प्राणस्पन्दनिरोधात्-பிராணவாயுவின் போக்கைக்கட்டுப் படுத்துவதாலும், सत्सङ्गात्-சான்றோர்களின் சேர்க்கையாலும், वासनात्यागात्-விஷய வாஸனைகளை விட்டுவிடுவதாலும், हरिचरणभक्तियोगात्-விஷ்ணுவின் பாதகமலங்களில் பக்தி வைப்பதாலும், मनः-மனம், शनैः-கொஞ்சம் கொஞ்சமாக, स्ववेगम्-தன் வேகத்தை, जहाति-விட்டு விடுகிறது.

பிராணுயாமம் செய்வதாலும், நல்லவர்களுடைய ஸஹவாஸத்தாலும், விஷயவாஸனைகளையும் ஸங்கல்பங்களையும் குறைத்துக் கொள்வதாலும், பகவானுடைய பாதாரவிந்தங்களில் பக்தி வைப்பதாலும் காலக்ரமத்தில் மனம் தன்னுடைய வேகத்தை இழந்து விடுகிறது. (77)

## ६. वैराग्यप्रकरणम् ॥

(அ) முன் பிரகரணத்தில் கூறப்பட்ட மனோநிக்ரஹத்திற்குக் காரணமான வைராக்யத்தை இதில் விவரிக்கிருர். விஷயங்களில் அபிமானம் கொள்ளாதிருந்தால் மனம் அடங்கிவிடும் என்கிருர் :—

परगृहगृहिणीपुत्रद्रविणानामागमे विनाशे वा ।
कथिते हर्षविषादौ किं वा स्यातां क्षणं स्थातुः ॥ ७८ ॥

## 6. வைராக்ய ப்ரகரணம்

பரக்ருஹக்ருஹிணீபுத்ரத்ரவிணுனுமாகமே விநாஶே வா ।
கதிதே ஹர்ஷவிஷாதௌ கிம் வா ஸ்யாதாம்
க்ஷணம் ஸ்தாது: ॥

**पर**-பிறருடைய, **गृह**-வீட்டில், **गृहिणी**-மனைவி, **पुत्र**-புதல்வன், **द्रविणानां**-செல்வம் இவற்றின், **आगमे**-வருகையோ **वा**-அல்லது, **विनाशे**-அழிவோ, **कथिते**-சொல்லப்பட்ட பொழுது, **क्षणं**-சிறிதுநேரம், **स्थातुः**-அங்கு இருக்கின்ற விருந்தாளிக்கு, **हर्षविषादौ**-அதனால் இன்பதுன்பங்கள், **किं वा स्याताम्**-ஏற்படுமா என்ன ?

பிறருடைய வீட்டில் விருந்தாளியாகச் சிறிது நேரம் மட்டும் இருக்கும்பொழுது அங்கு மனைவி, மக்கள், செல்வம் முதலியவற்றின் மேன்மையோ அல்லது தாழ்வோ ஏற்பட்டால் அதனால் இன்பமோ அல்லது துன்பமோ அந்த விருந்தாளிக்கு ஏற்படுமா? அவற்றில் தனது என்ற அபிமானம் இல்லாததால் அவ்விருந்தினனுக்கு அவற்றால் சிறிதளவு இன்ப துன்பங்கூட உண்டாகாது அல்லவா ?

**दैवात्स्थितं गतं वा यं कंचिद्विषयमीड्यमल्पं वा ।**
**नो तुष्यन्न च सीदन्वीक्ष्य गृहेष्वतिथिवन्निवसेत् ॥ ७९ ॥**

தைவாத் ஸ்திதம் கதம் வா
யம் கஞ்சித் விஷயமீட்யமல்பம் வா ।
நோ துஷ்யன் ந ச ஸீதன்
வீக்ஷ்ய க்ருஹேஷ்வதிதிவந்நிவஸேத் ॥

**दैवात्**-விதிவசமாக, **स्थितं** இருக்கின்றதோ, **वा**-அல்லது **गतं**-சென்றதோ, **ईड्यं**-போற்றத்தக்கதோ, **वा**-அல்லது, **अल्पं**-குறைந்ததோ ஆன, **यं कञ्चित् विषयं**-எந்த ஒரு பொருளையும், **वीक्ष्य**-பார்த்து, **नो तुष्यन्**-ஸந்தோஷத்தையடையாமலும், **न च सीदन्**-வருத்தப்படாமலும், **गृहेषु**-தன் வீட்டிலும் **अतिथिवत्**-விருந்தாளிபோல, **निवसेत्**-வஸிக்கவேண்டும்.

அதுபோலவே இல்லறம் நடத்துகின்ற அறிவாளி தன் இல்லத்திலும் விருந்தாளியைப்போல் வஸித்து வர வேண்டும். அப்பொழுது அவன் தெய்வச் செயலால் நிகழும் நன்மை தீமைகளாலும் செல்வங்களின் அபிவிருத்தி, நாசம்

முதலியவற்றிலும் ஸந்தோஷத்தையோ, வருத்தத்தையோ அடையக்கூடாது. அவன் விஷயங்களில் பற்று அற்றவனாக இருந்துகொண்டு தனது இல்லறவாழ்வை நடத்திவரவேண்டும். (79)

ममताभिमानशून्यो विषयेषु पराङ्मुखः पुरुषः ।
तिष्ठन्नपि निजसदने न बाध्यते कर्मभिः क्वापि ॥ ८० ॥

மமதாபிமானஶூன்ய: விஷயேஷு பராங்முக: புருஷ: ।
திஷ்டன்னபி நிஜஸதனே ந பாத்யதே கர்மபி: க்வாபி ॥

**ममताभिमानशून्यः**-என்னுடையது என்ற அபிமானமற்றவனும், **विषयेषु**-பொருள்களில், **पराङ्मुखः**-பற்றற்றவனுமுள்ள, **पुरुषः**-மனிதன், **निजसदने**-தன்னுடைய வீட்டில், **तिष्ठन् अपि**-இருந்துகொண்டிருந்தாலும்கூட, **क्वापि**-எங்கும், **कर्मभिः**-வினைகளால், **न बाध्यते**-பாதிக்கப்படுவதில்லை.

ஒருவன் "நான்" என்றும் "என்னுடையது" என்றும் அபிமானமற்றவனும், இன்ப துன்பங்களில் விருப்பு-வெறுப்பற்றவனும் தன்னுடைய இல்வாழ்வைச் செவ்வனே நடத்திவரவேண்டும். அவ்வாறு அவன் உண்மையான வைராக்யத்துடன் தன் கடமையை நன்கு அனுஷ்டித்து வந்தால் அவன் ஒருகாலத்திலும் கர்மபந்தத்திற்கு உள்ளாகமாட்டான். (80)

क्वाप्यरण्यदेशे सुनीलतृणवालुकोपचिते ।
शीतलतरुतलभूमौ सुखं शयानस्य पुरुषस्य ॥ ८१ ॥

तरवः पत्रफलाढ्याः सुगन्धिशीतानिलाः परितः ।
कलकूजितवरविहगाः सरितो मित्राणि किं न स्युः ॥ ८२ ॥

குத்ராப்யரண்ய தேஶே ஸுநீல த்ருண வாலுகோபசிதே ।
ஶீதல தருதல பூமௌ ஸுகம் ஶயாநஸ்ய புருஷஸ்ய ॥

தரவ: பத்ர பலாட்யா: ஸுகந்தி ஶீதாநிலா: பரித: ।
கலகூஜித வர விஹகா: ஸரிதோ மித்ராணி கிம் ந ஸ்யு: ॥

**कुत्रापि अरण्यदेशे**-ஏதாவது ஒரு காட்டுப்பிரதேசத்தில், **सुनीलतृण**-மிகவும் பச்சையான புல்லும், **वालुकोपचिते**-மணலும் நிறைந்த, **शीतल**-குளிர்ச்சியான, **तरुतल**-மரத்தினடியிலுள்ள, **भूमौ**-பூமியில், **सुखं**-சுகமாக, **शयानस्य**-தூங்குகின்ற, **पुरुषस्य**-மனிதனுக்கு, **परितः**-சுற்றிலும், **पत्र-फलाढ्याः**-நன்கு தழைத்துப் பழங்கள் நிறைந்த, **तरवः**-மரங்களும், **सुगन्धि**-நறுமணமுள்ள, **शीतानिलाः**-குளிர்ந்த காற்றுக்களும், **कलकूजित**-இனிமையாகக் கூவுகின்ற, **वर-विहगाः**-சிறந்த பக்ஷிகளும், **सरितः**-ஆறுகளும், **मित्राणि**-நண்பர்களாக, **किं न स्युः**-ஆகமாட்டார்களா ?

வைராக்ய முள்ளவனுக்கு இயற்கையன்னேயே சிறந்த உபசாரத்தையளிக்கிருள். அவன் வனத்தில் பசுமையான புற்களும் மணல்களும் நிரம்பிய மரத்தின் அடியில் படுத்துச் சுகமாகத் தூங்குகின்ருன். அவ்வனத்திலுள்ள ஆறுகளும் மரங்களும், பறவைகளும், குளிர்ந்த காற்றும் அவனுக்கு உற்ற நண்பர்களாக விளங்குகின்றன. நன்ருகத் தழைத்துப் பழுத்து நிற்கும் மரங்கள் நிழலைக்கொடுத்து அவனது பசியைத் தீர்க்கின்றன. குளிர்ந்த காற்று அவனது சிரமத்தைப் போக்குகிறது இனிமையாகக் கூவுகின்ற பறவைகள் அவனுடைய மனதை மகிழ்விக்கின்றன. நீர் நிரம்பிய ஆறுகள் அவனது தாகத்தைத் தணிக்கின்றன. பற்றற்றவனுக்கு எங்கும் இன்பமே ஏற்படும். ஆகவே இயற்கையில் அமைந்துள்ள இவற்ருலேயே சரீர யாத்திரை நடப்பதால் பின்னுல் துன்பத்தைத் தரும் விஷயங்களை அபிமானத்துடன் சேகரித்து வைத்துக் கொள்ளவேண்டாம். (81–82)

**वैराग्यभाग्यभाजः प्रसन्नमनसो निराशस्य ।**
**अप्रार्थितफलभोक्तुः पुंसो जन्मनि कृतार्थतेह स्यात् ॥ ८३ ॥**

வைராக்ய பாக்ய பாஜ: ப்ரஸந்ந மநஸோ நிராமஸ்ய ।
அப்ரார்த்தித பல போக்து: பும்ஸோ ஜந்மனி
க்ருதார்த்ததேஹ ஸ்யாத் ॥

**वैराग्यभाग्यभाजः**-வைராக்யமாகிய பாக்யத்தையடைந்தவனும், **प्रसन्नमनसः**-சந்தோஷமடைந்த மனதை உடையவனும், **निराशस्य**-ஒன்றையும் எதிர்பாராதவனும், **अप्रार्थित**-வேண்டிக்கொள்ளாமலே கிடைத்த, **फल**-பலனை, **भोक्तुः**-அனுபவிக்கின்றவனுமாகிய, **पुंसः**-மனிதனுக்கு, **इह जन्मनि**-இப்பிறவியிலேயே, **कृतार्थता**-வாழ்க்கைப்பயன் **स्यात्**-ஏற்படுகின்றது.

வைராக்யமாகிய பெரும் பாக்யத்தை அடைந்தவனும், மிகத் தூய மனதை உடையவனும், எதிர்பார்க்காமலேயே நிகழ்கின்ற இன்ப துன்பங்களை மன மாறுபாடு இல்லாமல் அனுபவிக்கின்றவனுமான மனிதனுடைய வாழ்க்கை இகத்திலேயே பயனுள்ளதாகிறது. அவ்வாறு ஸம நிலையை எய்திய மனிதன் இம்மையிலேயே மோக்ஷ சுகத்தை அனுபவிக்கிறான். (83)

**द्रव्यं पल्लवतश्च्युतं यदि भवेत्क्वापि प्रमादात्तदा**
**शोकायाथ तदर्पितं श्रुतवते तोषाय च श्रेयसे ।**
**स्वातन्त्र्याद्विषयाः प्रयान्ति यदमी शोकाय ते स्युश्चिरं**
**संत्यक्ताः स्वयमेव चेत्सुखमयं निःश्रेयसं तन्वते ॥ ८४ ॥**

த்ரவ்யம் பல்லவதஸ்ச்யுதம் யதி பவேத் க்வாபி
ப்ரமாதாத் ததா
ஶோகாயாத ததர்பிதம் ஶ்ருதவதே தோஷாய ச ஶ்ரேயஸே ।
ஸ்வாதந்த்ர்யாத் விஷயா: ப்ரயாந்தி யதமீ
ஶோகாய தே ஸ்யுஶ்சிரம்
ஸந்த்யக்தா: ஸ்வயமேவ சேத் ஸுகமயம்
நி:ஶ்ரேயஸம் தந்வதே ॥

**द्रव्यं** – பழுத்துக் கனிந்த ஒரு கனி, **पल्लवतः** - காம்பிலிருந்து, **च्युतं**-நழுவி, **प्रमादात्** - கவனக்குறைவால், **क्वापि**- எங்காவது, **यदि भवेत्** -போய்விடுமானால், **तदा**-அப்பொழுது **शोकाय**-மனவருத்தத்திற்காகவே (ஆகிறது), **अथ**-அப்படியல்லாமல், **तत्** அது, **श्रुतवते**-வேதங்களைக்கற்ற ஒருவனுக்கு

अर्पितं-கொடுக்கப்பட்டால், तोषाय-மகிழ்ச்சிக்காகவும், श्रेयसे च-(பின்னுல்) நன்மைக்காகவும் (பயன்படுகிறது), अमी विषयाः-இந்த விஷயங்கள், स्वातन्त्र्यात्-தன்னிஷ்டப்படி, यत् प्रयान्ति-சென்றுவிடுமாஞல், ते-அவைகள், चिरं-நீண்டகாலம், शोकाय-துன்பத்தைத்தருவதாகவே, स्युः-இருக்கும். स्वयमेव-தாஞகவே, संत्यक्ताः चेत्-விடப்படுமாகில், सुखमयं-இன்பம் நிலவும், निःश्रेयसं-மோக்ஷத்தை, तन्वते-தருகின்றன.

மரம் காய்த்துக் கனிந்து அந்தக் கனி காம்பிலிருந்து தாஞகவே கீழே விழுந்து உடையவனுக்குக் கிட்டாமல் போய்விட்டால் அது அவனுக்கு மிகுந்த மன வருத்தத்தை உண்டுபண்ணுகிறது. ஆனுல் அம்மரத்தின் சொந்தக் காரன் அக்கனியைத் தானே எடுத்து நன்கு கற்றுணர்ந்த ஒரு வேதியனுக்குக் கொடுத்து விட்டால் அது அவனுக்கு மிகுந்த சந்தோஷத்தைத் தருகிறது. அதனுல் அவனுக்கு நன்மையும் ஏற்படுகின்றது. அதுபோலவே ஒருவனிட மிருந்து விஷயங்கள் தாமாகவே விலகி விட்டால் அவன் அதனுல் நீண்டகாலம் துன்புறுகின்றுன். ஆனுல் அவைகளை அவன் தாஞகவே விலக்கிவிட்டால் அவன் நிரதிசயமான மோக்ஷ சுகத்தை அனுபவிக்கிருன். இதனுல் வைராக்ய நிலையை அடைந்தவன் பரிபூர்ணமான ஆனந்தத்தை அனுபவிக்கிருன் என்பது தெளிவாகிறது. (84)

विस्मृत्यात्मनिवासमुत्कटभवाटव्यां चिरं पर्यटन्
संतापत्रयदीर्घदावदहनज्वालावलीव्याकुलः ।
वल्गन् फल्गुषु सुप्रदीप्तनयनश्चेतःकुरङ्गो बला-
दाशापाशवशीकृतोऽपि विषयव्याघ्रैर्मृषा हन्यते ॥ ८५ ॥

விஸ்ம்ருத்யாத்ம நிவாஸமுத்கடபவாடவ்யாம்
சிரம் பர்யடன்
ஸந்தாப த்ரய தீர்க தாவ தஹநஜ்வாலாவலீ வ்யாகுலः ।
வல்கன் பல்குஷு ஸுப்ரதீப்த நயநஶ்சேத: குரங்கோ பலா—
தாஶா பாஶ வஶீக்ருதோऽபி விஷய வ்யாக்ரைர்
ம்ருஷா ஹந்யதே ॥

**चेतःकुरङ्गः**-மனமாகிய மான், **आत्मनिवासं**-தான் வசிக்குமிடமாகிய ஆத்மாவை, **विस्मृत्य**-மறந்துவிட்டு, **उत्कट**-பெரிய, **भवाटव्यां**-பிறவியாகிய காட்டில், **चिरं**-நீண்டகாலம், **पर्यटन्**-சுற்றிக்கொண்டு, **सन्तापत्रय**ஆத்யாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதைவிகம் என்ற மூன்றுவிதமான தாபங்களாகிய, **दीर्घ**-நீண்ட, **दावदहन**-காட்டுத்தீயின், **ज्वालावली**-சுடர்களின் கூட்டங்களால், **व्याकुलः**-கலக்கத்தை அடைந்ததாய், **फल्गुषु**-அல்பமான பயன்களையுடைய விஷயங்களில் **वल्गन्** சுற்றிக்கொண்டு, **सुप्रदीप्त**-நன்கு கொளுத்தப்பட்ட, **नयनः**-கண்களை உடையதாய், **बलात्**-பலாத்காரமாக, **आशापाशवशीकृतोऽपि**-ஆசையென்ற கயறுகளால் கட்டப்பட்டதாயினும், **विषयव्याघ्रैः**-விஷயங்கள் என்ற புலிகளால், **मृषा**-வீணாக, **हन्यते**-கொல்லப்படுகிறது.

ஒரு மான் தன்னுடைய இருப்பிடத்தை மறந்து பெரிய காட்டில் அலைந்து கொண்டிருக்கிறது. அது போகும் வழியில் காட்டுத்தீ கொழுந்துவிட்டு எரிந்து கொண்டிருக்கிறது. தெய்வச் செயலால் அதிலிருந்து தப்பித்துக் கொண்டு அது ஆகாரத்தைத் தேடிக்கொண்டு செல்கிறது. அப்பொழுது அது வேடர்களுடைய வலையில் சிக்கிக்கொள்கிறது. அது தன்னுடைய முயற்சியால் அதிலிருந்து தப்பித்துக்கொண்டு வெளியே செல்லும் பொழுது புலிகளால் பிடிக்கப்பட்டுக் கொல்லப்படுகின்றது. இதுபோல மனமும் தனது இருப்பிடமான ஆத்மாவை மறந்து பயங்கரமான பிறவி யென்னும் காட்டில் அலைகிறது. அங்கு ஆத்யாத்மிகம் முதலான மூன்றுவித தாபங்கள் மனதைக் கொளுத்துகின்றன அப்படியிருந்தும் ஸாரமில்லாத விஷயங்களில் ஆசைவைத்து, அந்த ஆசையினாலேயே கட்டுப்பட்டு விஷயங்களாலேயே நாசம் அடைகிறது. (85)

## ७. आत्मसिद्धिप्रकरणम्

(அ) ஆரம்பத்தில் முக்திக்கு ஸாதனமாகக் கூறப்பட்ட வைராக்யம், ஆத்மபோதம், பக்தி என்னும் இம்மூன்றில் முதலாவதான வைராக்யத்தை ஆறு ப்ரகரணங்களால் விரிவாகக்காட்டி இரண்டாவதான ஆத்மபோதத்தைப் பற்றி இனிக் கூறுகிறுர். தேஹாதி விலக்ஷணமான ஆத்மாவை உபதேசிக்கும் இப்பிரகரணத்தில் முதலில் குரு மஹிமையை வர்ணிக்கிறுர் :—

उत्पन्नेऽपि विरागे विना प्रबोधं सुखं न स्यात् ।
स भवेद्गुरूपदेशात्तस्माद्गुरुमाश्रयेत् प्रथमम् ॥ ८६ ॥

## 7. ஆத்மஸித்தி ப்ரகரணம்

உத்பந்நேऽபி விராகே விநா ப்ரபோதம் ஸுகம் ந ஸ்யாத் ।
ஸ பவேத் குருபதேசாத் தஸ்மாத் குருமாஶ்ரயேத் ப்ரதமம் ॥

**विरागे उत्पन्ने अपि**-வைராக்யம் ஏற்பட்டாலும்கூட, **प्रबोधं विना**-ஆத்மஞானமில்லாமல், **सुखं**-பரிபூர்ணமான ஆனந்தம் **न स्यात्**-உண்டாகாது. **सः**-அந்த ஆத்மஞானம், **गुरूपदेशात्**-குருவினுடைய உபதேசத்தால் (தான்), **भवेत्**-ஏற்படும். **तस्मात्**-ஆகையால், **प्रथमं**-முதலில், **गुरुं**-குருவை, **आश्रयेत्**-அண்டவேண்டும்.

ஒருவனுக்கு பற்றற்ற நிலை ஏற்படினும் ஆத்மஞானமுண்டாகாவிட்டால் அவனுக்கு இன்ப நிலை கிட்டாது. "**ज्ञानादेव हि कैवल्यं**" என்று கூறப்பட்டுள்ளது. அந்த ஆத்மஞானம் குருவின் உபதேசத்தாலேயே ஏற்படுகின்றது. ஆதலால் தீவ்ர வைராக்யமுள்ளவன் ஆத்மஞானம் பெற வேண்டி சிறந்த குருவை முதலில் அணுகவேண்டும் "**तद्विज्ञानार्थं स गुरुमेवाभिगच्छेत् समित्पाणिः श्रोत्रियं ब्रह्मनिष्ठम्**"

यद्यपि जलधेरुदकं यद्यपि वा प्रेरकोऽनिलस्तत्र ।
तदपि पिपासाकुलितः प्रतीक्षते चातको मेघम् ॥ ८७ ॥

யத்யபி ஜலதேருதகம் யத்யபி வா ப்ரேரகோऽநிலஸ்தத்ர ।
ததபி பிபாஸாகுலித: ப்ரதீக்ஷதே சாதகோ மேகம் ॥

जलधेः–ஸமுத்திரத்திலிருந்து, उदकं यद्यपि–நீர் கிடைத்த போதிலும், तत्र–அதில், अनिलो वा–காற்று, प्रेरकः यद्यपि–தூண்டுகோலாக இருந்தபோதிலும், तदपि–அவ்வாறு இருப்பினும், पिपासाकुलितः–தாகத்தால் துன்புறுத்தப்பட்ட, चातकः–சாதகப்பட்சி, मेघं–மேகத்தை, प्रतीक्षते–எதிர்பார்க்கின்றது.

மேகம் ஸமுத்திரத்திலிருந்து நீரைப் பெற்றுக்கொள்கிறது. அந்த நீர் மழையாகக் கீழே விழுகிறது. அவ்வாறு மழை பெய்வதற்குக் காற்று உதவி செய்கின்றது. இவ்வாறு ஸமுத்திரமும் காற்றும் மழைக்குக் காரணமாக இருந்தபோதிலும் தாகத்தால் வருந்திய சாதகப் பறவை நீரைக் குடிப்பதற்கு மேகத்தையே நாடி நிற்கின்றது. அது போலவே ஆத்மஞானம் பெறுவதற்கு உபநிஷத்துக்கள் இருப்பினும் குருவையே நாடிச்செல்லவேண்டும்.

(அ) குரு உபதேசித்தாலும் தன் முயற்சியால்தான் அநுபவம் வரும் எனக் கூறுகிறார் :—

त्रेधा प्रतीतिरुक्ता शास्त्राद्गुरुतस्तथात्मनस्तत्र ।
शास्त्रप्रतीतिरादौ यद्वन्मधुरो गुडोऽस्तीति ॥ ८८ ॥

த்ரேதா ப்ரதீதிருக்தா ஶாஸ்த்ராத் குருதஸ் ததாத்மநஸ்தத்ர ।
ஶாஸ்த்ர ப்ரதீதிராதௌ யத்வந் மதுரோ குடோऽஸ்தீதி ॥

शास्त्रात्–சாஸ்திரத்திலிருந்தும், गुरुतः–குருவினிடமிருந்தும், तथा–அவ்வாறே, आत्मनः–தன்னிடமிருந்தும், त्रेधा–மூன்றுவிதமாக, प्रतीतिः–அறிவு (உண்டாவதாக), उक्ता–கூறப்பட்டுள்ளது. तत्र–அதில், गुडः–வெல்லம், मधुरः–இனிப்பாக, अस्ति–இருக்கிறது, इति यद्वत्–என்பதுபோலத்தான், आदौ–முதலில், शास्त्रप्रतीतिः–சாஸ்திரத்தால் ஏற்படும் அறிவு.

சாஸ்திரம், குரு, ஆத்மா இம் மூன்றாலும் ஆத்மஞானம் ஏற்படுகிறது அவற்றுள் வெல்லத்தையே கண்டிராத வனுக்கு "வெல்லம் இனிப்பாக இருக்கும்" என்று பிறர் சொல்லும் வார்த்தையைக் கேட்டு எம்மாதிரி ஞானம் ஏற் படுமோ அம்மாதிரியாகத்தான் சாஸ்திரத்தால் ஏற்படும் ஆத்மஞானமும். அதாவது சாஸ்திரத்தால் பரோக்ஷஞானம் தான் ஏற்படும். (88)

**अग्रे गुरुप्रतीतिर्दूराद्गुडदर्शनं यद्वत् ।**
**आत्मप्रतीतिरस्माद्गुडभक्षणजं सुखं यद्वत् ॥ ८९ ॥**

அக்ரே குருப்ரதீதிர் தூராத் குடதர்ஶநம் யத்வத் ।
ஆத்ம ப்ரதீதிரஸ்மாத் குட பக்ஷணஜம் ஸுகம் யத்வத் ॥

**दूरात्**-தூரத்திலிருந்து, **गुडदर्शनं यद्वत्**-வெல்லத்தைக் காண்பதுபோல, **अग्रे**-முன்னால், **गुरुप्रतीतिः**-ஆசிரியரிட மிருந்துபெறும் ஆத்மஞானம். **गुडभक्षणजं**-வெல்லத்தைச் சாப்பிடுவதால் உண்டாகும், **सुखं यद्वत्**-இன்பத்தைப்போல, **अस्मात्**-இவனால் ஏற்படும், **आत्मप्रतीतिः**-ஆத்மஞானம்.

வெல்லம் என்ற இனிப்பானபொருள் ஒன்று இருக்கிறது என்று பிறர் சொல்லிக் கேட்டுத் தெரிந்து கொண்டவன் பிறகு அதைச் சாப்பிடவேண்டிய ஆசையால் வெல்லம் இருக்கும் இடம் தேடிச்சென்று அதை வாங்கிக் கண்ணால் பார்க்கிறான். இதுபோல சாஸ்திரங்களால் ஆத்மவஸ்து இருப்பதை அறிந்தவன் குருவைத் தேடிச்சென்று ஆத்ம ஞானோபதேசம் பெறுகிறான். வெல்லத்தைக் கண்ணால் பார்த்தாலும் அதன் இனிப்பு பரோக்ஷமாகத்தானிருக்கிறது. இதுபோல குருவின் உபதேசம் பெற்றபோதிலும் அது பரோக்ஷம்தான். வெல்லத்தை வாயில் போட்டு சாப்பிட்ட பிறகு ஆனந்தம் ஏற்படுவதுபோல மனன நிதித்யாஸனங் களால் ஆத்ம ப்ரத்யக்ஷம் ஏற்படும்பொழுது ஆனந் தானுபவம் ஏற்படுகிறது இங்கு வெல்லத்தைப் பற்றிக் கேள்விப்படாதவனும் அதை அடையாதவனும் மாதுர் யத்தை அனுபவிக்கமுடியாது. இதுபோல சாஸ்திரத்

தாலும் குருவின் உபதேசத்தாலும் ஆத்மாவை அறிந்தவன் தான் தன் ப்ரயத்னத்தால் ஆத்மானந்தம் பெறமுடியும்.

(அ) தேஹாதிகள் ஆத்மா அல்ல என்பதைக் காட்டுகிறார் :—

रसगन्धरूपशब्दस्पर्शा अन्ये पदार्थाश्च ।
कस्मादनुभूयन्ते नो देहान्नेन्द्रियग्रामात् ॥ ९० ॥

मृतदेहेन्द्रियवर्गो यतो न जानाति दाहजं दुःखम् ।
प्राणश्चेन्निद्रायां तस्करबाधां स किं वेत्ति ॥ ९१ ॥

ரஸ கந்த ரூப ஶப்த ஸ்பர்ஶா அந்யே பதார்த்தாஶ்ச ।
கஸ்மாதநுபூயந்தே நோ தேஹாந்நேந்த்ரிய க்ராமாத் ॥

ம்ருத தேஹேந்த்ரிய வர்கோ யதோ ந
ஜாநாதி தாஹஜம் துக்கம் ।
ப்ராணஶ்சேந்நித்ராயாம் தஸ்கர பாதாம் ஸ கிம் வேத்தி ॥

रस-சுவை, गन्ध-மணம், रूप-ரூபம், शब्द-சப்தம், स्पर्शाः-ஊறு என்னும் ஐம்புலன்களின் விஷயங்களும், अन्ये-மற்ற, पदार्थाः च-பொருள்களும், कस्मात्-எதனுல், अनुभूयन्ते-அனுபவிக்கப்படுகின்றன ? नो देहात्-இவைகள் உடலால் அனுபவிக்கப்படுவது இல்லை. इन्द्रियग्रामात् न-ஐம்பொறிகளாலும் நுகரப்படுவது இல்லை. यतः-ஏனெனில், मृत-இறந்தவனுடைய, देह-உடலோ அல்லது, इन्द्रियवर्गः-ஐம்பொறிகளோ, दाहजं-எரிப்பதால் உண்டாகின்ற, दुःखं-துன்பத்தை, न जानाति-அறிவதில்லை. प्राणः चेत् உயிர் அதை அறிகின்றது என்று சொல்வாயாகில் அது சரியல்ல, सः-அவ்வுயிர், निद्रायां-உறங்கும்பொழுது, तस्करबाधां-திருடர்களால் உண்டாகும் துன்பத்தை, किं वेत्ति-அறிகின்றதா ?

உலகில் ஒவ்வொரு பிராணியும் சுவை, மணம், உருவம், சப்தம், ஸ்பர்சம் இவைகளையும் மற்றும் உலகிலுள்ள எல்லாப் பொருள்களையும் அறிந்துகொள்கிறோம். இந்த

அறிவு ஏற்படுவதற்குக் காரணம் என்ன? இதை விசாரித்தால் ஆத்மாவைத் தெரிந்துகொள்ளலாம். இந்த அறிவு ஸ்தூலமான சரீரத்தாலோ அல்லது கண் காது முதலான இந்திரியங்களாலோ ஏற்படுவதாகக் கூறமுடியாது. அப்படியானால் இறந்தபிறகு சரீரத்தை நெருப்பால் கொளுத்தும்பொழுது அதன் தாபத்தை சரீரமும் இந்திரியங்களும் ஏன் தெரிந்துகொள்ளவில்லை? தன்மேல் விழுந்த நெருப்பின் தாபத்தையே அறிய இயலாத தேஹேந்திரியங்கள் மற்ற விஷயங்களை எவ்வாறு தெரிந்துகொள்ளக் கூடும். இதே போல பிராணனும் இவற்றை அறிந்துகொள்வதாகக் கூற முடியாது. இரவில் தூங்கும்பொழுது திருடன் வந்து தொந்தரவு செய்வதை பிராணன் தெரிந்துகொள்வதில்லையே. ஆகவே நமக்கு ஏற்படும் ஞானத்திற்கு தேஹம், இந்திரியம், பிராணன் இவை காரணம் அல்ல. ஆகையால் இவை ஆத்மா அல்ல. (90–91)

(அ) மனம் காரணம் அல்ல என்பதைக் கூறுகிறார் :–

**मनसो यदि वा विषयस्तद्युगपत्किं न जानाति ।**
**तस्य पराधीनत्वाद्यतः प्रमादस्य कस्त्राता ॥ ९२ ॥**

மனஸோ யதி வா விஷயஸ்தத்யுகபத் கிம் ந ஜாநாதி ।
தஸ்ய பராதீனத்வாத் யதః ப்ரமாதஸ்ய கஸ்த்ராதா ॥

**वा**–அல்லது, **मनसः**–மனதிற்கு, **विषयः यदि**–பொருள்களை உணரும் சக்தி உண்டு என்றால், **तत्**–அம்மனம் **युगपत्**-ஒரே சமயத்தில், **किं**-ஏன், **न जानाति**-அறிகிறதில்லை. **यतः**–ஏனெனில், **तस्य पराधीनत्वात्**–அது மற்றொன்றின் வசத்தில் இருப்பதால் (அவ்வாறு உணர்வதில்லை), **प्रमादस्य**-அவ்வாறான கவனக்குறைவின், **त्राता**-காப்பாளன், **कः**-யார்?

மனம் உணர்கிறது என்று சொல்வதும் சரியல்ல. ஏனெனில் ஒரே ஸமயத்தில் பற்பல புலன்களால் உண்டாகும் உணர்ச்சி நுகரப்படுவதில்லை. மனம் எப்பொழுதும் இருப்பதால் அவ்வுணர்ச்சிகள் ஒரே சமயத்தில் அனு

பவிக்கப்படவேண்டும் ஆனால் அவ்வாறு ஏன் அனுபவிக்கப் படுகிறதில்லை? அவ்விஷயங்களில் மனத்தின் கவனம் செல்வதில்லை என்று இதற்குப் பதில் உரைக்கவேண்டும். அவ்வாறு மனதைக் கட்டுப்படுத்துவது யார்? அதுதான் ஆத்மா இதனால் ஆத்மா ஒன்றே எல்லாவற்றையும் அறியுமாற்றல் பெற்றது என்பது ஸித்தமாகிறது. (92)

---

(அ) ஆத்மாவினால்தான் அறிவு ஏற்படுகிறது என்பதை திருஷ்டாந்தத்தால் விளக்குகிறார் :—

गाढध्वान्तगृहान्ततः क्षितितले दीपं निधायोज्ज्वलं
पञ्चच्छिद्रमधोमुखं हि कलशं तस्योपरि स्थापयेत् ।
तद्बाह्ये परितोऽनुरन्ध्रममलां वीणां च कस्तूरिकां
सद्रत्नं व्यजनं न्यसेच्च कलशच्छिद्राध्वनिर्गच्छता ॥ ९३ ॥

तेजोंशेन पृथक्पदार्थनिवहज्ञानं हि यज्जायते
तद्रन्ध्रैः कलशेन वा किमु मृदो भाण्डेन तैलेन वा ।
किं सूत्रेण न चैतदस्ति रुचिरं प्रत्यक्षबाधादतो
दीपज्योतिरिहैकमेव शरणं देहे तथाऽऽत्मा स्थितः ॥

காட த்வாந்த க்ருஹாந்தத: க்ஷிதிதலே தீபம் நிதாயோ
ஜ்வலம்
பஞ்சச்சித்ரமதோமுகம் ஹி கலஶம் தஸ்யோபரி
ஸ்தாபயேத் ।
தத்பாஹ்யே பரிதோऽனுரந்த்ரமமலாம் வீணாம் ச
கஸ்தூரிகாம்
ஸத்ரத்நம் வ்யஜனம் ந்யஸேச்ச கலஶச்சித்ராத்வ
நிர்கச்சதா ॥

தேஜோம்ஶேந ப்ருதக் பதார்த்த நிவஹ ஞானம்
ஹி யஜ்ஜாயதே
தத்ரந்த்ரை: கலஶேந வா கிமு ம்ருதோ
பாண்டேந தைலேந வா ।

கிம் ஸூத்ரேண ந சைததஸ்தி ருசிரம் ப்ரத்யக்ஷ பாதாததோ
தீபஜ்யோதிரிஹைகமேவ மரணம் தேஹே
ததாऽऽத்மா ஸ்தித: ॥

गाढध्वान्त-அடர்த்தியான இருள் நிறைந்த, गृहान्ततः-வீட்டிற்குள், क्षितितले-தரையின்மீது, उज्ज्वलं-அதிகமான பிரகாசத்தையுடைய, दीपं-விளக்கை, निधाय-வைத்து, तस्योपरि-அதன்மேல், अधोमुखं-தலைகீழாக, पञ्चच्छिद्रं-ஐந்து துவாரங்களுள்ள, कलशं-குடத்தை, स्थापयेत्-வைக்க வேண்டும். तद्बाह्ये-அதற்கு வெளியில், परितः-சுற்றிலும், अनुरन्ध्रं-ஒவ்வொரு துவாரத்திற்குப் பக்கத்திலும், अमलां-நெல்லிக்கனியையும், वीणां-வீணையையும், कस्तूरिकां च-கஸ்தூரியையும், सद्रत्नं-உயர்ந்த ரத்னத்தையும், व्यजनं च-விசிறியையும், न्यसेत्-வைக்கவேண்டும். कलश-குடத்தினுடைய, छिद्राध्व-துவாரத்தின் வழியாக, निर्गच्छता-வெளியே செல்கின்ற, तेजोंशेन-ஒளியின் பகுதியால், यत्-எந்த, पृथक्पदार्थनिवह-தனித்தனியாக பொருள்களின், ज्ञानं-அறிவு, जायते-உண்டாகிறதோ, तत्-அது, रन्ध्रैः-ஓட்டைகளால் ஏற்படுகிறதா? कलशेन वा-அல்லது குடத்தினால் உண்டாகிறதா? किमु मृदो भाण्डेन वा-அல்லது மண் அகல் பாத்ரத்தாலா? तैलेन वा-அல்லது எண்ணையாலா? किं सूत्रेण-அல்லது திரியாலா? प्रत्यक्षबाधात्-பிரத்யக்ஷ ப்ரமாணத்திற்கு விருத்தமாக இருப்பதால், एतत्-இவ்வாறு கூறுவது, न च रुचिरं अस्ति-அழகாக இல்லை. अतः-ஆகையால் इह-இந்த விஷயத்தில், दीपज्योतिः एकमेव-விளக்கின் ஜ்வாலை ஒன்றே शरणं-காரணமாக ஆகின்றது, तथा-அதுபோலவே, देहे-உடலில், आत्मा-ஆத்மா, स्थितः-இருக்கின்றது.

வீட்டில் இருள் சூழ்ந்த ஒரு அறையில் தரையின் மீது ஒரு விளக்கை ஏற்றிவைத்து அதை ஐந்து துவாரங்கள் கொண்ட ஒரு குடத்தினால் மூடி வைக்கவேண்டும். அக்குடத்திலுள்ள ஒவ்வொரு துவாரத்திற்கும் எதிராக வீணை, விசிறி, ரத்தினம், நெல்லிக்கனி, கஸ்தூரி என்ற ஐந்து

பொருள்களையும் வைக்கவேண்டும். (இவ்வைந்தும் சப்தம் ஸ்பர்சம் முதலான ஐந்து விஷயங்களைக் காட்டுகிறது) குடத்தின் துவாரங்களின் மூலமாக அப்பொருள்களின் மீது விழும் ஒளியினுல் அவைகளை நாம் நன்கு தெரிந்து கொள்கிருேம். இந்த அறிவு நமக்கு ஏதனுல் ஏற்படுகிறது? துவாரங்களாலா? குடத்தாலா? உள்ளே இருக்கும் விளக்கினுலா? எண்ணையாலா? திரியாலா? விளக்கின் ஜ்வாலையாலா? இதை நாம் நன்கு ஆராய்ந்தால் தீப ஜ்வாலையாலேயே அப்பொருள்கள் விளங்குகின்றன என்பது நன்கு தெரிகின்றது. இதுபோலவே அஞ்ஞான இருள் அடர்ந்த ஸம்ஸாரம் என்னும் வீட்டில் ஆத்மா என்னும் தீபம் பிரகாசிக்கிறது இந்திரியங்கள் என்னும் ஐந்து துவாரங்களுள்ள சரீரம் என்னும் குடம் ஆத்ம தீபத்தை மூடிக்கொண்டிருக்கிறது. கண், காது முதலான இந்திரியங்களின் வழியாக ஆத்ம பிரகாசம் வெளியில் வந்து விஷயங்களை பிரகாசப் படுத்துகிறது. உடனே நமக்கு ஞானம் ஏற்படுகிறது ஆதலால் நமக்கு ஏற்படும் ஞானத்திற்கு இந்திரியங்களோ, தேஹமோ, விளக்குபோன்றதான ஹிருதயமோ, திரிபோன்ற மனமோ, எண்ணை போன்ற பிராணனே காரணம் அல்ல. ஆத்ம பிரகாசம்தான் காரணம். ஆகவே தேஹாதிகளைக் காட்டிலும் விலக்ஷணமான ஸ்வயம்ப்ரகாசமான ஆத்மவஸ்து ஒன்று இருக்கிறது.

## ८. मायासिद्धिप्रकरणम् ॥

(அ) ஆத்மாவை அறியவொட்டாமல் மறைக்கும் மாயையையும், அதன் காரியங்களையும் விவரிக்கிருர் :—

चिन्मात्रः परमात्मा ह्यपश्यदात्मानमात्मतया ।
अभवत्सोऽहंनामा तस्मादासीद्भिदो मूलम् ॥ ९५ ॥

## 8. மாயாஸித்தி ப்ரகரணம்

சின்மாத்ர: பரமாத்மா ஹ்யபஶ்யதாத்மாநமாத்மதயா ।
அபவத் ஸோऽஹம்நாமா தஸ்மாதாஸீத் பிதோ மூலம் ॥

चिन्मात्रः-சித்ஸ்வரூபியான, परमात्मा-பரமாத்மா (விராட்) आत्मानं-ஆத்மாவை आत्मतया-தானாக (நான் என்று) अपश्यत्-பார்த்துக்கொண்டார். सः-அவர், अहंनामा-அஹம் என்ற பெயரை உடையவராக, अभवत्-ஆனார். तस्मात्-அதிலிருந்து भिदः-வேற்றுமையின், मूलं-காரணம், आसीत्-ஏற்பட்டது.

द्वेधैव भाति तस्मात्पतिश्च पत्नी च तौ भवेतां वै ।
तस्मादयमाकाशः स्त्रियैव परिपूर्यते सततम् ।। ९६ ।।

த்வேதைவ பாதி தஸ்மாத் பதிஶ்ச பத்நீ ச
தௌ பவேதாம் வை ।
தஸ்மாதயமாகாஶ: ஸ்த்ரியைவ பரிபூர்யதே ஸததம் ॥

(அது) द्वेधैव-இரண்டாகவே, भाति-ஆகிறது. तस्मात्-அதனால், पतिः च-கணவனும், पत्नी च-மனைவியும் என்ற, तौ-அவைகள், भवेताम्-உண்டாகின்றன. तस्मात्-ஆகையால், सततं-எப்பொழுதும், अयं-இந்த, आकाशः-ஆகாசம், स्त्रिया एव-பெண்ரூபத்தாலேயே, परिपूर्यते-நிரப்பப் படுகிறது.

सोऽयमपीक्षांचक्रे ततो मनुष्या अजायन्त ।
इत्युपनिषदः प्राहुर्दयितां प्रति याज्ञवल्क्योक्त्या ।। ९७ ।।

ஸோऽயமபீக்ஷாம்சக்ரே ததோ மனுஷ்யா அஜாயந்த ।
இத்யுபநிஷத: ப்ராஹுர் தயிதாம் ப்ரதி
யாக்ஞவல்க்யோக்த்யா ॥

सः अयम्-அந்தப் பரமாத்மா, ईक्षांचक्रे-ஸங்கல்பம்செய்து கொண்டார். ततः-அதனிடத்திலிருந்து, मनुष्याः-மானிடர்கள், अजायन्त-தோன்றினர். इति-என்று, दयितां प्रति-தன்னுடைய மனைவியைக் குறித்து, याज्ञवल्क्योक्त्या-யாக்ஞவல்க்யர் உபதேசித்ததாக, उपनिषदः-உபநிடதங்கள், प्राहुः-கூறுகின்றன.

பிருஹதாரண்ய உபநிஷத்தில் முதல் அத்யாயம் 4வது ப்ராஹ்மணத்தில் சிருஷ்டியைக் கூறும் இடத்தில் இவ் விஷயம் காணப்படுகிறது. ஸிருஷ்டிக்கு முன்னுல் விராட் ஸ்வரூபமான பரமாத்மா ஒருவர்தான் இருந்தார். அவர் தன்னை ஸர்வாத்மாவாகப் பார்த்தார். தன்னைத் தவிற வேறு ஒன்றையும் அவர் காணவில்லை. 'அஹமஸ்மி' என்று சொல்லிக்கொண்டதால் அவருக்கு 'அஹம்' என்ற பெயர் ஏற்பட்டது. அதிலிருந்து வேற்றுமை தோன்ற ஆரம்பித்தது. அவர் இரண்டாகத் தோன்றினுர். ஒரே வஸ்துவாக இருந்த அவர் கணவன், மனைவி என்ற இரு வ்யக்திகளாக ஆய்விட்டார். ஒரு பாதி கணவன் மற்றொரு பாதி பெண். ஆகையால் ஸ்திரீ ரூபத்தால்தான் மற்றொரு பாதி பூர்த்தியாகிறது. அவர் ஸிருஷ்டி செய்வதற்கு ஸங்கல்பம் செய்தார். அதனுல் மனுஷ்யர்கள் உண்டானுர் கள். இந்த விஷயத்தை யாக்ஞவல்க்யர் தம் மனைவிக்குக் கூறுவதாக உபநிஷத்தில் சொல்லப்பட்டிருக்கிறது (95-97)

**चिरमानन्दानुभवात्सुषुप्तिरिव काप्यवस्थाऽभूत् ।**
**परमात्मनस्तु तस्मात्स्वप्नवदेवोत्थिता माया ॥ ९८ ॥**

*சிரமானந்தானுபவாத் ஸுஷுப்திரிவ காப்யவஸ்தாऽபூத் ।*
*பரமாத்மனஸ்து தஸ்மாத் ஸ்வப்நவதேவோத்திதா மாயா ॥*

**चिरं**-நீண்ட காலம், **आनन्दानुभवात्**-ஆனந்தத்தை அனுபவிப்பதால், **सुषुप्तिरिव**-ஸுஷுப்திபோன்ற, **काऽपि**-ஒரு **अवस्था**-நிலை, **परमात्मनः**-பரமாத்மாவிற்கு, **अभूत्**-ஏற்பட்டது. **तस्मात्**-அதிலிருந்து, **स्वप्नवत् एव**-ஸ்வப்நம்போன்றதாகவே **माया**-மாயை, **उत्थिता**-கிளம்பியது.

ஸிருஷ்டிக்கு முன்னுல் வெகுகாலம் ஆனந்தத்தை அனுபவித்துக்கொண்டிருந்த பரமாத்மாவுக்கு ஸுஷுப்தி போன்ற (தன்னை மறந்த) ஓர் நிலை ஏற்பட்டது. ஜீவர் களுக்கு ஸுஷுப்திக்குப் பின் ஸ்வப்னம் ஏற்படுவதுபோல் பரமாத்மாவுக்கும் அந்நிலையிலிருந்து விக்ஷேப சக்தியோடு

கூடிய மாயை கிளம்பியது. இங்கு மாயையை ஸ்வப்னத்திற்குச் சமமாகக் கூறுவதால் ஸ்வப்னத்தில் காணும் பொருள்களைப்போல மாயையும் அதன் கார்யங்களும் வாஸ்தவமல்ல என்று தெரிகிறது. (98)

(அ) மாயையின் லக்ஷணம் கூறுகிறார் :—

**सदसद्विलक्षणाऽसौ परमात्मसदाश्रयाऽनादिः ।**
**सा च गुणत्रयरूपा सूते सचराचरं विश्वम् ॥ ९९ ॥**

ஸதஸத் விலக்ஷணா஽ஸௌ பரமாத்ம ஸதாச்ரயா஽நாதி: ।
ஸா ச குணத்ரய ரூபா ஸூதே ஸசராசரம் விச்வம் ॥

**असौ**-அந்த மாயை, **सदसद्विलक्षणा**-ஸத்தும் அல்ல. அஸத்தும் இல்லை. **परमात्मसदाश्रया**-பரமாத்மா என்னும் உண்மைப்பொருளை ஆச்ரயித்துள்ளது. **अनादिः**-ஆதியற்றது. **गुणत्रयरूपा**-ஸத்வம், ரஜஸ், தமஸ், என்ற முக்குண உருவமான, **साच**-அது, **सचराचरं**-ஸ்தாவர ஜங்கமங்களோடுகூடிய, **विश्वं**-உலகை, **सूते**-உண்டுபண்ணுகிறது.

இந்த மாயையானது என்றும் நிலைத்துள்ள உண்மைப் பொருள் என்று கூறமுடியாது. ஏனெனில் தத்துவ ஞானம் ஏற்பட்டவுடன் அது மறைந்துவிடுகிறது. அப்பொழுது எங்கும் நிறைந்துள்ள பரம்பொருளைத் தவிர வேறு ஒன்றும் தோன்றுவதில்லை. மேலும் அதை அஸத் என்று கூறுவதும் தவறு. ஏனெனில் அஸத்தான பொருள் ஒருபொழுதும் தோன்றாது. மாயையோ தோன்றுகிறது. ஆதலால் அம்மாயை ஸதஸத்விலக்ஷணம். அது ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற முக்குணங்கள் கொண்டது. அது பரம்பொருளை ஆச்ரயித்துள்ளது. அப்பொருளுடைய சேர்க்கையால் அது உலகமனைத்தையும் படைக்கிறது. (99)

(அ) மாயையைப்பற்றிய ஆக்ஷேபங்களுக்கு ஸமாதானம் கூறுகிறார் :—

**माया तावददृश्या दृश्यं कार्यं कथं जनयेत् ।**
**तन्तुभिरदृश्यरूपैः पटोऽत्र दृश्यः कथं भवति ॥ १०० ॥**

மாயா தாவதத்ருஸ்யா த்ருஸ்யம் கார்யம் கதம் ஜனயேத் ।
தந்துபிரத்ருஸ்யரூபை: படோऽத்ர த்ருச்ய: கதம் பவதி ॥

**माया तावत्**-மாயையோ எனில், **अदृश्या**-புலன்களுக்கு எட்டாதது. **कथं**-எவ்வாறு, **दृश्यं**-இந்திரியங்களுக்குப் புலனாகும், **कार्यं**-பொருளை, **जनयेत्**-உண்டுபண்ணும்? **अदृश्यरूपैः**-கண்ணுக்குத் தென்படாத, **तन्तुभिः**-நூல்களால், **दृश्यः पटः**-கண்ணுக்குத் தென்படும் வஸ்திரம், **अत्र**-இங்கு, **कथं**-எப்படி, **भवति**-உண்டாகிறது?

பிரபஞ்சத்திற்கு மாயையைக் காரணமாகக் கூறுவது சரியல்ல. மாயை அத்ருச்யம், இந்திரியங்களுக்குப் புலனாகாதது. பிரபஞ்சம் த்ருச்யம், புலனாகக் கூடியது. ஆகவே கார்ய காரணங்களுக்கு வைலக்ஷண்யம் இருப்பதால் அத்ருச்யமான மாயை த்ருச்யமான பிரபஞ்சத்திற்குக் காரணமாகமுடியாது. கண்ணுக்குத் தெரியும் நூலிலிருந்து தானே துணி உண்டாகிறது. கண்ணுக்குத் தெரியாத நூலிலிருந்து துணி உண்டாவதில்லையே! (100)

**स्वप्ने सुरतानुभवाच्छुक्रद्रावो यथा शुभे वसने ।**
**अनृतं रतं प्रबोधे वसनोपहतिर्भवेत्सत्या ॥ १०१ ॥**

**स्वप्ने पुरुषः सत्यो योषिदसत्या तयोर्युतिश्च मृषा ।**
**शुक्रद्रावस्सत्यस्तद्वत्प्रकृतेऽपि संभवति ॥ १०२ ॥**

ஸ்வப்நே ஸுரதாநுபவாத் சுக்ர த்ராவோ யதா ஶுபே வஸநே ।
அந்ருதம் ரதம் ப்ரபோதே வஸநோபஹதிர் பவேத் ஸத்யா ॥

ஸ்வப்நே புருஷ: ஸத்யோ யோஷிதஸத்யா தயோர் யுதிஸ்ச ம்ருஷா ।
ஶுக்ரத்ராவஸ் ஸத்யஸ் தத்வத் ப்ரக்ருதேऽபி ஸம்பவதி ॥

**स्वप्ने**-கனவில், **सुरतानुभवात्**-ஸ்திரீயுடன் ஸம்போக ஸுகத்தை அனுபவித்ததால், **शुभे वसने**-சுத்தமான ஆடையில், **यथा**-எவ்வாறு, **शुक्रद्रावः**-ரேதஸ்கலனம் ஏற்பட்டு விடுகிறதோ, **रतं**-ஸ்திரீபோகம், **अनृतं**-பொய் ஆயினும், **प्रबोधे**-விழித்துக் கொண்டபின், **वसनोपहतिः**-ஆடை அசுத்தமானது, **सत्या**-உண்மையாக, **भवेत्**-இருக்கும்.

**स्वप्ने**-கனவில், **पुरुषः**-புருஷன், **सत्यः**-உண்மையானவன். ஆனால் **योषित्**-ஸ்திரீ, **असत्या**-பொய்யானவள். **तयोः**-அந்த ஆண் பெண் இருவர்களுடைய, **युतिश्च**-சேர்க்கையும், **मृषा**-பொய்யானது. ஆனால் **शुक्रद्रावः**-ரேதஸ்கலனம், **सत्यः**-உண்மையானது, **तद्वत्**-அதுபோலவே, **प्रकृतेऽपि**-இந்த இடத்திலும், **संभवति**-பொருத்தமாகிறது.

திருஷ்டாந்தத்தைக் காட்டி விலக்ஷணமாக இருந்தாலும் கார்ய காரண பாவம் ஏற்படலாம் என்று கூறுகிறார். ஒரு ஆடவன் கனவில் ஒரு ஸ்திரீயுடன் போகம் செய்வதாகக் காண்கிறான். அதனால் ரேதஸ்கலனம் ஏற்பட்டு அவனுடைய சுத்தமான ஆடை கெட்டுப்போய்விடுகிறது. அவன் விழித்துக்கொண்டவுடன் தன்னுடைய அனுபவம் முற்றிலும் உண்மையல்ல என்று அவன் தெரிந்துகொள்கிறான். அப்படியிருப்பினும் அவனுடைய ஆடை கெட்டுப் போனது உண்மையே. கனவிலும் அவ்வாடவன் இருப்பது உண்மையே. ஆனால் கனவில் தோன்றிய பெண்ணும், அவளுடன் போகமும் பொய்யே. பொய்யான அம்மாதுடன் ஏற்பட்ட பொய்யான கலவியால் அவனுக்கு ஏற்பட்ட ரேதஸ்கலனம் உண்மையே. இதனால் பொய்யான காரணத்தால் உண்மையான கார்யம் உண்டாகும் என்று ஏற்படுகிறது. ஆகவே காரியமும் காரணமும் விலக்ஷணமாக இருக்கலாம். **(101-102)**

**एवमदृश्या माया तत्कार्यं जगदिदं दृश्यम् ।**
**माया तावदियं स्याद्या स्वविनाशेन हर्षदा भवति ॥ १०३ ॥**

ஏவமத்ருஶ்யா மாயா தத்கார்யம் ஜகதிதம் த்ருஶ்யம் |
மாயா தாவதியம் ஸ்யாத் யா ஸ்வவிநாஶேந
ஹர்ஷதா பவதி ||

**एवं**-இம்மாதிரி, **माया**-மாயை, **अदृश्या**-இந்திரியங்களுக்கு எட்டாதது. **तत्कार्यं**-அதனுடைய கார்யமாகிய, **इदं जगत्**-இந்த உலகம், **दृश्यम्**-காணத்தகுந்தது. **तावत्**-மேலும், **या**-எது, **स्वविनाशेन**-தன்னுடைய மறைவிஞல், **हर्षदा**-ஸந்தோஷத்தையளிக்கக்கூடியதாக, **भवति**-ஆகிறதோ, **इयं**-இது, **माया**-மாயையாக, **स्यात्**-ஆகும்.

அதுபோலவே மாயை என்பது இந்திரியங்களால் அறியமுடியாததாக இருந்தாலும் அதனுல் படைக்கப்படும் இவ்வுலகம் நமக்குப் பிரத்யக்ஷமாகத் தோன்றலாம். இப்பேற்பட்ட மாயை இருக்கும்வரை நமக்குத் துன்பம் தான். இது அழிந்தால்தான் ஸுகம். தன் விநாசத்தால் நமக்கு ஸுகத்தைத் தருகிறது மாயை. (103)

रजनीवातिदुरन्ता न लक्ष्यतेऽत्र स्वभावोऽस्याः ।
सौदामिनीव नश्यति मुनिभिः सम्प्रेक्ष्यमाणैव ॥ १०४ ॥

ரஜநீவாதிதுரந்தா ந லக்ஷ்யதேऽத்ர ஸ்வபாவோऽஸ்யா: ।
ஸௌதாமிநீவ நஶ்யதி முனிபி: ஸம்ப்ரேக்ஷ்யமாணைவ ॥

**रजनी इव**-இரவுபோல, **अतिदुरन्ता**-(மாயை) மிகுந்த தீமையைத்தருவது. **अत्र**-இங்கு, **अस्याः**-இதனுடைய, **स्वभावः**-தன்மை, **न लक्ष्यते**-அறியப்படுகிறதில்லை. **मुनिभिः**-முனிவர்களால், **संप्रेक्ष्यमाणा एव**-பார்க்கப்படும்பொழுதே, **सौदामिनी इव**-மின்னல் கொடிபோல, **नश्यति**-மறைந்து விடுகிறது.

இந்த மாயை இரவுபோல் அறியாமை என்னும் இருள் நிரம்பியது. பல இன்னல்களை விளைவிக்கக்கூடியது. சாதாரணமான மனிதர்கள் இதன் ஸ்வபாவத்தை அறிய முடியாது. ஆனுல் முனிவர்கள் ஆத்ம ஞானத்தால்

பார்க்கும் பொழுதே மின்னல் கொடிபோல் உடனேயே மறைந்து விடுகின்றது. அதனுல் இதை दृष्टनष्टस्वभावा அதாவது விசாரிக்க ஆரம்பிக்கும் பொழுதே மறைந்து போகும் தன்மையுள்ளது, பொய்யானது என்று பெரியோர்கள் கூறுகிருர்கள். (104)

माया ब्रह्मोपगताऽविद्या जीवाश्रया प्रोक्ता ।
चिदचिद्ग्रन्थिश्चेतस्तदक्षयं ज्ञेयमा मोक्षात् ॥ १०५ ॥

மாயா ப்ரஹ்மோபகதாऽவித்யா ஜீவாஸ்ரயா ப்ரோக்தா ।
சிதசித்க்ரந்திஸ்சேதஸ் ததக்ஷயம் ஞேயமா மோக்ஷாத் ॥

माया–மாயை, ब्रह्मोपगता–பிரம்மத்தை ஒட்டியது என்றும் अविद्या–அவித்யை, जीवाश्रया–ஜீவனை ஒட்டியது என்றும், प्रोक्ता–கூறப்பட்டுள்ளது. चेतः–சேதஸ் (மனம்) என்பது, चिदचिद्ग्रन्थिः–சித்தினுடையவும் அசித்தினுடையவும் இணைப்பால் உண்டானது. तत्–அந்த மனம், आ मोक्षात्–மோக்ஷமுண்டாகும் வரையில், अक्षयम्–அழியாததாக, ज्ञेयम्–அறியத்தக்கது.

மாயை என்பது பிரம்மமென்ற வஸ்துவை ஆச்ரயித்துள்ளது. அவித்யை என்பது ஜீவனையண்டி நிற்கின்றது. இவற்றுள் விக்ஷேபம் என்ற சக்தியை முக்யமாகக் கொண்டது மாயை. அதாவது அஃது ஒரு பொருளை மற்றொன்ருகக் காட்டும் தன்மை வாய்ந்தது. ஆவரண சக்தியை முக்யமாகக் கொண்டது அவித்யை அதாவது அஃது உள்ள பொருளை மறைத்து விடுகிறது இதுதான் மாயைக்கும் அவித்யைக்கும் உள்ள வேறுபாடு ஜீவனிடத்தில் சேதஸ் அதாவது மனம் என்ற ஒரு தத்வம் உள்ளது. இதை அந்தக்கரணம் என்றும் கூறுவர் இது சித் அசித் என்பவைகளுடைய இணைப்பினுல் ஏற்படுகின்றது. இதில் சித் என்பது சைதன்யம் அசித் என்பது அவித்யை எனப்படும் இவ்வாறு உண்டாகும் சேதஸ் என்பது பரம புருஷார்த்தமாகிய மோக்ஷம் ஏற்படும் வரை அழிவற்றதாக இருக்கும். (105)

**घटमठकुड्यैरावृतमाकाशं तत्तदाह्वयं भवति ।**
**तद्वदविद्यावृतमिह चैतन्यं जीव इत्युक्तः ॥ १०६ ॥**

கட மட குட்யைராவ்ருதமாகாஶம் தத்ததாஹ்வயம் பவதி ।
தத்வதவித்யாவ்ருதமிஹ சைதன்யம் ஜீவ இத்யுக்த: ॥

**घट**-குடம், **मठ**—மடம், **कुड्यैः**-சுவர் இவைகளால், **आवृतं**-சூழப்பட்ட, **आकाशं**—இடைவெளி, **तत्तदाह्वयं**-அவ்வப்பெயரை, உடையதாக, **भवति**—ஆகிறது. **तद्वत्**-அதுபோலவே, **इह**-இங்கு, **अविद्यावृतं**—அவித்யையால் மறைக்கப்பட்ட, **चैतन्यं**-ஆத்மா **जीव इति**-ஜீவன் என்று, **उक्तः**—கூறப்பட்டது.

ஆகாசம் எங்கும் பரந்துள்ளது. அழிவற்றது. ஆனல் அது ஒரு குடத்திற்குள் அடைபட்டிருக்கும்பொழுது கடாகாசம் என்றும் மடத்திற்குள் இருக்கும்பொழுது மடாகாசம் என்றும் சுவர்களுக்கிடையில் இருக்கும்பொழுது குட்யாகாசம் என்றும் கூறப்படுகிறது. ஆனல் அதை அடைத்திருக்கும் ஆவரணங்கள் விலகியவுடன் ஆகாசம் ஒன்று தான் எஞ்சுகிறது. அதுபோலவே இந்த ஆத்மா எங்கும் நிறைந்துள்ளது. நித்யமானது. அது அவித்யையால் மறைக்கப்படும்பொழுது ஜீவன் என்ற பெயரை அடைகிறது. *(106)*

**ननु कथमावरणं स्यादज्ञानं ब्रह्मणो विशुद्धस्य ।**
**सूर्यस्येव तमिस्रं रात्रिभवं स्वप्रकाशस्य ॥ १०७ ॥**

நநு கதமாவரணம் ஸ்யாதக்ஞானம் ப்ரஹ்மணோ விஶுத்தஸ்ய ।
ஸூர்யஸ்யேவ தமிஸ்ரம் ராத்ரிபவம் ஸ்வப்ரகாஶஸ்ய ॥

**विशुद्धस्य**-சுத்த சேதனனுன, **ब्रह्मणः**-பரமாத்மாவிற்கு, **कथं**-எவ்வாறு, **अज्ञानं**-அஞ்ஞானம், **स्वप्रकाशस्य**-தானுக விளங்கும் தன்மைவாய்ந்த, **सूर्यस्य**-கதிரவனுக்கு, **रात्रिभवं**-இரவில் உண்டாகும், **तमिस्रं इव**-இருள்போல, **आवरणं**-மறைப்பாக, **ननु स्यात्**—ஆகும் ?

தானுகவே ஒளிரும் தன்மைவாய்ந்த கதிரவன் உதிக்கும்பொழுதே இரவில் மிளிரும் இருள் தானுகவே அகன்றுவிடுகின்றது. அவ்விருள் சூரியனை மறைக்கும் தன்மை வாய்ந்ததாக எங்ஙனம் ஆக முடியும்? அதேபோல ஸ்வத: ப்ரகாசமான ஆத்மாவை அஞ்ஞானம் எவ்வாறு மறைக்க முடியும்? (107)

दिनकरकिरणोत्पन्नैर्मेघैराच्छाद्यते यथा सूर्यः ।
न खलु दिनस्य दिनत्वं तैर्विकृतैः सान्द्रसंघातैः ॥ १०८ ॥

தினகர கிரணோத்பந்நைர் மேகைராச்சாத்யதே யதா
ஸூர்ய: ।
ந கலு தினஸ்ய தினத்வம் தைர் விக்ருதை:
ஸாந்த்ர ஸங்காதை: ॥

**यथा**-எவ்வாறு, **दिनकर**-சூர்யனுடைய, **किरण**-கதிர்களால், **उत्पन्नैः**-உண்டான, **मेघैः**-மேகங்களால், **सूर्यः**-சூர்யன் **आच्छाद्यते**-மறைக்கப்படுகிருனே (ஆனுலும்), **सान्द्रसंघातैः**-மிகவும் அடர்த்தியான, **विकृतैः**-காரியங்களான, **तैः**-அந்த மேகங்களால், **दिनस्य**-பகலின், **दिनत्वं**-பகல் தன்மை, **न खलु**-மறைக்கப்படுகிறதில்லேயோ.

சூரியனுடைய கிரணங்களே தண்ணீரை உட்கொள்வதால் மேகங்களாக ஆகின்றன. அத்தகைய மேகங்களே சூரியன் பிரகாசிக்கும் பகல் காலத்தில் சூரியனை நமக்குத் தென்படாமலிருக்கும்படி மறைக்கின்றன. ஆயினும் அது பகல் காலம் என்பதை மறைப்பதில்லே. சூரியன் நம் கண்ணுக்குப் புலப்படாவிட்டாலும் பகல் என்பதை நாம் தெரிந்துகொள்கிருேம். (108)

अज्ञानेन तथाऽऽत्मा शुद्धोऽपि च्छाद्यते सुचिरम् ।
न परं तु लोकसिद्धा प्राणिषु तच्चेतनाशक्तिः ॥ १०९ ॥

அஞ்ஞானேந ததாத்மா ஶுத்தோऽபி ச்சாத்யதெ ஸுசிரம் ।
ந பரம் து லோகஸித்தா ப்ராணிஷு தச்சேதநாசக்தி: ॥

**तथा**-அதுபோலவே, **आत्मा**-ஆத்மாவானது, **शुद्धोऽपि**-சுத்தமாக இருப்பினும், **अज्ञानेन**-அவித்யையால், **सुचिरं**-வெகு காலம், **छाद्यते**-மறைக்கப்படுகிறது. **परं तु**-ஆனால், **प्राणिषु**-பிராணிகளிடத்தில், **लोकसिद्धा**-உலகத்தில் பிரசித்திபெற்ற, **तच्चेतनाशक्तिः**-அதனுடைய ஞானசக்தி, **न छाद्यते**-மறைக்கப்படுவதில்லை.

மேகங்களால் ஸூரியன் மறைக்கப்படுவதுபோல சுத்தமான ஆத்மாவும் அக்ஞானத்தால் மறைக்கப்படுகிறது. ஆனாலும் அதன் சைதன்ய சக்தி மறைக்கப்படாமல் இருப்பதால் அதன் உதவியைக் கொண்டு சேதனர்கள் எல்லா விஷயங்களையும் தெரிந்து கொள்கின்றனர். (109)

## ९. लिङ्गदेहादिनिरूपणप्रकरणम् ॥

(அ) மாயையைப் பற்றி விரிவாகக் கூறிவிட்டு ப்ரஹ்மத்திற்கு மாயையால் ஜீவபாவம் ஏற்படுவதையும், ஜீவனுடைய உபாதிகளான சரீரங்களையும் கூறுகிறார் :—

स्थूलशरीरस्यान्तर्लिंगशरीरं च तस्यान्तः ।
कारणमस्याप्यन्तस्ततो महाकारणं तुर्यम् ॥ ११० ॥

## 9. லிங்கதேஹாதி நிரூபண ப்ரகரணம்

ஸ்தூலஶரீரஸ்யாந்தர் லிங்கஶரீரம் ச தஸ்யாந்த: ।
காரணமஸ்யாப்யந்தஸ்ததோ மஹாகாரணம் துர்யம் ॥

**स्थूलशरीरस्य अन्तः**-ஸ்தூல சரீரத்திற்குள், **लिङ्गशरीरं च**-லிங்க சரீரமும், **तस्य अन्तः**-அதற்குள், **कारणं**-காரண சரீரமும் **ततः**-பிறகு, **अस्यापि अन्तः**-அதற்கும் உள்ளாக, **तुर्यं**-நான்காவதான, **महाकारणं**-மஹாகாரண சரீரமும் (உள்ளன).

ஸ்தூல சரீரம், அதனுள் உள்ள லிங்க சரீரம் (ஸூக்ஷ்ம சரீரம்) இதற்கும் உள்பட்ட காரண சரீரம், இதனுளுள்ள மஹாகாரண சரீரம் என்று ஜீவனுக்கு நான்கு சரீரங்கள் உள்ளன. (110)

स्थूलं निरूपितं प्रागधुना सूक्ष्मादितो ब्रूमः ।
अंगुष्ठमात्रः पुरुषः श्रुतिरिति यत्प्राह तत्सूक्ष्मम् ॥ १११ ॥

सूक्ष्माणि महाभूतान्यसवः पञ्चेन्द्रियाणि पञ्चैव ।
षोडशमन्तःकरणं तत्संघातो हि लिंगतनुः ॥ ११२ ॥

ஸ்தூலம் நிருபிதம் ப்ராகதுனா ஸூக்ஷ்மாதிதோ ப்ரூம: ।
அங்குஷ்டமாத்ர: புருஷ: ஶ்ருதிரிதி யத் ப்ராஹ
தத் ஸூக்ஷ்மம் ॥

ஸூக்ஷ்மாணி மஹாபூதாந்யஸவ: பஞ்சேந்த்ரியாணி
பஞ்சைவ ।
ஷோடஶமந்த:கரணம் தத்ஸங்காதோ ஹி லிங்கதனு: ॥

**प्राक्**-முன்னால், **स्थूलं**-ஸ்தூல சரீரம், **निरूपितम्**-நிருபிக்கப்பட்டது. **अधुना**-இப்பொழுது, **सूक्ष्मादितः**-சூக்ஷ்ம சரீரத்திலிருந்து துவங்கி, **ब्रूमः**-கூறுகிறோம். “ **पुरुषः**-புருஷன், **अंगुष्ठमात्रः**-கட்டைவிரல் அளவுள்ளவன் ”, **इति**-என்று, **यत्**-எதை, **श्रुतिः**-வேதம், **प्राह**-கூறுகிறதோ, **तत्**-அது, **सूक्ष्मम्**-ஸூக்ஷ்மசரீரம்.

**सूक्ष्माणि**-சூக்ஷ்மமான, **महाभूतानि**-ஐந்து மஹாபூதங்கள் **पञ्च**-ஐந்து, **असवः**-பிராணன்கள், **पञ्च**-ஐந்து, **इन्द्रियाणि**-புலன்கள், **षोडशं**-பதினாறுவதான, **अन्तःकरणं**-மனம், **तत्संघातः एव**-அவைகளின் தொகுதிதான், **लिङ्गतनुः हि**-லிங்க சரீரம் என்று கூறப்படுகின்றது.

முதலாவதான தேஹநிந்தா ப்ரகரணத்தில் (சு. 19) ஸ்தூல சரீரத்தைப்பற்றிக் கூறியுள்ளோம். இப்பொழுது லிங்க சரீரம் என்ற சூக்ஷ்ம சரீரம் முதலியவற்றைப்பற்றிக் கூறுவோம். ‘**अंगुष्ठमात्रः पुरुषः**’ என்ற வேத வசனம் எதைக்கொண்டு அபரிச்சின்னமான ஆத்மாவை ‘கட்டைவிரல் ப்ரமாணம்’ என்று கூறுகிறதோ அதுதான் சூக்ஷ்ம சரீரம். ஆத்மாவின் உபாதி ஸூக்ஷ்ம சரீரம். (111)

ஐந்து ஸூக்ஷ்மமான மஹா பூதங்கள், அதாவது பஞ்சதன்மாத்திரைகள், பிராணன், அபானன், வியானன், உதானன் ஸமானன், என்ற பஞ்ச பிராணன்கள், காது, த்வக், கண், நாக்கு, மூக்கு என்ற ஐந்து இந்திரியங்கள் மனம் இவை சேர்ந்து சூக்ஷ்ம சரீரம் எனப்படும். (112)

**तत्कारणं स्मृतं यत्तस्यान्तर्वासनाजालम् ।**
**तस्य प्रवृत्तिहेतुर्बुद्ध्याश्रयमत्र तुर्यं स्यात् ॥ ११३ ॥**

தத் காரணம் ஸ்ம்ருதம் யத் தஸ்யாந்தர் வாஸநாஜாலம் ।
தஸ்ய ப்ரவிருத்திஹேதுர் புத்யாஶ்ரயமத்ர துர்யம் ஸ்யாத் ॥

**तस्यान्तः**-அந்த லிங்கசரீரத்திற்குள், **यत्** -எந்த, **वासना-जालं**-வாஸனைக் கூட்டம் உண்டோ, **तत्**-அது, **कारणं स्मृतं**-காரணசரீரம் எனப்படும். **तस्य**-அந்த வாஸனாஜாலம், **प्रवृत्तिहेतुः**-ப்ரவ்ருத்திப்பதற்குக் காரணமான, **बुद्ध्याश्रयं**-புத்தியை ஆச்ரயித்த அக்ஞானம், **अत्र**-இங்கு, **तुर्यं स्यात्**-நான்காவதாக ஆகும்.

நாம் செய்யும் நல்வினை, தீவினைகள், அறியும் விஷயங்கள் எல்லாம் ஸூக்ஷ்ம ரூபமாக நம் மனதில் அடங்கி இருக்கிறது. இதற்கு வாஸனை என்று பெயர். இவை பல பிறவிகளில் சேர்ந்துள்ளது ஏராளமாக இருக்கிறது. இந்த வாஸனா ஜாலம் காரண சரீரம் எனப்படும். இந்த வாஸனை ஏற்படுவதற்குக் காரணமான அக்ஞானம் நான்காவதான மஹாகாரணம் எனப்படும். ஸாதாரணமாக அக்ஞானத்தைக் காரண சரீரமாகக் கூறி மூன்று சரீரங்கள் சொல்லுவது உண்டு. இங்கு வாஸனையைக் காரணமாகவும் அக்ஞானத்தை மஹர காரணமாகவும் கூறி நான்கு சரீரங்களை காட்டுகிறார். (113)

(அ) ஜீவஸ்வரூபத்தைக் காட்டுகிறார் :—

**तत्सारभूतबुद्धौ यत्प्रतिफलितं तु शुद्धचैतन्यम् ।**
**जीवः स उक्तः आद्यैर्योऽहमिति स्फूर्तिकृद्वपुषि ॥ ११४ ॥**

தத்ஸார பூத புத்தெள யத் ப்ரதிபலிதம் து

ஶுத்த சைதன்யம் ।

ஜீவ: ஸ உக்த: ஆத்யைர் யோऽஹமிதி

ஸ்பூர்த்திக்ருத் வபுஷி ॥

तत्सारभूत-அந்த சரீரத்தில் முக்கியமாகத் திகழ்கின்ற, बुद्धौ-புத்தியில், यत्-எந்த, शुद्धचैतन्यं-சுத்த சைதன்யம், प्रतिफलितं-பிரதிபலித்துள்ளதோ, सः-அது, जीवः-ஜீவனுக, आद्यैः-முன்னோர்களால், उक्तः-சொல்லப்பட்டது. यः-எவன், वपुषि-சரீரத்தில், अहमिति-நான் என்று, स्फूर्तिकृत्-அபிமானம் கொள்கிருனே (அவனே ஜீவன்).

கீழே கூறப்பட்ட சரீரங்களில் ஸாரமான புத்தியில் சுத்த சைதன்யம் ப்ரதிபலிக்கிறது. புத்தியுடன் கூடிய இந்த பிரதிபிம்பம்தான் ஜீவன் எனப்படும். இந்த ஜீவன் தான் சரீரத்தில் நான் என்று அபிமானம் கொள்கிருன்.

चरतरतरङ्गसङ्गात्प्रतिबिम्बं भास्करस्य च चलं स्यात् ।
अस्ति तथा चञ्चलता चैतन्ये चित्तचाञ्चल्यात् ॥ ११५ ॥

சரதர தரங்க ஸங்காத் ப்ரதிபிம்பம் பாஸ்கரஸ்ய ச

சலம் ஸ்யாத் ।

அஸ்தி ததா சஞ்சலதா சைதன்யே சித்த சாஞ்சல்யாத் ॥

भास्करस्य-சூரியனுடைய, प्रतिबिम्बं-பிரதிபிம்பம், चरतर-மிகவும் அசைகின்ற, तरङ्ग-அலைகளின், सङ्गात्-சேர்க்கையால், चलं-அசைவதாக, स्यात्-ஆகும். तथा-அதுபோலவே चित्तचाञ्चल्यात्-புத்தியினுடைய சலனத்தினுல், चैतन्ये-சைதன்யத்தில், चञ्चलता-அசையும் தன்மை, अस्ति-இருக்கிறது.

ஸமுத்திரத்தில் அலைகள் எப்பொழுதும் அசைந்து கொண்டே இருக்கின்றன. அதனுல் அவைகளில் பிரதிபலிக்கும் சூரியனும் அசைவதுபோல் காணப்படுகின்றது. ஆனுல் உண்மையில் ஆகாசத்தில் உள்ள சூரியன் அசைவ

தில்லை. ஜலத்தின் அசைவு ஸூர்யனிடம் காணப் படுகிறது. அதுபோல சுத்த சைதன்யம் அசைவற்றது. ஆனாலும் சலிக்கும் புத்தியில் ப்ரதிபலிப்பதால் புத்தியி லுள்ள சலனம் ஆத்மாவிலும் தோன்றுகிறது. உண்மை யில் புத்திக்குத்தான் சாஞ்சல்யமே தவிர ஆத்மாவுக்குச் சலனம் கிடையாது. (115)

नन्वर्कप्रतिबिम्बः सलिलादिषु यः स चावभासयति ।
किमितरपदार्थनिवहं प्रतिबिम्बोऽप्यात्मनस्तद्वत् ॥ ११६ ॥

நந்வர்க்க ப்ரதிபிம்ப: ஸலிலாதிஷு ய: ஸ சாவபாஸயதி ।
கிமிதர பதார்த்த நிவஹம் ப்ரதிபிம்போப்யாத்மநஸ் தத்வத்॥

**सलिलादिषु**-தண்ணீர் முதலியவற்றில், **यः**-யாதொரு, **अर्कप्रतिबिम्बः**-சூரியனுடைய பிரதிபிம்பம் தோன்றுகின்றதோ **सः**-அது, **इतरपदार्थनिवहं**-மற்றப்பொருள்களின் கூட்டத்தை **अवभासयति किम्**-விளங்கச் செய்கின்றதா? **तद्वत्**-அது போலவே, **आत्मनः**-ஆத்மாவினுடைய, **प्रतिबिम्बः अपि**-பிரதி பிம்பமும், **ननु**-அல்லவா?

ஆகாசத்தில் பிரகாசிக்கின்ற சூர்யன் எல்லாப் பொருள் களையும் பிரகாசிக்கச் செய்கின்றது. ஆனால் தண்ணீரில் பிரதிபலிக்கும் சூரிய பிரதிபிம்பம் மற்றப் பொருள்களை நன்றாக விளங்கச் செய்வதில்லை. ஆகவே ஸூரிய பிரதி பிம்ப திருஷ்டாந்தத்தைக் கொண்டு அந்தக்கரண பிரதி பிம்பம் ஜீவன் என்று கூறினால் ஸூர்ய பிரதிபிம்பத்தைப் போலவே ஜீவனுக்கும் ஒன்றையும் பிரகாசப்படுத்தும் சக்தி இல்லை என்று ஆகிவிடுமே, இது சரியல்லவே! (116)

प्रतिफलितं यत्तेजः सवितुः कांस्यादिपात्रेषु ।
तदनुप्रविष्टमन्तर्गृहमन्यानर्थान् प्रकाशयति ॥ ११७ ॥

ப்ரதிபலிதம் யத் தேஜ: ஸவிது: காம்ஸ்யாதி பாத்ரேஷு ।
ததனுப்ரவிஷ்டமந்தர்க்ருஹமன்யானர்த்தான் ப்ரகாசயதி ॥

**सवितुः**-சூரியனுடைய, **यत्**-எந்த, **तेजः**-ஒளி, **कांस्यादि-पात्रेषु**-வெண்கலம் முதலிய பாத்திரங்களில், **प्रतिफलितं**-பிரதிபலித்துள்ளதோ, **अनुप्रविष्टं**-ப்ரதிபலித்த, **तत्**-அந்த ஒளி, **अन्तर्गृहं**-வீட்டிற்குள், **अन्यान्**-மற்ற, **अर्थान्**-பொருள்களை, **प्रकाशयति**-விளக்குகின்றது.

முன்பு எழுப்பப்பட்ட ஆக்ஷேபத்திற்கு இங்கு வேறு ஒரு உதாஹரணத்தைக்கொண்டு ஸமாதானம் கூறப்படுகின்றது. சூரியனுடைய ஒளி வெண்கலப் பாத்திரம், வெள்ளிப் பாத்திரம் முதலியவற்றில் பிரதிபலிக்கிறது. அதனால் அப்பாத்திரங்கள் ஒளி பொருந்தியவைகளாக ஆகின்றன. அவ்வாறு அவைகளில் பிரதிபலிக்கப்பட்ட ஒளியே வீட்டிற்குள் உள்ள எல்லாப் பொருள்களையும் பிரகாசப்படுத்துகின்றது. (117)

चित्प्रतिबिम्बस्तद्वद्बुद्धिषु यो जीवतां प्राप्तः ।
नेत्रादीन्द्रियमार्गैर्बहिरर्थान्सोऽवभासयति ॥ ११८ ॥

சித்ப்ரதிபிம்பஸ் தத்வத் புத்திஷு யோ ஜீவதாம் ப்ராப்த: ।
நேத்ராதீந்த்ரிய மார்கைர் பஹிரர்த்தான் ஸோऽவபாஸயதி ॥

**तद्वत्**-அதுபோல், **बुद्धिषु**-புத்திகளில், **यः**-யாதொன்று, **चित्प्रतिबिम्बः**-சுத்த சைதன்யத்தின் பிரதிபிம்பம், **जीवतां**-ஜீவனின் தன்மையை, **प्राप्तः**-அடைந்ததோ, **सः**-அது, **नेत्रादीन्द्रियमार्गैः**-கண் முதலான பொறிகளின் வழியாக, **बहिरर्थान्**-வெளியே உள்ள பொருள்களை, **अवभासयति**-விளக்குகிறது.

அதுபோலவே சுத்த சைதன்யமும் புத்தியில் பிரதிபலிக்கிறது. அதனால் அது ஜீவன் என்ற நிலையை அடைந்தது. அந்த ஜீவசைதன்யம் கண் முதலான ஐம்புலன்களின் வழியாக வெளியில் உள்ள எல்லாப் பொருள்களையும் விளங்கச்செய்கிறது. (118)

## १०. अद्वैतप्रकरणम्

(அ) ஒரே ப்ரஹ்ம தத்வம்தான் உபாதிகளால் பலவாகத் தோன்றுகிறது என்னும் அத்வைத ஸித்தாந்தத்தை பிரமாணங்களால் விவரிக்கிறார் :—

तदिदं य एवमार्यो वेद ब्रह्माहमस्मीति ।
स इदं सर्वं च स्यात्तस्य हि देवाश्च नेशतेऽभूत्यै ॥ ११९ ॥

एषां स भवत्यात्मा योऽन्यामथ देवतामुपास्ते ।
अहमन्योऽसावन्यश्चेत्थं यो वेद पशुवत्सः ॥ १२० ॥

इत्युपनिषदामुक्तिस्तथा श्रुतिर्भगवदुक्तिश्च ।
ज्ञानी त्वात्मैवेयं मतिर्ममेत्यत्र युक्तिरपि ॥ १२१ ॥

## 10. அத்வைத ப்ரகரணம்

ததிதம் ய ஏவமார்யோ வேத ப்ரஹ்மாஹமஸ்மீதி ।
ஸ இதம் ஸர்வம் ச ஸ்யாத் தஸ்ய ஹி தேவாஸ்ச
நேஸதேऽபூத்யை ॥

ஏஷாம் ஸ பவத்யாத்மா யோऽந்யாமத
தேவதாமுபாஸ்தே ।
அஹமந்யோऽஸாவந்யஸ்சேத்தம் யோ வேத பஸுவத் ஸ: ॥

இத்யுபநிஷதாமுக்திஸ் ததா ஸ்ருதிர் பகவதுக்திஸ்ச ।
ஞானீ த்வாத்மைவேயம் மதிர் மமேத்யத்ர யுக்திரபி ॥

**यः**–எந்த, **आर्यः**–மஹான், **तदिदं**–அந்த இந்த எல்லா பிராணிகளுடைய புத்தியில் நுழைந்துள்ள சுத்த ப்ரஹ்ம சைதன்யத்தை, " **अहं ब्रह्म अस्मि**–நான் ப்ரஹ்ம சைதன்யமாக இருக்கிறேன் ", **इति एवं**–என்றிவ்வாறு, **वेद**–அறிந்து கொள்கிறானோ, **सः**–அவன், **इदं सर्वं च**-இது எல்லாமாகவும், **स्यात्**, ஆவான். **तस्य**–அவனுக்கு, **अभूत्यै**–ஸர்வாத்மபாவம் ஏற்படாதபடி செய்ய, **देवाश्च**–தேவர்களும், **नेशते**–சக்தி

உள்ளவர்கள் அல்ல. **एषां**-இந்த தேவர்களுக்கு, **सः**-அவன், **आत्मा**—ஆத்மாவாக, **भवति**-ஆகிருன். **अथ**-இப்படியல்லாமல் **यः**—எவன், **देवतां**—பரமாத்மாவை, **अन्यां**—வேருக, **उपास्ते**—உபாஸிக்கிருனே, **यः**-எவன், **अहं**-நான், **अन्यः**-வேறு, **असौ च**—அவனும், **अन्यः**—வேறு, **इत्थं**—இவ்வாறு, **वेद**-அறிகிருனே, **सः**—அவன், **पशुवत्**—பசுவுக்குத் துல்யமானவன். **इति**-என்று **उपनिषदां** உபநிஷத்துக்களின், **उक्तिः**-வசனம், **तथा**-அவ்வாறு **श्रुतिः**-ச்ருதியும், "**ज्ञानी तु**-ஞானியோவெனில், **आत्मैव**—ஆத்மா தான், **इयं**-இது, **मम**-என்னுடைய, **मतिः**—தீர்மானம், **इति**—என்ற, **भगवदुक्तिश्च**-பகவானுடைய வசனமும் காணப் படுகின்றது. **अत्र**-இந்த விஷயத்தில், **युक्तिरपि**-யுக்தியும் இருக்கிறது.

பிருஹதாரண்யக உபநிஷத்தில் 1-வது அத்யாயம் 4-வது ப்ராஹ்மணத்தில் பின் வரும் மந்திரம் காணப் படுகிறது. "**तदिदमप्येतर्हि य एवं वेद अहं ब्रह्मास्मीति स इदं सर्वं भवति तस्य ह न देवाश्चनाभूत्या ईशते आत्मा हि एषां स भवति अथ योऽन्यां देवतामुपास्तेऽन्योऽसावन्योऽहमस्मीति न स वेद यथा पशुः**"। இந்த மந்திரத்திலுள்ள பதங்கள் இந்த சுலோகங் களில் காணப்படுகின்றன. "இப்பொழுதும் எவன் ஸர்வாத்மாவான ப்ரஹ்மம் நான் என்று அறிந்து கொள் கிருனே அவன் வாமதேவர்போல ஸர்வாத்மாவாக ஆகி விடுகிருன். இந்த ஞானி தேவர்களுக்கும் ஆத்மாவாக இருக்கிறபடியால் இவனுக்கு ப்ரஹ்மபாவம் ஏற்படாமல் தடுக்க தேவர்களாலும் முடியாது. அத்வைதமான ப்ரஹ்ம தத்வத்தை நான் என்று அறிந்து கொள்ளாமல் அவர்வேறு, தான்வேறு என்று எண்ணிக்கொண்டு தன்னைக்காட்டிலும் வேருக உபாஸிக்கிறவன் உண்மை அறிவு கொண்டவன் அல்ல அவன் பசுவுக்குத் துல்யமானவன்." என்பது இம் மந்திரத்தின் கருத்து. இதில் "ப்ரஹ்மதத்வம் ஒன்றே உண்மைப் பொருள். அதுவே எல்லாமாகத் தோன்றுகிறது. ஜீவனும் அந்த ப்ரஹ்மம்தான்" என்ற அத்வைத ஸித்தாந்தம் காட்டப்பட்டிருக்கிறது. இந்த

உபநிஷத் அத்வைதத்திற்கு ப்ரமாணம். இதுமட்டுமல்ல. மற்றும் பல சுருதிகள் இதே கருத்தைக் காட்டுகின்றன. 'ज्ञानी त्वात्मैव मे मतम्' (ஞானியோவெனில் நான்தான் என்பது என் தீர்மானம்) என்ற பகவத் கீதாவாக்யமும் இதற்கு ப்ரமாணம். இதற்குத் தகுந்த யுக்திகளும் இருக்கின்றன. (119-121)

ऋजु वक्रं वा काष्ठं हुताशदग्धं सदग्नितां याति ।
तत्किं हस्तग्राह्यं ऋजुवक्राकारसत्वेऽपि ॥ १२२ ॥

ருஜு வக்ரம் வா காஷ்டம் ஹுதாச தக்தம்
ஸதக்னிதாம் யாதி ।
தத்கிம் ஹஸ்த க்ராஹ்யம் ருஜு வக்ராகார ஸத்வேऽபி ॥

ऋजु-நேராகவோ, वा-அல்லது, वक्रं-கோணலாகவோ உள்ள, काष्ठं-கட்டை, हुताशदग्धं-நெருப்பினால் கொளுத்தப்பட்டதாக, सत्-இருந்துகொண்டு, अग्नितां-நெருப்பின் தன்மையை, याति-அடைகிறது. ऋजुवक्राकारसत्वे अपि-நேர் அல்லது கோணலான தோற்றத்தைப் பெற்றதாயினும், तत् அது, हस्तग्राह्यं किम्-கையினால் பிடிக்கத்தக்கதாக ஆகின்றதா?

நேராகவோ அல்லது கோணலாகவோ உள்ள கட்டை கையினால் எடுக்கத் தக்கதாக இருக்கின்றது. நெருப்புபற்றி எரியும்பொழுது அக்கட்டை அக்னிமயமாக ஆகிவிடுகின்றது. ஆனால் அதனுடைய தோற்றம் மாறுபடுவதில்லை. அது முன்போலவே நேராகவோ அல்லது வளைந்தோ நிற்கின்றது. ஆனால் அது அக்னிமயமாக இருக்கும்பொழுது அதைக் கையால் எடுக்கமுடிகின்றதா? இல்லை என்பது திண்ணம். (122)

एवं य आत्मनिष्ठो ह्यात्माकारश्च जायते पुरुषः ।
देहीव दृश्यतेऽसौ परं त्वसौ केवलो ह्यात्मा ॥ १२३ ॥

ஏவம் ய ஆத்மநிஷ்டோ ஹ்யாத்மாகாரஸ்ச ஜாயதே புருஷ꞉ ।
தேஹீவ த்ருஸ்யதேऽஸௌ பரம் த்வஸௌ கேவலோ
ஹ்யாத்மா ॥

**एवं**-இம்மாதிரியே, **यः पुरुषः**-எந்த மனிதன், **आत्मनिष्ठः**-ஆத்மாவிலேயே நிலைத்து நின்று, **आत्माकारः च**-ஆத்மஸ்வரூபியாகவே, **जायते**-ஆகிவிடுகின்றானோ, **असौ**-அவன், **देही इव**-சரீரத்துடன் கூடியவன்போல், **दृश्यते**-காணப்படுகிறான். **परन्तु**-ஆனால், **असौ**-அவன், **केवलः आत्मा हि**-சுத்தசைதன்யமான பரமாத்மாதான் அல்லவா ?

அதுபோலவே அநேக காலமாக ஆத்மானுஸந்தானம் செய்ததின் பயனாக பரமாத்மாவினிடத்திலேயே ஈடுபட்டு, நிலைகொண்டு தன்மயமாக நிற்கின்ற ஒரு மகாபுருஷன் வெளித் தோற்றத்தால் மற்றவர்களைப்போலவே தேஹத்துடன் கூடியவனாக விளங்கினாலும், அவன் அஞ்ஞானம் நீங்கியதால் சுத்தமான பரமாத்மாவே என்பது நிச்சயம்.

(அ) ஒரே தத்வம் உபாதி பேதத்தால் பலவாறாகத் தோன்றுவதற்குப் பல திருஷ்டாந்தங்களைக் கூறுகிறார்:—

**प्रतिफलति भानुरेकोऽनेकशरावोदकेषु यथा ।**
**तद्वदसौ परमात्मा ह्येकोऽनेकेषु देहेषु ॥ १२४ ॥**

ப்ரதிபலதி பானுரேகோऽநேகஸராவோதகேஷு யதா ।
தத்வதஸௌ பரமாத்மா ஹ்யேகோऽநேகேஷு தேஹேஷு ॥

**यथा**-எவ்வாறு, **अनेकशरावोदकेषु**-பல பாத்திரங்களிலுள்ள தண்ணீர்களில், **एकः भानुः**-ஒரு சூரியன், **प्रतिफलति**-(பலவாக) பிரதிபலிக்கின்றதோ, **तद्वत्**-அவ்வாறே, **एकः**-ஒன்றாகிய, **असौ परमात्मा**-அந்தப் பரம்பொருள், **अनेकेषु**-பல, **देहेषु**-தேகங்களில், **प्रतिफलति**-(பலவாக) தோன்றுகின்றது.

ஆகாயத்தில் இருக்கும் சூரியன் ஒருவனாயிருந்தாலும் தண்ணீர் நிறைந்த பல பாத்திரங்களில் பிரதிபலிக்கும் பொழுது பல சூர்யன்களாகத் தோற்றமளிக்கின்றான்.

அதுபோலவே எங்கும் நிறைந்த பரமாத்மா ஒன்றுயிருந்தாலும் பல சரீரங்களின் சம்பந்தத்தால் பலவாகக் காணப்படுகிறுன். (124)

(அ) உபாதி தர்மங்கள் பிம்பத்தைச் சேராது :—

दैवादेकशरावे भग्ने किं वा विलीयते सूर्यः ।
प्रतिबिम्बचञ्चलत्वादर्कः किं चञ्चलो भवति ॥ १२५ ॥

தைவாதேக ஶராவே பக்னே கிம் வா விலீயதே ஸூர்ய: ।
ப்ரதிபிம்ப சஞ்சலத்வாத்ர்க: கிம் சஞ்சலோ பவதி ॥

दैवात् -தெய்வச்செயலாக, एकशरावे भग्ने-ஒரு பாத்திரம் உடைந்தவுடன், सूर्यः-கதிரவன், किं वा विलीयते-அழிந்து விடுகிறுரு என்ன? प्रतिबिम्बचञ्चलत्वात्-பிரதிபிம்பம் அசையும் தன்மை வாய்ந்துள்ளதாயின், अर्कः-சூரியன், किं चञ्चलः भवति-அசைகின்றவனுக ஆகின்றுரு?

துரதிருஷ்ட வசமாக அப்பாத்திரங்களில் ஒன்று உடைந்துவிட்டால் சூரியன் நாசமடைந்துவிடுகின்றுரு? இல்லே அல்லவா அதுபோலவே சரீரங்களில் ஒன்று அழிந்துவிட்டாலும் ஆத்மா நாசம் அடைவதில்லே பாத்திரத்திலுள்ள பிரதிபிம்பம் அசைவதால் சூரியன் அசைகிறுரு? இல்லே அல்லவா அதுபோல பிரதிபிம்பமான ஜீவனிடம் காணப்படும் விகாரங்கள் பிம்பமான ஆத்மாவுக்குக் கிடையாது. (125)

(அ) ஒரே ஆத்மாவினுலேயே உலகில் எல்லா வியவஹாரங்களும் நடைபெறும் :—

स्वव्यापारं कुरुते यथैकसवितुः प्रकाशेन ।
तद्वच्चराचरमिदं ह्येकात्मसत्तया चलति ॥ १२६ ॥

ஸ்வவ்யாபாரம் குருதே யதைக ஸவிது: ப்ரகாஶேந ।
தத்வச்சராசரமிதம் ஹ்யேகாத்ம ஸத்தயா சலதி ॥

**यथा**-எவ்வாறு, **चराचरं इदं**-ஸ்தாவர ஜங்கமாத்மகமான இந்த உலகம், **एकसवितुः**-ஒரே சூரியனுடைய, **प्रकाशेन**-ஒளியால், **स्वव्यापारं**-தன்னுடைய தொழிலை, **कुरुते**-செய்கின்றதோ, **तद्वत्**-அதுபோலவே, **एकात्मसत्तया**-ஒரே பரமாத்மாவினுடைய ஸத்தையால், **चलति**-(பிரபஞ்சம்) இயங்குகின்றது.

ஒரே சூரியனுடைய ஒளியால் உலகிலுள்ள அனைத்தும் தன். தன் கார்யங்களைச் செய்கிறது அதுபோலவே ஒரே ஒரு பரமாத்மா இருப்பதாலேயே இந்த சராசரப் பிரபஞ்சம் முழுவதும் இயங்குகிறது (126)

(அ) விருத்தமான பல காரியங்கள் ஒன்றிலிருந்து ஏற்படலாம் :—

**येनोदकेन कदलीचम्पकजात्यादयः प्रवर्धन्ते ।**
**मूलकपलाण्डुलशुनास्तेनैवैते विभिन्नरसगन्धाः ॥ १२७ ॥**

யேநோதகேந கதலீ சம்பக ஜாத்யாதய: ப்ரவர்த்தந்தே ।
மூலக பலாண்டு லஶுநாஸ்தேநைவைதே
விபிந்ந ரஸகந்தா: ॥

**येन उदकेन**-எந்த ஜலத்தால், **कदली**-வாழை, **चम्पक**-சண்பகம், **जात्यादयः**-ஜாதி முதலியவைகள், **प्रवर्धन्ते**-வளருகின்றனவோ, **तेनैव**-அந்த ஜலத்தாலேயே, **विभिन्नरसगन्धाः**-வெவ்வேறான ருசி, வாசனைகளுடன்கூடிய, **एते**-இந்த, **मूलक**-முள்ளங்கி, **पलाण्डु**-வெங்காயம், **लशुनाः**-பூண்டு, இவைகளும், **प्रवर्धन्ते**-வளர்கின்றன.

வாழை, சண்பகம், ஜாதி, முல்லை, முள்ளங்கி, வெங்காயம், பூண்டு மற்றுமுள்ள பலவற்றிற்கும் ஒரே விதமான நீர்தான் பாய்கிறது. ஆயினும் அவைகளின் சுவை, வாசனை முதலியன வேறுபட்டிருக்கின்றன. அதுபோலவே ஒரே ஒரு பரம்பொருள்தான் எல்லா ஜீவ ராசிகளுக்குள்ளும் நிறைந்து நிற்கின்றது அவ்வாறு இருப்பினும் அவைகளின் ஸ்வபாவம் வேறுபட்டுள்ளது. (127)

एको हि सूत्रधारः काष्ठप्रकृतीरनेकशो युगपत् ।
स्तम्भाग्रपट्टिकायां नर्तयतीह प्रगूढतया ॥ १२८ ॥

ஏகோ ஹி ஸூத்ரதார: காஷ்ட ப்ரக்ருதீரநேகஶோ யுகபத் ।
ஸ்தம்பாக்ர பட்டிகாயாம் நர்தயதீஹ ப்ரகூடதயா ॥

**एकः**-ஒரே, **सूत्रधारः**-பொம்மலாட்டக்காரன், **प्रगूढतया**-தன்னை மறைத்துவைத்துக்கொண்டு, **स्तम्भाग्रपट्टिकायां**-தூணின்மேல் தொங்கவிடப்பட்டுள்ள பட்டிகையில், **इह**-இங்கு, **युगपत्**-ஒரேசமயத்தில், **काष्ठप्रकृतीः**-மரத்தால் செய்யப்பட்ட பல பொம்மைகளை, **अनेकशः**-பலவாறாக, **नर्तयति हि**-ஆட்டிவைக்கிறான் அல்லவா ?

ஒரே பொம்மலாட்டக்காரன் திரைக்குப் பின்னால் மறைந்து நின்றுகொண்டு நூலைமட்டும் பிடித்துக்கொண்டு பல பொம்மைகளை ஒரே சமயத்தில் பலவாறாக ஆட்டிவைக்கிறான். சூத்ரதாரன் கண்ணுக்குத் தெரிவதில்லை. அதனால் அசேதனமான பொம்மைகளே வெளியில் வந்து ஆடுவது போலத் தோன்றுகின்றன. அதுபோலவே பரமாத்மாவின் ஸம்பந்தத்தால்தான் ஜடமான சரீரங்கள் பற்பல காரியங்களில் ஈடுபடுகின்றன. ஆனாலும் ஆத்மா புலன்களுக்குப் புலப்படாததால் அவைகள் தாமே இயங்குபவனபோல் தோன்றுகின்றன. உண்மையில் பரமாத்மாதான் அனைத்தையும் ஆட்டிவைக்கிறான். (128)

(அ) விலக்ஷணமான பல வஸ்துக்களுக்கு மூல காரணம் ஒன்றுதான் :—

गुडखण्डशर्कराद्या भिन्नाः स्युर्विकृतयो यथैकेक्षोः ।
केयूरकङ्कणाद्या यथैकहेम्नो भिदाश्च पृथक् ॥ १२९ ॥

एवं पृथक्स्वभावं पृथगाकारं पृथग्वृत्ति ।
जगदुच्चावचमुच्चैरेकेनैवात्मना चलति ॥ १३० ॥

குடகண்ட ஶர்கராத்யா பின்நா: ஸ்யுர் விக்ருதயோ
யதைகேக்ஷோ: ।
கேயூர கங்கணாத்யா யதைகஹேம்நோ பிதாஶ்ச ப்ருதக் ॥

ஏவம் ப்ருதக் ஸ்வபாவம் ப்ருதகாகாரம் ப்ருதக் வ்ருத்தி ।
ஜகதுச்சாவசமுச்சைரேகேனைவாத்மநா சலதி ॥

यथा-எவ்வாறு, गुड-வெல்லம், खण्ड-கற்கண்டு, शर्कराद्याः-சர்க்கரை முதலியன, एकेक्षोः-ஒரே கரும்பினுடைய भिन्नाः-வெவ்வேறான, विकृतयः-மாறுபட்ட ரூபங்களாக, स्युः-ஆகுமோ, यथा-எவ்வாறு, केयूर-தோள்வளை, कङ्कणाद्याः-கங்கணம் முதலியவைகள், एकहेम्नः-ஒரே தங்கத்தினுடைய, पृथक्-தனித்தனியான, भिदाः-மாறுபட்ட நகைகளாக, स्युः-ஆகுமோ, एवं-இம்மாதிரியாகவே, पृथक्स्वभावं-தனித்தனியான தன்மை வாய்ந்ததும், पृथगाकारं-தனித்தனியான தோற்றத்தைப் பெற்றதும், पृथग्वृत्ति-தனித்தனியான செயலுள்ளதும், उच्चावचं-மேலும் கீழுமாக உள்ள, जगत्-உலகம், एकेन आत्मना एव-ஒரு பரமாத்மாவினாலேயே, उच्चैः-நன்கு, चलति-இயங்குகின்றது.

ஒரே கரும்பிலிருந்து வெல்லம், கற்கண்டு, சர்க்கரை முதலான வெவ்வேறான காரியங்கள் ஏற்படுவது போலவும் ஒரே தங்கத்திலிருந்து தோள்வளை, காப்பு முதலான வெவ்வேறான உருவமுள்ள பல பொருள்கள் ஏற்படுவது போலவும், ஒரே ஆத்மாவிலிருந்து வெவ்வேறான தன்மை, உருவம், செயல் இவை கொண்டதும் உயர்ந்ததும் தாழ்ந்ததுமான பலவித பிரபஞ்சம் முழுவதும் உண்டாகி இயங்குகிறது. (129–130)

स्कन्धधृतसिद्धमन्नं यावन्नाश्नाति मार्गगस्तावत् ।
स्पर्शभयक्षुत्पीडे तस्मिन्भुक्ते न ते भवतः ॥ १३१ ॥

ஸ்கந்த த்ருத ஸித்தமன்னம் யாவந்நாஶ்நாதி
மார்ககஸ்தாவத் ।
ஸ்பர்ஶ பய க்ஷுத்பீடே தஸ்மின் புக்தே ந தே பவத: ॥

**मार्गगः**-வழிப்போக்கன், **यावत्**-எதுவரையில், **स्कन्धधृत**-தோளில் சுமந்துகொண்டிருக்கிற, **सिद्धमन्नं**- கட்டுச் சோற்றை, **न अश्नाति**-சாப்பிடவில்லையோ, **तावत्**-அது வரையில், **स्पर्शभयक्षुत्पीडे**-பிறர் தொடுவதில் பயம் பசிப்பிணி இவை உண்டாகின்றன. **तस्मिन् भुक्ते**-அது சாப்பிடப் பட்டவுடன், **ते**-அவைகள், **न भवतः**-உண்டாகிறதில்லை.

வழிப்போக்கன் வழிச்சாப்பாட்டுக்காகச் சோற்று மூட்டையைத் தோளில் சுமந்துசெல்கிறான். அதன் பாரத்தால் அவன் துன்புறுகிறான். கீழே வைத்தால் யாராவது தீண்டிவிடுவார்களோ, அல்லது எடுத்துச் சென்றுவிடுவார்களோ என்ற பயம். வழியில் செல்லச் செல்ல பசித் துன்பம் வேறு. அந்த உணவு தன்னைக் காட்டிலும் வேறாக இருக்கும்வரை இவ்வளவு துன்பமும் உண்டு. இந்த உணவைச் சாப்பிட்டுவிட்டால் அதன் பாரம் தெரிவதில்லை. பிறர் எடுத்துச்செல்வார்களோ என்ற பயமும் இல்லை. பசியும் நீங்கிவிடுகிறது. அந்த உணவு தன்னைக்காட்டிலும் வேறாக இருக்கும்வரை துன்பம்தான். தன்னுடன் ஒன்றாகக் கலந்துவிட்டால் துன்பம் இல்லை. 'उदरमन्तरं कुरुते अथ तस्य भयं भवति' இதுபோல பரமாத்மாவை வேறாகத் தெரிந்துகொண்டிருக்கும்வரை துன்பம் உண்டு. இதை மாற்றித் தன் ஸ்வரூபமாகத் தெரிந்துகொண்டால் துன்பம் இல்லை. (131)

**मानुषमतङ्गमहिषश्वसूकरादिष्वनुस्यूतम् ।**
**यः पश्यति जगदीशं स एव भुंक्तेऽद्वयानन्दम् ॥ १३२ ॥**

*மானுஷ மதங்க மஹிஷஶ்வ ஸூகராதிஷ்வனுஸ்யூதம் ।*
*ய: பஶ்யதி ஜகதீஶம் ஸ ஏவ புங்க்தேऽத்வயாநந்தம் ॥*

**मानुष**–மனிதன், **मतङ्ग**-யானை, **महिष**–எருமை, **श्व**-நாய், **सूकरादिषु**–பன்றி முதலியவற்றில், **अनुस्यूतं**–வியாபித்துக் கொண்டிருக்கும், **जगदीशं**-பரமேச்வரனை, **यः**–எவன், **पश्यति**–தெரிந்துகொள்கிறானோ, **स एव**–அவனே, **अद्वयानन्दम्**–ஒப்பற்ற பேரானந்தத்தை, **भुङ्क्ते**–அனுபவிக்கிறான்.

பரமாத்மா ஒருவன்தான் உலகின் கண் விளங்கும் எல்லா ஜீவராசிகளுக்குள்ளும் நிறைந்திருக்கிறன். மனிதன் யானை, எருமை, நாய், பன்றி முதலான எல்லா சரீரங்களுக் குள்ளும் அந்த பரமாத்மா வியாபித்துக் கொண்டிருக்கிறது. அவனேதான் நான் என்று எவன் தெரிந்துகொள்கிருனே அவன் துன்பத்தைக் கடந்து ஒப்பற்ற நித்யமான பேரானந் தத்தை அனுபவிக்கிருன். (132)

# ११. कर्तृत्वभोक्तृत्वप्रकरणम् ॥

(அ) உண்மையில் ஆத்மா அகர்த்தா, அபோக்தா என்பதை விளக்குகிருர் :—

यद्वत्सूर्येऽभ्युदिते स्वव्यवहारं जनः कुरुते ।
तं न करोति विवस्वान्न कारयति तद्वदात्मापि ॥ १३३ ॥

## 11. கர்த்ருத்வபோக்த்ருத்வ ப்ரகரணம்

யத்வத் ஸூர்யேऽப்யுதிதே ஸ்வவ்யவஹாரம் ஜநः குருதே ।
தம் ந கரோதி விவஸ்வான் ந காரயதி தத்வதாத்மாऽபி ॥

**यद्वत्**–எவ்வாறு, **सूर्ये अभ्युदिते**–சூரியன் உதித்தவுடன், **जनः**–மனிதன், **स्वव्यवहारं**–தன்னுடைய வேலையை, **कुरुते**–செய்கிருனே, **विवस्वान्**–கதிரவன், **तं**–அதை, **न करोति**–செய்கிறதில்லையோ, **न कारयति**–செய்விப்பதும் இல்லையோ, **तद्वत्**–அவ்வாறே, **आत्मा अपि**–ஆத்மாவும் (ஒரு வேலையையும் செய்வதுமில்லை, செய்விப்பதுமில்லை).

சூரியன் உதித்தவுடன் மக்கள் எல்லோரும் தங்கள் தங்களுடைய வேலைகளில் ஈடுபடுகிருர்கள் ஆனால் சூரியன் அவர்களுடைய வேலைகளைச் செய்வதில்லை. அவர்களை அவ்வாறு செய்யும்படி அவன் தூண்டுவதுமில்லை. அவன் ஸாக்ஷியாகத்தான் இருக்கிருன். அதுபோலவே ஆத்மாவும் ஒன்றையும் செய்வதும் இல்லை, செய்விப்பதுமில்லை ஸாக்ஷி

யாக மட்டுமிருக்கிறார். அதனாலேயே உலகில் எல்லாக் காரியங்களும் நடைபெறுகின்றன. **साक्षी चेता केवलो निर्गुणश्च** ' *(133)*

**लोहे हुतभुग्व्याप्ते लोहान्तरताड्यमानेऽपि ।**
**तस्यान्तर्गतवह्नेः किं स्यान्निर्घातजं दुःखम् ॥ १३४ ॥**

*லோஹே ஹுதபுக் வ்யாப்தே லோஹாந்தர தாட்யமாநே஽பி ।*
*தஸ்யாந்தர்கத வஹ்நே: கிம் ஸ்யாத் நிர்காதஜம் துக்கம் ॥*

**हुतभुग्व्याप्ते**–*தீயினால் வியாபிக்கப்பட்ட*, **लोहे**–*இரும்பு*, **लोहान्तरताड्यमाने अपि**–*மற்றொரு இரும்பினால் அடிக்கப் பட்டாலும்கூட*, **तस्य**–*அதனுடைய*, **अन्तर्गत**–*உள்ளே இருக் கின்ற*, **वह्नेः**–*நெருப்பிற்கு*, **निर्घातजं**–*அடிப்பதால் உண்டான*, **दुःखं**–*துன்பம்*, **स्यात् किम्** –*ஏற்படுமா என்ன ?*

*இரும்பு நன்றாக நெருப்பில் பழுக்கப் பழுக்கக் காய்ச்சப் படுகின்றது. பிறகு அது செம்மட்டியினால் அடிக்கப்படு கின்றது. அப்பொழுது அதனுள்ளிருக்கும் நெருப்பிற்கு செம்மட்டியின் அடியால் துன்பம் ஏற்படுகிறதா ? இல்லை அல்லவா !* **(134)**

**निष्ठुरकुठारघातैः काष्ठे संछेद्यमानेऽपि ।**
**अन्तर्वर्ती वह्निः किं घातैश्छेद्यते तद्वत् ॥ १३५ ॥**

**तनुसम्बन्धाज्जातैः सुखदुःखैर्लिप्यते नात्मा ।**
**ब्रूते श्रुतिरपि भूयोऽनश्नन्नन्योऽभिचाकशीत्यादि ॥ १३६ ॥**

*நிஷ்டுர குடார காதை: காஷ்டே ஸஞ்சேத்யமாநே஽பி ।*
*அந்தர்வர்த்தீ வஹ்நி: கிம் காதைஶ்சேத்யதே தத்வத் ॥*

*தநுஸம்பந்தாத் ஜாதை: ஸுகதுக்கைர் லிப்யதே நாத்மா ।*
*ப்ரூதே ஶ்ருதிரபி பூயோ஽நஶ்நந்நந்யோ஽பிசாகஶீத்யாதி ॥*

निष्ठुर-கூர்மையான, कुठार-கோடாரியின், घातैः-அடிகளால், काष्ठे संछेद्यमाने अपि-கட்டை துண்டு துண்டாக வெட்டப்பட்டபோதிலும், अन्तर्वर्ती-அதற்குள் இருக்கும், वह्निः-நெருப்பு, घातैः-அடிகளால், छेद्यते किम्-வெட்டப் படுகிறதா என்ன ?

तद्वत्-அதுபோலவே, तनुसंबन्धात्-உடலின் சேர்க்கையால், जातैः-உண்டான, सुखदुःखैः-இன்பதுன்பங்களால், आत्मा-ஆத்மாவானது, न लिप्यते-பூசப்படுவதில்லை. अन्यः-மற்ெருருவன், अनश्नन्-சாப்பிடாமலேயே, अभिचाकशीति விளங்குகிருன், आदिः-இதுமுதலான, श्रुतिरपि-வேதமும், भूयः-திரும்பித்திரும்பி, ब्रूते-இதைச் சொல்கிறது.

கூர்மையான கோடாரியால் மரக்கட்டையை வெட்டும் பொழுது கட்டைக்குள் இருக்கும் நெருப்பு வெட்டப்படுவதில்லை. இதுபோலவே சரீரத்தின் ஸம்பந்தத்தால் ஏற்படும் இன்ப துன்பங்கள் ஆத்மாவினிடம் ஒட்டுவதில்லை. "ஆத்மா ஒன்றையும் சாப்பிடாமலேயே (அனுபவிக்காமலேயே) ஆனந்தமாக விளங்குகிருன்" என்று முண்டகோபநிஷத்தும் மற்றும் பல சுருதிகளும் இவ்விஷயத்தைக் கூறுகிறது.

निशि वेश्मनि प्रदीपे दीप्यति चौरस्तु वित्तमपहरति ।
ईरयति वारयति वा तं दीपः किं तथाऽऽत्माऽपि ॥ १३७ ॥

நிஶி வேஶ்மநி ப்ரதீபே தீப்யதி சௌரஸ்து வித்தமபஹரதி ।
ஈரயதி வாரயதி வா தம் தீப: கிம் ததாऽऽத்மாऽபி ॥

निशि-இரவில், वेश्मनि-வீட்டில், प्रदीपे दीप्यति-விளக்கு பிரகாசித்துகொண்டிருக்கும்பொழுது, चौरः तु-திருடனே வெனில், वित्तं-பணத்தை, अपहरति-திருடிச்செல்கிருன். दीपः-விளக்கு, तं-அவனை, किं ईरयति-தூண்டுகின்றதா, वा-அல்லது, वारयति-தடுக்கின்றதா ? तथा-அதுபோலவே, आत्मा अपि-ஆத்மாவும்.

வீட்டில் விளக்கு எரிந்துகொண்டிருக்கையிலேயே எல்லோரும் தூங்கும்பொழுது நள்ளிரவில் திருடன் அவ் வீட்டிற்குள் புகுந்து செல்வமனைத்தையும் கொள்ளை கொண்டு சென்று விடுகிறான். அங்குள்ள விளக்கு அக் கள்வனைக் கொள்ளையிடும்படி தூண்டவுமில்லை அவ்வாறு செய்வதிலிருந்து அவனைத் தடுக்கவுமில்லை அந்த விளக்கு அக்கள்வனுடைய செயலில் ஸம்பந்தமற்று விளங்கிக் கொண்டிருக்கிறது. அதுபோலவே ஆத்மா தானாகவே பிரகாசித்துக் கொண்டிருக்கும் பொழுதுதான் இந்த சரீரம், இந்திரியம், மனம், பிராணன் இவை எல்லாம் தம் தம் வேலைகளைச் செய்கின்றன. இவைகளின் காரியங் களிலேயோ, இவற்றிலிருந்து ஏற்படும் பலனிலேயோ ஆத்மாவுக்குச் சிறிதும் ஸம்பந்தம் கிடையாது. (137)

**गेहान्ते दैववशात्कस्मिंश्चित्समुदिते विपन्ने वा ।**
**दीपस्तुष्यत्यथवा खिद्यति किं तद्वदात्माऽपि ॥ १३८ ॥**

கேஹாந்தே தைவவஶாத் கஸ்மிம்ஶ்சித்
ஸமுதிதே விபந்நே வா ।
தீபஸ்துஷ்யத்யதவா கித்யதி கிம் தத்வதாத்மாऽபி ॥

**गेहान्ते**-வீட்டிற்குள், **दैववशात्**-தெய்வச் செயலால், **कस्मिंश्चित् समुदिते**-ஒருவன் பிறந்தாலோ, **वा**-அல்லது, **विपन्ने**-இறந்தாலோ, **दीपः**-விளக்கு, **किं तुष्यति**-இன்ப மடைகிறதா ? **अथवा**-அல்லது, **खिद्यति**-துன்பமடைகிறதா ? **तद्वत्**-அதுபோலவே, **आत्मा अपि**-ஆத்மாவும்.

ஒரு வீட்டிற்குள் தெய்வச்செயலால் ஒரு குழந்தை பிறப்பதால் மற்றவர்போல அங்குள்ள விளக்கு களியுறுவது மில்லை. அல்லது துரத்ருஷ்டவசமாக ஒருவன் இறப்பதால் அவ்விளக்கு துயரமடைவதும் இல்லை. அதுபோலவே சரீராதிகளுக்கு நன்மை ஏற்பட்டாலும் தீமை ஏற்பட்டாலும் அதனால் ஆத்மாவுக்கு இன்பமோ, துன்பமோ கிடையாது.

# १२. स्वप्रकाशताप्रकरणम् ॥

ஆத்மா ஸ்வயம்ப்ரகாசவஸ்து என்பதை இப் பிரகரணத்தில் விளக்குகிறார் :—

रविचन्द्रवह्निदीपप्रमुखाः स्वपरप्रकाशाः स्युः ।
यद्यपि तथाप्यमीभिः प्रकाश्यते क्वापि नैवात्मा ॥ १३९ ॥

## 12. ஸ்வப்ரகாசதா ப்ரகரணம்

ரவி சந்த்ர வஹ்நி தீப ப்ரமுகா: ஸ்வபர ப்ரகாஶா: ஸ்யு: ।
யத்யபி ததாப்யமீபி: ப்ரகாஶ்யதே க்வாபி நைவாத்மா ॥

रवि-சூரியன், चन्द्र-சந்திரன், वह्नि-நெருப்பு, दीप-விளக்கு, प्रमुखाः-முதலிய ஒளிவாய்ந்தவைகள், स्वपरप्रकाशाः-தங்களையும் மற்ற பொருள்களையும் பிரகாசப்படுத்தும் தன்மை உள்ளவைகளாக, स्युः यद्यपि तथापि-இருந்த போதிலும், अमीभिः-அவைகளால், क्वापि-ஒரு இடத்திலும், आत्मा-ஆத்மா, नैव प्रकाश्यते-பிரகாசப்படுத்தப்படுவதே இல்லை.

உலகில் சூரியன், சந்திரன், அக்னி, விளக்கு முதலியன ஒளியுள்ள பொருள்கள். இவை தாங்களும் பிரகாசித்துக் கொண்டு மற்றப் பொருள்களையும் பிரகாசிக்கும்படி செய்கின்றன. அவ்வாறு இருந்தும் இவைகளில் ஒன்ருவது ஆத்மாவை விளங்கச் செய்வதில்லை. (139)

चक्षुर्द्वारैव स्यात्परात्मना भानमेतेषाम् ।
यद्वा तेऽपि पदार्था न ज्ञायन्तेऽथ केवलालोकात् ॥ १४० ॥

तत्राप्यक्षिद्वारा सहायभूतो न चेदात्मा ।
नो चेत्सत्यालोके पश्यत्यन्धः कथं नार्थान् ॥ १४१ ॥

सत्यात्मन्यपि किं नो ज्ञानं तच्चेन्द्रियान्तरेण स्यात् ।
अन्धे दृक्प्रतिबन्धे करसम्बन्धे पदार्थभानं हि ॥ १४२ ॥

சக்ஷுர்த்வாரைவ ஸ்யாத் பராத்மநா பாநமேதேஷாம் ।
யத்வா தேபி பதார்த்தா ந ஞாயந்தேZத கேவலாலோகாத் ॥

தத்ராப்யக்ஷித்வாரா ஸஹாய பூதோ ந சேதாத்மா ।
நோ சேத் ஸத்யாலோகே பஶ்யத்யந்த: கதம் நார்த்தான் ॥

ஸத்யாத்மந்யபி கிம் நோ ஞானம்
தச்சேந்த்ரியாந்தரேண ஸ்யாத் ।
அந்தே த்ருக் ப்ரதிபந்தே கர ஸம்பந்தே
பதார்த்த பானம் ஹி ॥

**यद्वा**–அல்லது, **एतेषां**–இந்த ஸூரியன் முதலியவை களுக்கும், **चक्षुर्द्वारा**–கண்மூலமாக, **परात्मनैव**–பரமாத்மா விணுலேதான், **भानं**–பிரகாசம், **स्यात्**–ஏற்படும். **तत्रापि**–அங்கும், **अक्षिद्वारा**–கண்வழியாக, **आत्मा**–ஆத்மவஸ்து, **सहायभूतः**–உதவியாக, **न चेत्**–இல்லாவிடில், **केवलालोकात्**–வெளிச்சத்தால் மட்டும், **ते पदार्था अपि**–அந்த பிறவஸ்துக் களும், **न ज्ञायन्ते**–அறியப்படுவதில்லை. **नो चेत्**–இப்படி யில்லாவிடில், **आलोके सति**–வெளிச்சம் இருக்கும்பொழுது, **अन्धः**–குருடன், **अर्थान्**–பொருள்களை, **कथं न पश्यति**–ஏன் அறிந்துகொள்கிறதில்லை. **आत्मनि सत्यपि**–ஆத்மா இருந்தா லும், **किं नो ज्ञानम्**–ஞானம் ஏன் ஏற்படுவதில்லை? **तच्च**–அந்த ஞானம் **इन्द्रियान्तरेण**–வேறு இந்திரியத்தால், **स्यात्**–ஏற்படும். **अन्धे**–குருடனிடம், **दृक्प्रतिबन्धे**–பார்வை மறைந்தபோதிலும், **करसंबन्धे**–கையின் சேர்க்கை இருக்கும்பொழுது, **पदार्थभानं हि**–பொருள்கள் விளங்குவதில்லையா?

சூரியன் முதலியவைகள் தானும் பிரகாசித்துக் கொண்டு மற்றப் பொருள்களையும் பிரகாசப்படுத்துவதாக முன் சுலோகத்தில் சொன்னேம் ஆனுல் நன்கு சிந்தித்துப் பார்த்தால் சூரியன் முதலியவைகளையும் கண்வழியாக ஆத்மாதான் பிரகாசப்படுத்துவதாகத் தெரிகிறது. அப்

படியே கண் மூலமாக ஆத்மா ஸஹாயமாக இல்லாவிடில் கேவலம் வெளிச்சத்தால் மட்டும் மற்றப் பொருள்களும் அறியப்படுவதில்லை. இப்படியில்லாமல் ஒளிப் பொருள்களின் வெளிச்சத்தாலேயே அவை அறியப்படுவதாகக் கூறினால் நடுப் பகலில் சூரியப்ரகாசம் இருக்கும் பொழுது குருடன் ஏன் எல்லாப் பொருள்களையும் அறிந்து கொள்வதில்லை? ஆத்மா இருந்தால் கண் இல்லாவிட்டாலும் மற்ற இந்திரியங்களால் ஞானம் ஏற்படலாம். குருடனுக்குக் கண் இல்லாவிட்டாலும் கையால் தொட்டுப் பொருள்களை அறிந்துகொள்வதில்லையா? ஆகவே சூரியன் முதலான ஒளிப் பொருள்களையும், ஒளியில்லாப் பொருள்களையும் ஆத்மாதான் பிரகாசப்படுத்துகிறது. அது ஒன்றாலும் பிரகாசிக்கப்படுவதில்லை ஆகையால் ஆத்மா ஸ்வயம்ப்ரகாச வஸ்து. (140-142)

जानाति येन सर्वं केन च तं वा विजानीयात् ।
इत्युपनिषदामुक्तिर्बुध्यत आत्माऽत्मना तस्मात् ॥ १४३ ॥

ஜாநாதி யேந ஸர்வம் கேந ச தம் வா விஜாநீயாத் ।
இத்யுபநிஷதாமுக்திர் புத்யத ஆத்மாऽத்மநா தஸ்மாத் ॥

**येन**-எந்த ஆத்மாவினால், **सर्वं**-எல்லாவற்றையும், **जानाति**-அறிந்துகொள்கிறானோ, **तं**-அந்த ஆத்மாவை, **केन वा**-எதனால்தான், **विजानीयात्**-அறிந்து கொள்வான்? **इति**-என்று, **उपनिषदां**-உபநிஷத்துக்களின், **उक्तिः**-வசனம். **तस्मात्**-ஆகையால், **आत्मा**-ஆத்மா, **आत्मना**-ஆத்மாவினாலேயே, **बुध्यते**-அறிந்துகொள்ளப்படுகிறது.

**'येनेदं सर्वं विजानाति तं केन विजानीयात्'** (4-5-15) (எதனால் எல்லாவற்றையும் அறிந்துகொள்கிறானோ, அந்த ஆத்மாவை அறிந்துகொள்வதற்கு வேறு என்ன இருக்கிறது? ஒன்றுமில்லையல்லவா?) என்று பிருஹதாரண்யக உபநிஷத் கூறுகிறது. அதனால் ஆத்மா தானாகவே விளங்குகின்றது என்று கூறவேண்டும். (143)

## १३. नादानुसन्धानप्रकरणम् ॥

(அ) மனம் அடங்குவதற்கு உபாயமான நாதாநுஸந்தானத்தை இதில் கூறுகிறார் :—

यावत्क्षणं क्षणार्धं स्वरूपपरिचिन्तनं क्रियते ।
तावद्दक्षिणकर्णे त्वनाहतः श्रूयते शब्दः ॥ १४४ ॥

## 13. நாதாநுஸந்தான ப்ரகரணம்

யாவத் க்ஷணம் க்ஷணார்த்தம் ஸ்வரூப பரிசிந்தநம் க்ரியதே ।
தாவத் தக்ஷிண கர்ணே த்வநாஹத: ஶ்ரூயதே ஶப்த: ॥

**यावत्**–எப்பொழுது, **क्षणं**–ஒருகணம் அல்லது, **क्षणार्धं**-அரைக்கணமாவது, **स्वरूपपरिचिन्तनं**-ஆத்மஸ்வரூபத்தின் தியானம் **क्रियते**-செய்யப்படுகின்றதோ, **तावत्**-அப்பொழுது **दक्षिणकर्णे**-வலது காதில், **अनाहतः शब्दः**–அநாஹதம் என்ற ஒலியானது, **श्रूयते**–கேட்கப்படுகிறது.

கொஞ்சநேரமாவது ஆத்மதத்வத்தை இடைவிடாது தியானித்துக்கொண்டிருந்தால், அப்பொழுது வலது காதில் ஓர் ஒலி கேட்கும். உலகில் இருபொருள்கள் உராய்வதால் ஒலி உண்டாகிறது. அது ஆஹதம். இதுவோ அப்படி அல்லாமல் தானுகவே உண்டாவதால் இதற்கு அநாஹதம் என்று பெயர். (144)

सिद्ध्यारम्भस्थिरताविश्रमविश्वासबीजशुद्धीनाम् ।
उपलक्षणं हि मनसः परमं नादानुसन्धानम् ॥ १४५ ॥

ஸித்த்யாரம்ப ஸ்திரதா விஶ்ரம விஶ்வாஸ பீஜ ஶுத்தீநாம் ।
உபலக்ஷணம் ஹி மனஸ: பரமம் நாதாநுஸந்தானம் ॥

**सिद्ध्यारम्भ**–கார்யஸித்தியில் முயற்சி, **स्थिरता**-சலனமின்மை, **विश्रम**–ஓய்வு, **विश्वास**–நம்பிக்கை, **बीजशुद्धीनाम्**–

பீஜசுத்தி இவைகளுக்கு, **मनसः**-மனதின், **परमं**-சிறந்த, **नादानुसन्धानं**-ஒலியின் அ னு ஸ ந் தா ன ம், **उपलक्षणं हि**-உபலக்ஷணமாகும்.

வலது காதில் தானுகவே உண்டாகும் அநாஹத நாதத்தை அனுஸந்தானம் செய்பவன் பின்வருபவற்றையும் கைக்கொள்ள வேண்டும். காரியம் நிறைவேறுவதற்கு வேண்டிய முயற்சி செய்யவேண்டும். சாஞ்சல்யம் கூடாது. வெளி ப்ரவிருத்தியில் வேகம் கூடாது. நம்பிக்கையும், உள்ளும் புறமும் தூய்மையும் இருக்கவேண்டும். இவை இருந்தால்தான் நாதானுஸந்தானத்தால் சித்தலயம் ஏற்படும். (145)

भेरीमृदंगशंखाद्याहतनादे मनः क्षणं रमते ।
किं पुनरनाहतेऽस्मिन्मधुमधुरेऽखण्डिते स्वच्छे ॥ १४६ ॥

பேரீ ம்ருதங்க ஶங்காத்யாஹத நாதே மன: க்ஷணம் ரமதே ।
கிம் புநரநாஹதேऽஸ்மின் மது மதுரேऽகண்டிதே ஸ்வச்சே ॥

**भेरी**-பேரிகை, **मृदङ्ग**-மிருதங்கம், **शंखादि**-சங்கம் முதலியவற்றின், **आहतनादे**-செயற்கை ஒலியில், **मनः**-மனம், **क्षणं**-சிறிதுநேரம், **रमते**-சந்தோஷமடைகிறது. **अस्मिन्**-இந்த, **मधुमधुरे**-மிகவும் இனிமையானதும், **अखण्डिते**-இடைவிடாமல் தொடர்ந்து வருவதும், **स्वच्छे**-தூயதுமான, **अनाहते**-இயற்கையான ஒலியில், **किं पुनः**-கேட்பானேன்?

பேரிகையைக் கொட்டுவதாலும், மிருதங்கத்தை வாசிப்பதாலும், சங்கை ஊதுவதாலும், அவைகளிலிருந்து நாதம் கிளம்புகிறது. அது ஆஹதம். அதாவது செயற்கையால் உண்டாகிறது. அந்நாதம் தூய்மை வாய்ந்தது அல்ல. அது எப்பொழுதும் இனிமை வாய்ந்ததுமல்ல. அது எப்பொழுதும் தொடர்ச்சியாகக் கேட்காது. வாத்யங்கள் வாசிக்கப்படும் வரையில்தான் அது கேட்கும். அவ்வாறு இருப்பினும் அவ்வொலியால் மனம் சிறிது நேரமாவது மகிழ்ச்சியடைவதில்லையா! இந்த அனாஹத நாதமோ

வெனில் மிகவும் மதுரமானது. தூய்மை வாய்ந்தது. இடைவிடாமல் எப்பொழுதும் கேட்டுக்கொண்டே இருக்கின்றது. இப்படிப்பட்ட இந்த இயற்கை ஒலியால் மனம் ஏன் ஆனந்தத்தையடையாது? (146)

**चित्तं विषयोपरमाद्यथा यथा याति नैश्चल्यम् ।**
**वेणोरिव दीर्घतरस्तथा तथा श्रूयते नादः ॥ १४७ ॥**

சித்தம் விஷயோபரமாத் யதா யதா யாதி நைச்சல்யம் ।
வேணோரிவ தீர்கதரஸ் ததா ததா ஶ்ரூயதே நாதः ॥

**चित्तं**-மனது, **विषयोपरमात्**-விஷயப்பற்றுகளிலிருந்து விலகுவதால், **यथा यथा**-எவ்வளவுக்கெவ்வளவு, **नैश्चल्यं**-அசைவற்ற தன்மையை, **याति**-அடைகிறதோ, **तथा तथा**-அவ்வளவுக்கவ்வளவு, **वेणोः इव**-குழலின் (நாதம்போல), **दीर्घतरः**-மிகவும் நீண்டதான, **नादः**-ஒலி, **श्रूयते**-கேட்கப்படுகிறது.

மனம் பொருள்களை நாடிச் செல்லும்பொழுது அது மிகுந்த சஞ்சலத்தையடைகிறது. விஷயப் பற்றுகளால் மனம் கலங்கிவிடுகின்றது. அப்படிப்பட்ட நேரத்தில் அனுஹத நாதம் கேட்கப்படுவதில்லை. ஆனால் மனம் விஷயங்களிலிருந்து விலக விலக அது மிகவும் தெளிந்து தூய்மை பெறுகிறது. அவ்வமயம் இந்த ஒலி குழலின் இன்னிசைபோல் நீடித்துக் கேட்கப்படுகின்றது. மனதில் சாஞ்சல்யம் குறையக் குறைய அநாஹத நாதமும் தொடர்ந்து கேட்கப்படுகிறது. (147)

**नादाभ्यन्तर्वर्ति ज्योतिर्यद्वर्तते हि चिरम् ।**
**तत्र मनो लीनं चेन्न पुनः संसारबन्धाय ॥ १४८ ॥**

நாதாப்யந்தர்வர்த்தி ஜ்யோதிர் யத் வர்த்ததே ஹி சிரம் ।
தத்ர மனோ லீனம் சேந்ந புனஸ் ஸம்ஸாரபந்தாய ॥

**नादाभ्यन्तर्वर्ति**-அனுஹதமான அந்த ஒலியினுள், **यत् ज्योतिः**-யாதொரு ஒளி, **वर्तते**-இருக்கின்றதோ, **तत्र**-அந்த

ஜ்யோதியில், मनः-மனம், चिरं-நீண்டநேரம், लीनं चेत्-ஒன்று பட்டிருக்குமாகில், पुनः-மறுபடியும், संसारबन्धाय-அது ஸம்ஸாரத்தில் கட்டுப்படுவதற்காக, न-இல்லை.

அந்த அனாஹதமான ஒலியினுள் ஓர் சிறந்த ஒளி விளங்கிக் கொண்டிருக்கிறது. எப்பொழுதும் மனம் அதிலேயே ஈடுபட்டு ஒன்றிவிடுமாகில் அவனுக்கு ஸம்ஸாரபந்தம் நீங்கிவிடுகிறது. பிறப்பு இறப்பு அற்ற பேரின்ப நிலையை அடைகிறான். (148)

परमानन्दानुभवात्सुचिरं नादानुसन्धानात् ।
श्रेष्ठश्चित्तलयोऽयं सत्स्वन्यलयेष्वनेकेषु ॥ १४९ ॥

பரமானந்தானுபவாத் ஸுசிரம் நாதானுஸந்தானாத் ।
ஶ்ரேஷ்டஶ்சித்தலயோऽயம் ஸத்ஸ்வந்யலயேஷ்
வநேகேஷு ॥

अनेकेषु-பல, अन्यलयेषु-மற்ற லயங்கள், सत्सु-இருந்த போதிலும், सुचिरं-வெகுகாலம், नादानुसन्धानात्-அநாஹத நாதத்தை அனுஸந்தானம் செய்வதால் (ஏற்படும்), अयं-இந்த, चित्तलयः-மனோலயம், परमानन्दानुभवात्-பேரின்பத்தை அனுபவிப்பதால், श्रेष्ठः-மிகவும் சிறந்தது.

மனம் ஒன்றிலும் செல்லாமல் அடங்குவதற்குப் பற்பல உபாயங்கள் உள்ளன. அவற்றைக் கைக் கொண்டாலும் மனோலயம் ஏற்படும். ஆனால் அவற்றைச் செய்யும்பொழுது பல துன்பங்கள் ஏற்படலாம். இந்த அநாஹத நாதத்தை அநுஸந்தானம் செய்யும்பொழுதும், பின்னும் அவ்வா றில்லாமல் மிகுந்த ஆனந்தம் ஏற்படுகிறது. ஆதலால் பிற உபாயங்களால் ஏற்படும் சித்தலயத்தைக்காட்டிலும் அநாஹத நாதானுஸந்தானத்தால் உண்டாகும் சித்தலயம் மிகவும் சிறந்தது. (149)

# १४. मनोलयप्रकरणम् ॥

(அ) உபாயமான நாதானுஸந்தானத்தைக் கூறிவிட்டு அதன் பலமான மனோலயத்தைக் கூறுகிறார் :—

संसारतापतप्तं नानायोनिभ्रमात्परिश्रान्तम् ।
लब्ध्वा परमानन्दं न चलति चेतः कदा क्वापि ॥ १५० ॥

## 14. மனோலய ப்ரகரணம்

ஸம்ஸார தாப தப்தம் நாநா யோனி ப்ரமாத் பரிஶ்ராந்தம் ।
லப்த்வா பரமாநந்தம் ந சலதி சேத: கதா க்வாபி ॥

**संसारतापतप्तं**-ஸம்ஸாரத்திலுள்ள துன்பங்களால் தாபத்தை அனுபவித்தும், **नानायोनिभ्रमात्**-பற்பல யோனிகளில் பிறந்து சுற்றுவதால், **परिश्रान्तं**-மிகவும் களைப்படைந்ததுமான, **चेतः**-மனம், **परमानन्दं**-பேரானந்தத்தை **लब्ध्वा**-அடைந்து, **क्वापि**-ஒரு இடத்திலும், **कदापि**-ஒருபொழுதும், **न चलति**-அசைகிறதில்லை.

மனம் ஸம்ஸாரத்திலுள்ள பற்பல துன்பங்களால் மிகுந்த தாபத்தை அடைகின்றது. மேலும் அஃது பற்பல ஜாதிகளில் பிறவியுற்றுக் களைத்துப்போய்விடுகின்றது. இந்த மனம் எப்பொழுது ஆத்மானுஸந்தானத்தில் ஈடுபட்டுப் பேரானந்தத்தை அனுபவிக்கின்றதோ அப்பொழுது அஃது ஒரு இடத்திலும் ஒருபொழுதும் அதிலிருந்து வழுவாமல் அதிலேயே நிலைத்து நின்றுவிடுகின்றது (150)

अद्वैतानन्दभरात्किमिदं कोऽहं च कस्याहम् ।
इति मन्थरतां यातं यदा तदा मूर्छितं चेतः ॥ १५१ ॥

அத்வைதாநந்தபராத் கிமிதம் கோऽஹம் ச கஸ்யாஹம் ।
இதி மந்தரதாம் யாதம் யதா ததா மூர்ச்சிதம் சேத: ॥

**यदा**-எப்பொழுது, **चेतः**-மனம், **अद्वैतानन्दभरात्**-வேற்றுமையற்ற பேரானந்த மிகுதியால், **इदं**-இது, **किम्**-

என்ன ? कः अहम्-நான் யார், अहं कस्य-நான் யாருடையவன் इति च-என்பதிலும், मन्थरतां यातं-மந்தமான தன்மையை அடைகிறதோ, तदा-அப்பொழுது, मूर्छितम्-மூர்ச்சை அடைந்துவிடுகிறது.

அப்பொழுது அஃது அப்பேரானந்தத்தின் மிகுதியால் மூர்ச்சையடைந்ததுபோலாகிவிடுகின்றது. அதனால் அதற்கு இது என்ன? நான் யார்? நான் யாரைச் சேர்ந்தவன்? இதுமுதலான உலக அறிவே ஏற்படுவதில்லை. (151)

चिरतरमात्मानुभवादात्माकारं प्रजायते चेतः ।
सरिदिव सागरयाता समुद्रभावं प्रयात्युच्चैः ॥ १५२ ॥

சிரதரமாத்மானுபவாதாத்மாகாரம் ப்ரஜாயதே சேதः ।
ஸரிதிவ ஸாகரயாதா ஸமுத்ரபாவம் ப்ரயாத்யுச்சை: ॥

सागरयाता-ஸமுத்ரத்தில் கலந்த, सरित्-ஆறு, उच्चैः-நன்கு, समुद्रभावं-ஸமுத்திரத்தின் தன்மையை, प्रयाति इव-அடைகிறதுபோல, चेतः-மனம், चिरतरं-நீண்ட காலம், आत्मानुभवात्-ஆத்மானுஸந்தானம் செய்வதால், आत्माकारं-ஆத்மஸ்வரூபமாகவே, प्रजायते-ஆகிவிடுகின்றது.

நதி ஸமுத்திரத்தில் போய்க் கலந்துவிட்டால் அதுவும் ஸமுத்ரமாகவே ஆகிவிடுகின்றது. பிறகு அதை அச் சமுத்திரத்திலிருந்து பிரிக்கமுடியாது. அதுபோலவே நீண்டகாலம் செய்த ஆத்மானுஸந்தானத்தால் பரமாத்மாவினிடத்தில் நிலைபெற்ற சித்தமும் அப்பரம்பொருளாகவே ஆகிவிடுகின்றது. (152)

आत्मन्यनुप्रविष्टं चित्तं नापेक्षते पुनर्विषयान् ।
क्षीरादुद्धृतमाज्यं यथा पुनः क्षीरतां न यातीह ॥ १५३ ॥

ஆத்மந்யனுப்ரவிஷ்டம் சித்தம் நாபேக்ஷதே புனர் விஷயான்।
க்ஷீராதுத்த்ருதமாஜ்யம் யதா புன: க்ஷீரதாம் ந யாதீஹ ॥

इह-இங்கு, यथा-எவ்வாறு, क्षीरात्-பாலிலிருந்து, उद्धृतं-எடுக்கப்பட்ட, आज्यं-நெய், पुनः-மறுபடியும், क्षीरतां-பாலின் தன்மையை, न याति-அடைகிறதில்லையோ, तथा-அவ்வாறே, आत्मनि-பரமாத்மாவினிடத்தில், अनुप्रविष्टं-புகுந்த, चित्तं-மனம், पुनः-மறுபடியும், विषयान्-மற்ற பொருள்களை न अपेक्षते-விரும்புகிறதில்லை.

பாலிலிருந்து எடுக்கப்பட்ட நெய் பிறகு பாலாக மாறுகிறதில்லை. அவ்வாறே பரமாத்மாவினிடத்தில் நுழைந்த மனம் மற்றப் பொருள்களை நாடிச் செல்கிறதில்லை. (153)

दृष्टौ द्रष्टरि दृश्ये यदनुस्यूतं च भानमात्रं स्यात् ।
तत्रोपक्षीणं चेच्चित्तं तन्मूर्च्छितं भवति ॥ १५४ ॥

த்ருஷ்டௌ த்ரஷ்டரி த்ருஶ்யே யதனுஸ்யூதம் ச
பானமாத்ரம் ஸ்யாத் ।
தத்ரோபக்ஷீணம் சேத் சித்தம் தன்மூர்ச்சிதம் பவதி ॥

दृष्टौ-பார்வையிலும், द्रष्टरि-பார்க்கின்றவனிடத்திலும், दृश्ये-பார்க்கப்படும் பொருளிலும், यत्-எந்த, भानमात्रं-சைதன்யம் ஒன்றே, अनुस्यूतं-தொடர்ந்து, स्यात्-இருக்குமோ तत्र-அந்த சுத்த சைதன்யத்தில், चित्तं-மனம், उपक्षीणं चेत्-அடங்கிவிடுமாகில், तत्-அது, मूर्छितं भवति-மூர்ச்சையடைந்ததாக ஆகிறது.

ஒரு பொருளைப் பார்க்கும் பொழுது அப்பொருளின் அறிவு நமக்கு உண்டாகிறது. இதில் அறிவு, அறிகின்றவன் அறியப்படும் பொருள் என்று மூன்று தத்வங்கள் உள்ளன. இவைகளுக்கு திரிபுடீ என்று பெயர். இம் மூன்றிலும் பரமாத்மா ஒருவனே தொடர்ந்து நிற்கிறான் அந்தப் பரம் பொருளிடம் மனம் லயித்துவிட்டால் த்ரிபுடீ மறைந்துவிடும். அப்பொழுது மனம் தன்னையே மறந்து ஒன்றிலும் செயல்படாமல் மூர்ச்சை அடைந்தது போல் ஆய்விடுகிறது. (154)

याति स्वसंमुखत्वं दृङ्मात्रं वा यदा तदा भवति ।
दृश्यद्रष्टृविभेदो ह्यसंमुखेऽस्मिन्न तद्भवति ॥ १५५ ॥

யாதி ஸ்வஸம்முகத்வம் த்ருங்மாத்ரம் வா யதா ததா பவதி |
த்ருஶ்ய த்ரஷ்ட்ரு விபேதோ ஹ்யஸம்முகேऽஸ்மிந் ந
தத் பவ்தி ||

यदा–எப்பொழுது, स्वसंमुखत्वं-(மனம்) ஆத்மாவை நோக்கியிருக்கும் தன்மையை, याति–அடைகிறதோ, तदा–அப்பொழுது, दृङ्मात्रं–சைதன்யருபமாகமட்டும், भवति–இருக்கிறது. अस्मिन्–இந்த மனம், असंमुखे–ஆத்மாவை நோக்கியில்லாமலிருந்தால், दृश्यद्रष्टृविभेदः–அறியப்படும் பொருள், அறிகிறவன் இந்த வேற்றுமை ஏற்படுகிறது. तत्–(அப்பொழுது) த்ருங்மாத்ரமாக, न भवति–இருக்கிறதில்லை.

மனம் வெளியில் செல்லாமல் உள்ளே ஆத்மாவை நோக்கிச் செல்லுமானுல் அப்பொழுது அறிவு ஒன்றுதான் இருக்கும். அறிகிறவன், அறியப்படும் பொருள் இந்த வேற்றுமை மறைந்துவிடும். இப்படியில்லாமல் மனம் வெளியில் செல்லுமானுல் அப்பொழுது எல்லாவேற்றுமையும் தோன்றும். (155)

एकस्मिन्दृङ्मात्रे त्रेधा द्रष्ट्रादिकं हि समुदेति ।
त्रिविधे तस्मिल्लीने दृङ्मात्रं शिष्यते पश्चात् ॥ १५६ ॥

ஏகஸ்மிந் த்ருங்மாத்ரே த்ரேதா த்ரஷ்ட்ராதிகம் ஹி
ஸமுதேதி |
த்ரிவிதே தஸ்மின் லீனே த்ருங்மாத்ரம் ஶிஷ்யதே பஶ்சாத் ||

एकस्मिन् दृङ्मात्रे–த்ருக் என்ற ஒரே பொருளில்தான் त्रेधा–மூன்ருக, द्रष्ट्रादिकं–பார்க்கின்றவன் முதலியது, समुदेति हि–தோன்றுகின்றதல்லவா ? त्रिविधे–அந்த மூன்று விதமும், तस्मिन् लीने–அதற்குள் ஒடுங்கிவிட்டால், पश्चात्–பிறகு, दृङ्मात्रं–த்ருக் என்பது மட்டும், शिष्यते–மிஞ்சுகிறது.

ஆகையால் த்ருக் என்ற ஒரே பொருளில்தான் பார்க்கிறவன், பார்க்கப்படும் பொருள், பார்வை என்ற மூன்றுவித வேற்றுமைகளும் தோன்றுகின்றன. அந்த வேற்றுமை நீங்கிவிட்டால் பிறகு த்ருக்கு மட்டும் நிலைக்கின்றது. (156)

दर्पणतः प्राक्पश्चादस्ति मुखं प्रतिमुखं तदा भाति ।
आदर्शेपि च नष्टे मुखमस्ति मुखे तथैवात्मा ॥ १५७ ॥

தர்ப்பணத: ப்ராக் பஶ்சாதஸ்தி முகம் ப்ரதிமுகம் ததா பாதி।
ஆதர்ஶேऽபி ச நஷ்டே முகமஸ்தி முகே ததைவாத்மா ॥

**दर्पणत**:–கண்ணுடிக்கு, **प्राक्**–முன்னுல், **मुखं अस्ति**–முகம் இருக்குமானுல், **तदा**–அப்பொழுது, **पश्चात्**–கண்ணுடிக்குள், **प्रतिमुखं**–பிரதிபிம்பம், **भाति**–விளங்குகிறது. **आदर्शेऽपि नष्टे**–கண்ணுடியும் மறைந்துவிட்டால், **मुखं**–முகம், **मुखे**–முகத்திலேயே, **अस्ति**–இருக்கிறது. **तथैव**–அதுபோலவே, **आत्मा च**–ஆத்மாவும்.

ஒருவன் கண்ணுடிக்குமுன் நின்றுகொண்டு கண்ணுடியைப் பார்த்தால் அப்பொழுது அவனுடைய முகம் அதில் பிரதிபலிக்கிறது. அப்பொழுது கண்ணுடி, முகம், பிரதிபிம்பம் என்று மூன்று பொருள்கள் காணப்படுகின்றன. ஆனுல் கண்ணுடியை எடுத்துவிட்டால் பிரதி பிம்பம் போய்விடுகிறது. பின்னர் முகம் ஒன்றுதான் நிலைக்கிறது. அதுபோலவே ஆத்ம சைதன்யம் மனதில் பிரதிபிம்பிக்கும்பொழுது ஜீவன் என்ற பெயரை அடைகிறது. எல்லா வியவஹாரங்களும் ஏற்படுகின்றன. மனம் அடங்கிவிட்டால் ஜீவன் இல்லை த்வைத வியவஹாரம் ஒன்றும் இல்லை. ஆத்மா ஒன்றுதான் பிரகாசிக்கும். (157)

## १५. प्रबोधप्रकरणम् ॥

(அ) வேற்றுமைத்தோற்றம் நீங்குவதற்கு உபாயமான மனேலயத்தைக் கூறிவிட்டு, மனம் அடங்கப்பெற்ற ஞானிகளின் ஆத்மானுபவத்தைக் கூறுகிறுர் :—

माधुर्यं गुडपिण्डे यत्तत्तस्यांशकेऽणुमात्रेऽपि ।
एवं न पृथग्भावो गुडत्वमधुरत्वयोरस्ति ॥ १५८ ॥

## 15. ப்ரபோதப்ரகரணம்

மாதுர்யம் குட பிண்டே யத்தத்
தஸ்யாம்ஶகேऽணுமாத்ரேऽபி ।
ஏவம் ந ப்ருதக்பாவோ குடத்வ மதுரத்வயோரஸ்தி ॥

**गुडपिण्डे**-வெல்லக்கட்டியில், **यत्**-எந்த, **माधुर्यं**-இனிப்பு உண்டோ, **तत्**-அது, **तस्य**-அதனுடைய, **अणुमात्रे**-மிகச் சிறியதான, **अंशके अपि**-பாகத்திலும் கூட, (**अस्ति**-இருக்கிறது..) **एवं**-இவ்வாறு, **गुडत्व**-வெல்லத்தின் தன்மை, **मधुरत्वयोः**-இனிப்பு இவைகளுக்கு, **पृथग्भावः**-வேற்றுமை, **न अस्ति**-இல்லை.

வெல்லக்கட்டியிலுள்ள இனிப்பு அதனுடைய ஒவ்வொரு அணுவிலும் இருக்கிறது. ஆகவே வெல்லத்தினுடைய தன்மைக்கும் இனிப்பிற்கும் யாதொரு வேற்றுமையும் கிடையாது. வெல்லமும் இனிப்பும் ஒன்றேதான். *(158)*

अथवा न भिन्नभावः कर्पूरामोदयोरेवम् ।
आत्मस्वरूपमनसां पुंसां जगदात्मतां याति ॥ १५९ ॥

அதவா ந பின்ன பாவ: கற்பூராமோதயோரேவம் ।
ஆத்மஸ்வரூப மனஸாம் பும்ஸாம் ஜகதாத்மதாம் யாதி ॥

**अथवा**-அல்லது, **कर्पूरामोदयोः**-கற்பூரம், அதனுடைய நறுமணம் இவ்விரண்டிற்கும், **भिन्नभावः**-வேறுபட்ட நிலை, **न**-இல்லை. **एवं**-இம்மாதிரியாகவே, **आत्मस्वरूपमनसां**-ஆத்மாவினிடத்திலேயே ஒன்றிய மனதுடைய, **पुंसां**-மனிதர்களுக்கு **जगत्**-உலகம், **आत्मतां**-ஆத்மாவின் தன்மையை, **याति**-அடைகிறது.

கற்பூரத்திற்கு இயற்கையான நறுமணம் உண்டு. அந்த நல்ல வாசனையை அதைவிட்டுப் பிரிக்கமுடியாது. அதுபோலவே ஆத்மாவினிடம் மனம் ஒன்றிவிட்டால் பிறகு உலகம் முழுவதும் ஆத்மாவாக ஆகிவிடுகிறது அவர்களுக்கு எங்கும் ஆத்மவஸ்துதான் தோன்றும். வேருன பிரபஞ்சம் தோன்ருது. (159)

यद्भावानुभवः स्यान्निद्रादौ जागरस्यान्ते ।
अन्तः स चेत्स्थिरः स्याल्लभते हि तदाऽद्वयानन्दम् ॥ १६० ॥

யத்பாவானுபவ: ஸ்யாந்நித்ராதௌ ஜாகரஸ்யாந்தே ।
அந்த: ஸ சேத் ஸ்திர: ஸ்யாத் லபதே ஹி
ததாऽத்வயாநந்தம் ॥

**जागरस्यान्ते**–ஜாக்ரதவஸ்தையின் முடிவில், **निद्रादौ**–தூக்கத்தின் ஆரம்பத்தில், **यद्भावानुभवः**–எந்த வஸ்துவின் அனுபவம், **स्यात्** -ஏற்படுமோ, **सः**-அது, **अन्तः**-அகத்திற்குள் **स्थिरः स्यात् चेत्** –நிலைத்திருக்குமாகில், **तदा**–அப்பொழுது, **अद्वयानन्दं**–நிகரற்ற ஆனந்தத்தை, **लभते हि**–அடைகிருன் அல்லவா ?

ஜாக்ரதவஸ்தை நீங்கிவிட்டால் வெளித்தோற்றம் எல்லாம் மறைந்துவிடும். ஆனுலும் தூக்கம் வந்து விட்டால் ஸ்வப்னத்தில் பல வேற்றுமைகள் தோன்றும். ஜாக்ரதவஸ்தைக்கும் தூக்கத்திற்கும் நடுவில் நான் என்ற தோற்றம் மட்டுமே இருக்கும். வேறு தோற்றமே ஏற்படாமல் இதுவே நிலைத்திருக்குமானல் அப்பொழுது அத்வைதானந்தத்தை அவன் அனுபவிப்பான். (160)

अतिगम्भीरेऽपारे ज्ञानचिदानन्दसागरे स्फारे ।
कर्मसमीरणतरला जीवतरङ्गावलिः स्फुरति ॥ १६१ ॥

அதிகம்பீரேऽபாரே ஞான சிதாநந்த ஸாகரே ஸ்பாரே ।
கர்மஸமீரண தரளா ஜீவ தரங்காவளி: ஸ்புரதி ॥

**अतिगम्भीरे**–மிகவும் ஆழமானதும், **अपारे**–எல்லையற்றதும், **स्फारे**-பெரியதுமான, **ज्ञानचिदानन्दसागरे**-ஸச்சிதானந்தமாகிய ஸமுத்திரத்தில், **कर्मसमीरणतरला**– வினையாகிய காற்றினால் அசைகின்ற, **जीवतरङ्गावलिः**–ஜீவர்கள் என்ற அலைகளின் கூட்டம், **स्फुरति**-தோன்றுகின்றது.

ஆழமறிய முடியாததும் கரைகாண முடியாததும் மிகப்பெரியதுமான கடலில் காற்று அடிப்பதால் அலைகளின் கூட்டம் கிளம்புகின்றது. அதுபோலவே எவ்விதத்திலும் அறியமுடியாததும் எல்லையற்றதும் எங்கும் நிறைந்துள்ளதுமான ஞானானந்தஸ்வரூபமான பரமாத்மாவிடமிருந்து வினைகளின் கூட்டமாகிய காற்றினால் தூண்டப்பெற்று ஜீவர்களாகிய அலைகளின் திரள் கிளம்புகிறது. (161)

**खरतरकरैः प्रदीप्तेऽभ्युदिते चैतन्यतिग्मांशौ ।**
**स्फुरति मृषैव समन्तादनेकविधजीवमृगतृष्णा ॥ १६२ ॥**

கரதர கரை: ப்ரதீப்தேऽப்யுதிதே சைதன்ய திக்மாம்சௌ ।
ஸ்புரதி ம்ருஷைவ ஸமந்தாதநேகவித ஜீவ ம்ருகத்ருஷ்ணா ॥

**चैतन्यतिग्मांशौ**–சைதன்யம் என்ற சூரியன், **अभ्युदिते**–கிளம்பி, **खरतरकरैः**–மிகவும் கடுமையான கிரணங்களால், **प्रदीप्ते**-கொளுத்தும்பொழுது, **मृषैव**-பொய்யாகவே, **समन्तात्**–எல்லாப் பக்கங்களிலும், **अनेकविध**–பலவிதமான, **जीवमृगतृष्णा**–ஜீவர்களாகிய கானல் நீர், **स्फुरति**-தோன்றுகிறது.

கதிரவன் உதித்துக் கடுமையாகக் காயும்பொழுது கானல்நீர் தோன்றுகின்றது அது உண்மையானது அல்ல. அதுபோலவே பரமாத்ம சைதன்யம் மாயாவிலாஸத்துடன் உல்லாஸமாக எங்கும் விளங்குகையில் எண்ணற்ற ஜீவராசிகள் சுற்றிலும் தோன்றுகின்றன. ஆனால் அவைகள் கானல்நீர்போல் மித்யாபூதமானவைகளே. (162)

**अन्तरदृष्टे यस्मिञ्जगदिदमारात्परिस्फुरति ।**
**दृष्टे यस्मिन्सकृदपि विलीयते क्वाप्यसद्रूपम् ॥ १६३ ॥**

அந்தரத்ருஷ்டே யஸ்மிஞ்ஜகதிதமாராத் பரிஸ்புரதி ।
த்ருஷ்டே யஸ்மிந் ஸக்ருதபி விலீயதே க்வாப்யஸத்ரூபம் ॥

**यस्मिन्**-எந்தப் பரமாத்மஸ்வரூபம், **अन्तः**-அகத்திற்குள் **अदृष्टे**-காணப்படாமலிருக்கும்பொழுது, **इदं जगत्**-இந்த உலகம், **आरात्**-அருகில், **परिस्फुरति**-தோன்றுகின்றதோ, **यस्मिन्**-எந்த பரமாத்மா, **सकृदपि**-ஒரு தடவையாவது, **दृष्टे**-காணப்பட்டவுடன், **असद्रूपं**-மாயையாகிய இந்த உலகம், **क्वापि**-எங்கோ, **विलीयते**-மறைந்து விடுகிறதோ.

அந்தப்பரமாத்மஸ்வரூபம் அகத்திற்குள்ளேயே ஞானக் கண்ணினுல் காணப்படாவிடில் இந்த உலகம் பலவாருகத் தோன்றுகிறது. ஆனுல் ஒரு தடவையாவது அப்பரமாத்ம ஸ்வரூபம் அகத்துக்குள் காணப்பட்டால் அஸத்தான இந்த உலகம் மறைந்துவிடுகிறது. எங்கும் பரமாத்மாவே விளங்குகிறது. (163)

बाह्याभ्यन्तरपूर्णः परमानन्दार्णवे निमग्नो यः ।
चिरमाप्लुत इव कलशो महाह्रदे जह्नुतनयायाः ॥ १६४ ॥

பாஹ்யாப்யந்தர பூர்ண: பரமானந்தார்ணவே நிமக்னோ ய: ।
சிரமாப்லுத இவ கலஶோ மஹாஹ்ரதே ஜஹ்னு தனயாயா: ॥

**यः**-எவன் ஒருவன், **परमानन्दार्णवे**-பரமானந்தமாகிய ஸமுத்திரத்தில் **निमग्नः**-மூழ்கியிருக்கிருனே, **सः**-அவன், **जह्नुतनयायाः**-கங்கையின், **महाह्रदे**-பெரிய மடுவில், **चिरं**-வெகுகாலம், **आप्लुतः**-மூழ்கிய, **कलशः इव**-குடம்போல, **बाह्याभ्यन्तरपूर्णः**-உள்ளும் வெளியும் நிறைந்தவனுக, **भवति**-ஆகிருன்.

எவன் ஒருவன் பரமானந்த ஸமுத்ரத்தில் மூழ்குகிருனே அவன் கங்கையிலுள்ள பெரிய மடுவில் மூழ்கிக்கிடக்கும் ஜலம் நிறைந்த குடம்போல் உள்ளும் வெளியும் ஆனந்தம் நிறைந்தவனுக இருக்கிருன். (164)

पूर्णात्पूर्णतरे परात्परतरेऽप्यज्ञातपारे हरौ
संवित्स्फारसुधार्णवे विरहिते वीचीतरङ्गादिभिः ।
भास्वत्कोटिविकासितोज्ज्वलदिगाकाशप्रकाशे परे
स्वानन्दैकरसे निमग्नमनसां न त्वं न चाहं जगत् ॥

பூர்ணாத் பூர்ணதரே பராத் பரதரேப்யக்ஞாத பாரே ஹரௌ
ஸம்வித் ஸ்பார ஸுதார்ணவே விரஹிதே வீசீ தரங்காதிபி: ।
பாஸ்வத் கோடி விகாஸிதோஜ்வல திகாகாஶ ப்ரகாஶே பரே
ஸ்வாநந்தைகரஸே நிமக்ந மனஸாம் ந த்வம் ந சாஹம் ஜகத் ॥

**पूर्णात्**—நிறைந்த பொருளைக்காட்டிலும், **पूर्णतरे**—மிகவும் நிறைந்தவராயும், **परादपि**—மேலான பொருளைக்காட்டிலும், **परतरे**—மிகவும் சிறந்தவராயும், **अज्ञातपारे**—அறியப்படாத எல்லையை உடையவராயும், **वीचीतरङ्गादिभिः विरहिते**—அலைக் கூட்டங்களற்றவரும், **संवित्स्फारसुधार्णवे**—ஞானமாகிய பெரிய அமிருதக்கடலாகவும், **भास्वत्कोटि**—கோடிக்கணக்கான சூரியன்களால், **विकासित**—விளங்கும்படி செய்யப்பட்டு, **उज्ज्वल**—மிகவும் ஜ்வலிக்கின்ற, **दिगाकाशप्रकाशे**—திசைகள் ஆகாயம் முதலியவற்றின் ஒளியை உடையவராகவும், **स्वानन्दैकरसे**—ஆத்மானந்தத்தையே ஒரே ரஸமாக உடையவரும், **परे**—சிறந்தவராகவும் விளங்குகின்ற, **हरौ**—விஷ்ணுவினிடத்தில், **निमग्नमनसां**—மூழ்கிய மனதையுடையவர்களுக்கு, **त्वं**-நீ, **न**-இல்லை. **अहं**-நான், **जगत् च**—மற்ற உலகம் என்பதும் **न**—இல்லை.

விஷ்ணு நிறைந்த மற்ற எல்லாவற்றைக் காட்டிலும் மிகவும் நிறைந்தவர். அவர் சிறந்ததான எல்லாப் பொருள்களைக் காட்டிலும் சிறந்தவர். அவர் எல்லையற்றவர். அவர் அமைதியுற்று விளங்கும் ஞானக்கடல். ஏக காலத்தில் கோடிக் கணக்கான சூரியன்கள் கிளம்பி திசைகளையும் ஆகாசத்தையும் பிரகாசப்படுத்துவதுபோல

அவ்வளவு ஒளியுடன் அவர் உலகை விளங்கவைக்கிருர். ஆத்மானந்தம்தான் அவர் ஸ்வரூபம். அவ்வாறு விளங்கும் ஹரியினிடத்தில் சென்று லயித்த மனமுள்ளவர்களுக்கு நான், நீ, மற்ற உலகம் இவ்வாருன வேற்றுமை ஒன்றும் தோன்றுவதில்லை. (165)



॥ श्रीः ॥

# ॥ श्लोकानुक्रमणिका ॥

